# லட்ச ரூபாய் ஆடை!



**கோ**யில்களில் அம்மனுக்கு சந்தனக்காப்பு, விபூதி அலங்காரம் செய்வது வழக்கம்தான்! பணக்காப்பு சாத்தி பார்த்திருக்கிறீர்களா? சமீபத்தில் ஈரோடு கோட்டை பத்ரகாளியம்மன் கோவிலில், நவராத்திரி விழாவையொட்டி, ஒரு லட்ச ரூபாய் நோட்டுகளால் சொர்ண லட்சுமி அலங்காரம் செய்திருந்தார்கள்.

காண கண் 'கோடி' வேண்டும்.

— இரா. திலீப்
திருச்சி–14.

**மேஷம்:** உள்ளாட்சித் தேர்தல்ல ஜெயிச்ச கட்சி மாதிரி 'வெற்றி வெற்றி'ன்னு நீங்களும் ஊர்வலம் போகலாம். உங்க திட்டங்கள், எண்ணங்கள் வெற்றியடையப் போகுது. போட்டி, பந்தயம், வழக்கு விவகாரங்கள்ல வெற்றி வந்து சேரும். எழுத்து, பத்திரிகை, கணிதம், சிற்பம், ஓவியம் துறைகளைச் சேர்ந்தவர்களுக்கு வெற்றி வாய்ப்புக் கூடப் போகுது. கிரகப் பலன்கள் நமக்குச் சாதகமா இருக்குங்கறதுக்காக 'தாம் தூம்'னு ஆடாதீங்க. எதிலேயும் அவசரம் வேண்டாம். கொடுக்கல் வாங்கல்ல எச்சரிக்கை அவசியம்.



**ரிஷபம்:** குடும்பத்துல 'டும் டும்டும்' சப்தம் கேட்க வாய்ப்பிருக்கு. மனகல உற்சாகமும், குதூகலமும் கரை புரளும். தாக்குதல் விஷயத்துல அமெரிக்காவை ஆதரிக்கற மற்ற நாடுகள் மாதிரி உங்களுக்கும் அக்கம் பக்கத்தில இருக்கறவங்க ஆதரவு பெருகும். அரசியல்வாதிகள் செல்வாக்கு, மதிப்பெல்லாம் ஜிவ்வுனு ஏறப் போகுது. விற்பனை பிரதிநிதிகள், ஏஜெண்ட்டுகள் ஆகியோர்களுக்கெல்லாம் பலன்கள் படையெடுக்கப் போகுது. கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்கு, புகழ் பாராட்டு அதிகரிக்கும். திடீர் அதிர்ஷ்ட வாய்ப்புகள் வந்து சேரும். அதுக்காக லாட்டரிக் கடையில போய் நிக்காதீங்க.



**மிதுனம்:** அட, இது உங்க வாரம்! அழகு பளிச்சிடும். உங்க புத்திசாலித்தனம் பார்த்து மத்தவங்க மூக்கு மேலே கை வைக்கப் போறாங்க. கணிதம், எழுத்து, பத்திரிகை, ஓவியத்துறைகளைச் சேர்ந்தவங்களுக்கு, நன்மையோ நன்மை. உடல் நலத்துலயும் கொஞ்சம் கவனம் வையுங்க. கொடுக்கல் வாங்கல் விவகாரத்துல பயணம் போறதைத் தள்ளிப் போடுங்க. மின்சாரம், ஆயுதங்களைப் பயன்படுத்தும்போது கவனம் அவசியம். எதையோ நெனைச்சிட்டு எதையோ செய்ய வேண்டாம். நிதானம் ரொம்ப ரொம்ப அவசியம்.



**அக்னிசர்மா பக்கம்**

**அக்டோபர் 31 முதல் நவம்பர் 6 வரை**

**கடகம்:** கிரக பலம் கூடியிருக்கறதால உங்கள் உழைப்பும் திறமையும் வீண் போகாது. நினைச்சதை முடிப்பீங்க. மத்தவங்க ஆச்சர்யப்படற மாதிரியான துணிச்சலான காரியங்கள்ல ஈடுபடப் போறீங்க. பொது நலப் பணிகள்ல இருக்கறவங்களுக்கு, பாராட்டு குவியும். எஃகு, இரும்பு, எண்ணெய் வகையறா லாபம் கொட்டும். பார்ட்னர்ஷிப்ல பிஸினஸ் பண்றவங்களுக்கு வளர்ச்சி இருக்கு. உடல் நலன்ல கவனம் தேவை. இந்த வாரம் மருத்துவ செலவுக்கு வழி இருக்கு. அதனால உடல் நலத்தைக் கவனமா பார்த்துக்குங்க. சிலருக்கு டிரான்ஸ்பர், பதவி உயர்வு கிடைக்கலாம். பண விஷயத்துல உஷாருங்கோ உஷாரு!



**சிம்மம்:** கிரகங்கள் ஒண்ணு சேர்ந்து உங்களை ஆசிர்வதிக்கறதால திறமை, அறிவாற்றல் வெளிப்படப் போகுது. பேச்சில் இனிமை கூடப் போகுது. நீங்களே ஆச்சர்யப்படப் போறீங்க. குடும்பத்துல மகிழ்ச்சி பரதம் ஆடும். அரசியல்வாதிகள் அதிகமா வாயை விட வேண்டாம். அடக்கி வாசித்தல் நலம். கலைத்துறையைச் சேர்ந்தவங்களுக்கு வெற்றி வாய்ப்பு கூடப் போகுது. கோர்ட் விவகாரங்கள், போட்டிப் பந்தயங்கள்ல வெற்றி வரும். வெளிநாட்டுல இருந்து நல்ல செய்தி வரப் போகுது.



**கன்னி:** இந்த வாரம் முக்கியமான காரியங்கள் நடக்கப் போகுது. முக்கியமானவங்க தொடர்பு பயன்படும். வெளிநாட்டுல இருந்து ஆந்த்ராக்ஸ் இல்லாம நல்ல செய்தி வரும். பிஸினஸ் பண்றவங்க முழு அக்கறையோட ஈடுபடணும். ஏற்றுமதி-இறக்குமதி பொருட்கள் லாபம் கொண்டு வரப் போகுது. பொருளாதார நிலை



# நடக்குமென்பார்; நடக்கும்!

ஏறி இறங்கி இருக்கும். கொடுக்கல், வாங்கல் விவகாரத்துல எச்சரிக்கை! எச்சரிக்கை! குடும்ப விவகாரத்துக்காக செலவு செய்ய வேண்டி வரும். அரசியல்வாதிகளுக்கு நேரம் சரியில்லை. 'கம்'முனு இருக்கறது நல்லது. வீண் அலைச்சலைத் தவிர்த்திடுங்க.



**துலாம்:** பெரியவங்க ஆசியெல் லாம் உண்டு. மனசுல துணிச்ச லும் தன்னம்பிக்கையும் எக்கச் சக்கமா வரும். குதூகலத்துக்குப் பஞ்சம் இருக்காது. சுபகாரியத்துக் காக செலவுகள் எகிறும். பக்தி மார்க் கத்துக்கு மனசு இழுக்கும். வீடு, மனை, நிலத்தால ஆதாயம் வரும். உடல் நலத்துலேயும் கொஞ்சம் கவனம் வையுங்க. உஷ்ண சம்பந்தமான உபாதைகள் வர வாய்ப்பிருக்கு. உடல் ஆரோக்கியத்துலேயும் கொஞ்சம் கவனம் வையுங்க. பொருளாதார நிலை திருப்தியா இருக்கும். எதிலேயும் நிதானம் அவசியம்,



**விருச்சிகம்:** இதுவரை தவிச்சிட்டிருந்த மனசுல இப்ப தெளிவு பிறக்கும். எந்தக் காரியத் தையும் அமெரிக்க விமான தாக்கு தல் மாதிரி கரெக்டா முடிப்பீங்க. எதிர்ப்புகள் இருக்காது. வழக்கு விவ காரங்கள்ல நல்ல திருப்பம் உண்டாகும். எழுத்து, பத்திரிகை, கணிதத் துறைகளைச் சேர்ந்தவங்களுக்கு நல்ல பலன் உண்டு. கணவன் மனைவிக்குள்ள சண்டை வர வாய்ப்பிருக்கு. விட்டுக் கொடுத்துப் போறது நல்லது. பொருளாதார நிலை இம்சை பண்ணும். பேச்சுல கடுமை வேண்டாம். சிறு சிறு சங்கடங்கள் ஏற்பட சான்ஸ் இருக்கு. அமைதி ஆக்கம் தரும்.



**தனுசு:** இந்த வாரம் பண நடமாட்டத்துக்குப் பஞ்சமில்லை. பல வழிகள்ல இருந்து வரும். ஒரு சில அதிர்ஷ்ட வாய்ப்புகளுக்கும் வழியிருக்கு. அரசியல்வாதிகளுக்கு மதிப்பும், அந்தஸ்தும் உயரப் போகுது. வியாபாரிகளுக்கு வளர்ச்சி ஏறுமுகம். விஞ்ஞா னம், ரசாயனம், ஆராய்ச்சியாளர்களுக் கெல்லாம் நல்ல முன்னேற்றம் உண்டு. வெளி நாட்டுலே இருந்து நல்ல செய்தி வரும். புதிய முயற்சிகள், புதிய துறைகள்ல நுழைய சந்தர்ப் பம் வரப் போகுது. பேச்சில் பதற்றம், கடுமை வேண்டாம். குடும்பத்துல சுபகாரியம் நடக்க வாய்ப்பிருக்கு.



**மகரம்:** உங்க முகத்துல புது தேஜஸ் தெரியப் போகுது. அடிக் கடி கண்ணாடி பார்த்து ஆனந் தப் படுவீங்க. ஏற்றுமதி இறக்குமதி பிஸினஸ் பண்றவங்களுக்கு ஆதா யம் கொட்டும். பத்திரிகை, எழுத்து, கணிதம் ஆகிய துறைகளைச் சேர்ந்தவங்களுக்கு முன் னேற்றம் உண்டு. குடும்பத்துல சுபகாரியங் கள் நடக்க வாய்ப்பிருக்கு. வீடு, மனை, ஆதாயம் கொண்டு வரும். சிலருக்குப் புது வீடு, இடம் வாங்க யோகம் வரும். வீண் வம்பு வழக்குகள்ல இறங்க வேண்டாம். எதிலேயும் பதற்றப்படாதீங்க.



**கும்பம்:** உங்க எண்ணங்கள், திட்டங்கள் அதிக சிரமமில்லாம நிறைவேறும். முக்கியமானவங்க உங்களுக்குப் பக்க பலமா இருக் கப் போறாங்க. பொருளாதார நிலையில அபிவிருத்தி உண்டு. பண நட மாட்டம் சுமார்தான். எதிர்ப்புகள் இருக்காது. பேச்சில திறமையும் கவர்ச்சியும் இருக்கும். இதனால சில ஆதாயங்கள் கிடைக்கும். பார்ட்னர்ஷிப்ல தொழில் பண்றவங்களுக்கு லாபம் இருக்கு. அலைச்சல் அதிகரிக்கும். கூட பிறந்தவங்களால செலவுகள் ஏற்படும்.



**மீனம்:** இதுவரை தள்ளிப் போய்ட்டிருந்த திட்டங்கள், எண்ணங்கள் நிறைவேறும். பண வரவு அதிகரிக்கும். பெரியவங்க, முக்கியமானவங்க தொடர்பால சில நன்மைகள் ஏற்படப் போகுது. திறமையா வெற்றி பெறுவீங்க. பொருளாதார நிலை சீராக இருந்து வரும். அலைச்சல் அதிகரிக்கும். இருந்தாலும் அதற்குரிய பலன் கிடைக்கும். பொறியியல், சட்டம், இராணுவம் போன்ற துறைகளைச் சேர்ந்தவங்களுக்கு வெற்றிக் குவியும். உடல் நலன்ல கவனம் தேவை. வயிறு சம்பந்தமான உபாதைகள் வரலாம். பெண்களுக்கு, சிறு சிறு பிரச்னை கள் வரும். சாமர்த்தியமா சமாளிச்சுடுவீங்க.

**ரிஷப ராசிக்காரரான மாதவனுக்கு உற்சாகம் கரை புரளும்!**



அண்மையில் ஃபேர் அண்ட் லவ்லியும் ஃபெமினாக்காரர்களும் இணைந்து, மும்பையில் நடத்திய 'பிரைடல் வேர்' கண்காட்சியில், ஏழு புகழ் பெற்ற டிசைன்ர்களின் படைப்புகள் இடம் பெற்றன. அவர்களில் ஷைனா, ரீது குமார், இருவரின் கலெக்ஷன்களையும் காண்போமா?

திருமணம் புடைவைகளை எல்லாம் அழகாகத் தைத்து, கட்டுவதற்குத் தயார் நிலையில் வைத்திருப்பதால், கல்யாண சமயத்தில் "இன்னுமா புடைவை கட்டி முடியலை. எத்தனை நேரம்?" என்ற கலாட்டாவுக்கு இடமிருக்காது. ஷைனாவின் கலெக்ஷன்களில், தற்சமயம் குந்தனும், ஜர்தோஷி வேலைப்பாடுகளும்தான் ஃபேவரிட்டுகள். ஸிங்கிள் பீஸ் விலை குறைந்தது இருபத்தையாயிரம். கொஞ்சம் ஹெவி வர்க், அத்துடன் இரண்டு புடைவைகளை இணைத்து உருவாக்கும் ரகங்கள் ஐம்பதாயிரம் ரூபாய் வரை.

பிங்க் அண்ட் ப்ளூ, பர்கண்டி அண்ட் டொமேடோ ரெட் என்று மிக்ஸ் அண்ட் மாட்ச் ரகப் புடைவைகள் அசத்துகின்றன.

"இப்படி இரண்டு வெவ்வேறு கலர்களில் புடைவைகளை இணைத்தால், அதை மணப் பெண்கள் விரும்புவார்களா?" என்றால், "இரண்டென்ன? நான்கு புடைவைகளைக் கூட இணைத்து 24 கஜத்தில் புடைவையை உருவாக்கியுள்ளேன். சில காண்ட்ராஸ்ட் கலர்களில் இருக்கும். பல ஒன்றோடொன்று கலந்து போகும் ஷேடுகளில், மிக மெல்லிய வேலைபாடுகளுடன் இருக்கும். இந்தப் பேஸ்ட்டல் கலர் டிசைனைப் பாருங்கள்" என்று காட்டினார். உண்மைதான் நான்கு புடைவைகளை லாகவமாக இணைத்திருந்தார்.

"ஒன்பது கஜத்தைச் சுற்றிக் கொள்வதற்கே போதும் போதுமென்றகிவிடுகிறதே! இந்த 24 கஜத்தைத் தூக்கிக் கட்டிக் கொண்டால் மணப் பெண் துவண்டு விட மாட்டாளா?"

"தூக்கிப் பாருங்களேன். எவ்வளவு 'லைட்'டாக இருக்கிறது? நான் மென்மையான, இதமான ஃபாப்ரிக்குகளைத்தானே உபயோகிக்கிறேன். இது உடல் எழிலைத்தான் கூட்டும். உடல் எடையை அல்ல. இதை உடுத்திக் கொண்டு, ஒபிராயில் நடந்த ஃபாஷன் ஷோவில், மாடல்கள் 'ராம்ப்பில்' அனாயாசமாக நடந்தார்களே. சாதாரண நடைபயிலும் மணப் பெண்ணுக்கு என்ன கஷ்டம்?" என்கிறார்.

"ஆனால் பயப்படாதீர்கள், 24 கஜமெல்லாம் ஃபாஷன் ஷோ ஃபினாலுக்குத்தான். ஜஸ்ட் ஒரு

# 24 கஜத்தில்

கண்கவர் நாடகம். மற்றபடி 12 கஜங்கள் வரைதான் மாக்ஸிமம் போகும்" என்று அவர் சொல்லிக் கொண்டிருக்கையிலே, ஆஃப் வயிட், க்ரீம்,



பீஜ், நேவி ப்ளூ, அக்வா நிறங்களில் தைக்கப் பட்ட புடைவைகள் வரிசையாக, "என்னைக் கட்டிக் கொள்ளேன்" என்றழைத்தன.

"ஒரு திருமணப் புடைவையை டிசைன் செய்து தயார் செய்ய, குறைந்தது 15 நாட் களாகின்றன. இதற்கெனவே பிரத்யேக தொழிற்சாலையும் வைத்திருக்கிறார். தினமும் அதில் 40 நபர்கள் ஓய்வில்லாமல் உழைப்பதால் ஆர்டர் கொடுத்து, தாம தம் ஆனது என்ற கதையே இல்லை.

இன்னொரு சிறப்பம்சம் : இவரிடம் புடைவை வாங்க வரு பவர்களுக்கு, ஜுவல்லரி அட் வைஸ் இலவசம்! (அட... அவங்க கேட்டாதாங்க.)

புடைவைகளுக்கேற்ப எப்படி அலங்கரித்துக் கொள்வதென்று இவரே புதிய ஐடியாக்களைக் கொடுக்கிறார். எதற்கு எந்த காம்பி னேஷன்களில் நகை அணியலாம். அபபுற மென்ன? மாப்பிள்ளை பார்த்த மறுகணமே பெண்கள் நேராக இவரிடம் வந்து விடு கிறார்களாம். "ஷாப்பிங்குக்கு நீங்களும்கூட வாங்க" என்று அழைக்காததுதான் பாக்கி என்று சிரிக்கிறார் ஷைனா.

ரீது குமார் கடந்த எட்டாண்டுகளாக 'ஃபெமினா மிஸ் இண்டியா'க்களின் சர்வதேசப் போட்டிகளுக்கு நிறைய டிசைன் செய்து கொடுத்திருப்பதால் நமது ஸல்வார் குர்த்தா, புடைவை, லெஹங்கா, சோளி வகையறாக்களை அங்கிங்கெனாதபடி எங்கும் பாப் புலராக்கிய பெருமை பெருமள வில் இவருக்கே உரித்தாகும். தில்லிக்காரரான ரீது குமாரின் உடைகள் மும்பையில் மட்டு மின்றி, மூவுலகிலும் சஞ்சரிப் பதற்குக் காரணம் ஸ்டைல்!

நம் திருமண உடைகளின் பாரம்பரியத்தைப் பற்றி இவர் ஆராய்ச்சியே செய்து வைத் திருக்கிறார். அதை வைத்து லெஹங்கா - சோளி - ஸாரி காம்பினேஷன் களைப் பலப்பல விதங் களில் ஜோடித்து, ஒரு க்ளாசிக்கல் 'டச்'சுடன் ஜரிகை வேலைப்பாடு களைச் செய்து, தனிச் சிறப்புடன் உலவ விட் டிருக்கிறார்.

ஸாஃப்ட் நெட், ஜென் டில் கோல்டு, ப்ளஷ்ஷிங் ரோஸ் என்று இவர் உபயோகிக் கும் நிறங்களின் பெயர்களே ரம்மியமான கவர்ச்சியை உமிழ்ந்

# திருமணப் புடைவை!

தன. இவற்றில் தங்க நூல் இழைகள் இழைந்து, குழைந்து, ஒரு தனி உலகத்தையே சிருஷ்டித்தன.

புடைவைகளின் அகல நீளத்துக்கேற்ப விஸ்தார வேலைப்பாடுகள் அமைந்த பார்டர்கள், தலைப்புகள் - மாங்காய், கோபுரம், நட்சத்திரங்கள், பூக்கள், புள்ளிகள் மேட்சிங் நகைகள் என்று கல்யாண ஆசையைத் தூண்டிவிடுகிறார்.

"எனக்குப் புடைவைமீது தனி மோகம். மறுபடியும் அதை ஃபாஷன் உலகுக்குள் நிலை நிறுத்த வேண்டும் என்ற தாளாத ஆசை. நல்ல வேளை, இப்போதெல்லாம் இளைஞிகளிடமிருந்து, சண்டித்தனம் கொஞ்சம் கொஞ்சமாக விடை பெற்றுக் கொண்டிருக்கிறது. முன்பெல்லாம் கல்யாணப் பெண்கள் நேவி ப்ளூவில் தான் புடைவை வேண்டும் என்று அடம் பிடிப்பார்கள். கருநீலத்துக்கு வெள்ளி ஜரிகைதான் தூக்கலாகத் தெரியுமே தவிர, தங்க ஜரிகை வேலைப்பாடுகள் அவ்வளவாக எடுக்காது. இப்போது மறுபடியும் ஆனியன் பிங்க், பச்சை முதலியன திரும்பியிருக்கின்றன. இதில் நெஞ்சு கொள்ளுமளவுக்கு தங்க ஜரிகைகளால் வேலைப்பாடு செய்து, ஓர் இளவரசியை உருவாக்கி விடலாம்" என்று குழந்தைபோல் ஆர்விக்கிறார் ரீது.

கலப்புத் திருமணங்கள் மலிந்துவிட்ட இந்தக் காலத்தில் முகூர்த்தத்துக்கே டிசைனர் உடைகள், காக்ரா - சோளி - புடைவை வந்தாலும் ஆச்சர்யப்படுவதற்கில்லை.

ரீது குமாரின் பிரைடல்வேரை அணிந்து, ராம்ப்பில் கேட்வாக் செய்த மாடலான நேத்ரா ரகுராமனுக்கு ஒரு சிவப்பு நிறப் புடைவை ரொம்பவும் பிடித்துவிட்டதாம். "வாங்கிவிட்டீர்களா?" என்றால், "இன்னும் அதன் விலையைக் கேட்குமளவுக்குத் தைரியம் பிறக்கவில்லை" என்று சிரிக்கிறார். அவர் நிலையே இப்படி என்றால், அனாவசியமாக எதையாவது எழுதி அதைப் படித்துவிட்டு நீங்கள் மயங்கி.. எதற்கு இந்த வீண் வம்பு? ரீது குமார் புடைவைகள் சென்னைக்கு வரும்போது நேரிலேயே சென்று விசாரித்துக் கொள்ளுங்களேன்.

- ஜெயஸ்ரீ ராஜ்

# உசிலம்பட்டி தங்க மகன்!



மதுரை உசிலம்பட்டியைச் சேர்ந்த தடகள வீரர் சி. திருஞானதுரை, உலக அளவில் சாதனைகளைப் புரிந்து வருகிறார். இருபத்தியேழு வயதாகும் இவர், தற்போது பணிபுரிவது தென்னக ரயில்வே சென்னை அலுவலகத்தில். விளையாட்டுத் துறை சிறப்புச் சலுகை மூலமாக சீனியர் டிக்கெட் கலெக்டர் வேலை கிடைத்துள்ளது.

தேசிய அளவிலான விளையாட்டுப் போட்டிகளில் இந்திய ரயில்வே அணியிலும், தமிழக அணியிலும் பங்கு பெற்று பல பதக்கங்கள் பெற்ற இவர், சிட்னி 2000 ஒலிம்பிக் போட்டியிலும் கலந்து கொண்டிருக்கிறார்.

"விளையாட்டுப் போட்டிகள் நடக்கக் கூடிய காலங்களில் பாட்டியாலாவிலும், பெங்களூரிலும் மத்திய அரசால் நடத்தப்பட்டு வரும் தேசிய முகாமில் தங்கி பயிற்சி பெறுகிறேன். அதற்குத் தேவையான வசதிகள் அனைத்தையும் மத்திய அரசு செய்து தருகிறது. அந்தப் பயிற்சி முடிந்து சென்னைக்குத் திரும்பிய பின் அதே போன்ற பயிற்சி பெறுவதற்கு மிகுந்த சிரமங்களை எதிர்கொள்ள வேண்டியிருக்கிறது" என்கிறார் திருஞானதுரை.

சென்னையில் நண்பர்கள் வீடுகளில் தங்கி, ஓட்டலில் சாப்பிட்டு, தினமும் பத்து கிலோமீட்டர் தூரம் நகரப் பேருந்தில் பயணம் செய்து பயிற்சி மையத்தை அடைந்து விளையாட்டுப் பயிற்சி பெற்று வருகிறார்.

"வெளிநாடுகளில் விளையாட்டு வீரர்களுக்கு என்று 'விளையாட்டு மருத்துவர்' என பயிற்சி பெற்ற மருத்துவர்கள் உண்டு. ஆனால், இந்தச் சிறப்பு வசதி நம் நாட்டில் இல்லை" என வருத்தப் படுகிறார் திருஞானதுரை. அனைத்து நாடுகளுக்கு இடையேயான தடகளப் போட்டிகளில் இதுவரை பன்னிரண்டு பதக்கங்களும், அகில இந்திய தடகளப் போட்டிகளில் இருபத்தைந்து பதக்கங்களும் பெற்றுள்ளார்.

ஆர்வ மேலீட்டால், வெளிநாடுகளில் நடைபெறும் விளையாட்டுப் போட்டிகளில் கலந்து கொள்ளச் செல்லும்போது தமிழக அரசிடமிருந்து எவ்வித நிதியுதவியும் கிட்டாததால் தமது சொந்த செலவிலும், தனியார் நிறுவனங்களின் உதவியுடனும் சென்று வருகிறாராம்.

போலந்து நாட்டில் நடந்த உலக நாடுகளின் ரயில்வே துறை ஒலிம்பிக் போட்டியில் இந்திய ரயில்வே அணி பங்கு பெற்றிருந்தது. 100 மீட்டர் மற்றும் 200 மீட்டர் தடகள ஓட்டப் பந்தயத்தில் தங்கப்பதக்கம் வென்று வந்திருக்கிறார் சி. திருஞானதுரை.

- ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு

NEW GENERATION
NATURAL EXTRACTS
Colours Gently. Safely.

SUNSILK

"முதல் தடவையா?
கவலைப்படாதீங்க, நான் ஸன்ஸில்க் ப்ரோ-கலரை தான் நம்பறேன்."

(ஜாவேத் ஹபிப், ஸன்ஸில்க் ஹேர் எக்ஸ்பர்ட்)



"இப்போது முதல்முறையாக உங்கள் கூந்தலுக்கு நீங்கள் கலர் இடும் போது கூட ஸன்ஸில்க் ப்ரோ-கலர் கொண்டு நீங்கள் [illegible] இருக்கலாம். நான் இதை ஏன் சிபாரிசு செய்கிறேன் என்றால் இது இந்தியர்களின் கூந்தல் மற்றும் சரும தன்மைக்கு ஏற்ப விசேஷமாக வடிவமைக்கப்பட்டுள்ளது. மேலும் இது இயற்கை மூலிகைகளை கொண்டுள்ளது. மென்மையாகவும், பாதுகாப்பாகவும் கலர் இடும் ஏழு மனதைக்கவரும் வண்ணங்களின் கோர்வைகளிலிருந்து தேர்ந்தெடுங்கள். இனி இரண்டாம் முறை யோசிக்க இதில் எதுவுமில்லை!"

NEW Sunsilk
PRO·COLOUR

HTA [illegible] 2001

# திகில் குடிநீர்!

**வி**ருதுநகர் மதுரை செல்லும் சாலையில் சத்திரரெட்டியபட்டி விலக்கு என்னுமிடத்தில் தமிழ்நாடு வீட்டுவசதி வாரியக் குடியிருப்பு வீடுகள் உள்ளன.

இருநூற்றிஎண்பது குடியிருப்புகளில் சுமார் நானூறு குடும்பங்கள் வாழ்ந்து வருகின்றன. இவர்கள் அடிக்கடி வயிற்றுவலி, வாந்தி, வயிற்றுப் போக்கு, சருமவியாதி, சிறுநீரகக் கோளாறு, எலும்புச் சிதைவு நோய் ஏற்பட்டு வேதனையில் சிக்கித் தவிக்கின்றனர். காரணம் குடிநீர்!

இங்கு கிடைக்கும் குடிநீரில் சுண்ணாம்புத் தன்மை அளவுக்கு மீறி அதிகமாக உள்ளது. குறிப்பாக ப்ளோரைடு உப்பின் அளவு மிக அதிகம். இந்த உப்புக்கு விஷத் தன்மை அதிகம் என்றும், இதனால் ப்ளோராசிஸ் போன்ற நோய்கள் தாக்கும் அபாயம் உள்ளதெனவும் மருத்துவர்கள் கூறுகிறார்கள்.



படிப்பில் படு சுட்டியான பதினேழு வயதுப் பையன் கிட்னி கோளாறினால் திடீர் மரணமடைந்த பின்னரே காலனி விழித்துக் கொண்டது.

“நாங்கள் இங்கு குடி வந்து நான்கு ஆண்டுகள் ஆகின்றது. அதிகாரிகள் இந்தக் குடிநீரை எப்படி அங்கீகரித்தார்கள் என்பதே தெரியவில்லை!'' என்கிறார் சுப்புராஜ்.

குடிநீர்ப் பிரச்னையைத் தொகுதி எம்.பியான வைகோவிடம் முறையிட்டுள்ளனர். குடியிருப்பு வாசிகளின் மாற்றுக் குடிநீர்த் திட்டத்திற்கு, தொகுதி வளர்ச்சி நிதியிலிருந்து நான்கு லட்சம் ரூபாய் பெற்றுத் தருவதாக உறுதியளித்துள்ளார் அவர்.

மிதிவண்டிகள் மற்றும் டிவிஎஸ்50களில் குடங்களைக் கட்டிக் கொண்டு உசிலம்பட்டிக்கு ஆலாய்ப் பறந்து செல்கிறார்கள் காலனிவாசிகள். சரி. இதற்குத் தீர்வுதான் என்ன?

“உசிலம்பட்டி, சத்திர ரெட்டியபட்டி ஆகிய கிராமங்களில் இருந்து தண்ணீர் எடுத்து மேல் நிலைத் தொட்டிகளில் சேமித்து எங்களுக்கு விநியோகிக்கலாம். இதற்கு அந்த கிராமத்து மக்களே சம்மதிக்கிறார்கள். இந்தக் காலனிக்கு அடுத்துள்ள தபால்தந்தி காலனிக்கு உசிலம்பட்டியிலிருந்துதான் குடிநீர் சப்ளை ஆகின்றது. அந்தக் குடிநீர்க் குழாய்களை எங்கள் காலனிக்குத் திருப்பி விடலாம். அல்லது சத்திர ரெட்டியபட்டி கண்மாய்க் கரையில் போர்வெல் போட்டு குடிநீர் மேல் தேக்கத் தொட்டியமைத்து குழாய்கள் மூலமாக எங்களுக்கு நல்ல குடிதண்ணீர் சப்ளை செய்யலாம். இதில் ஏதேனும் ஒரு திட்டத்தைச் செயல்படுத்தினால், எங்கள் குடிநீர்ப் பிரச்னை தீர்ந்துவிடும்!'' என்கிறார்கள் வீட்டு வசதி வாரியக் குடியிருப்புப் பொதுமக்கள்.

கட்டுரை, படங்கள்:
**ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**

• கண்ணாம்புப் படலத்தால்









2001 நவம்பர் 4
விஷு ஐப்பசி 18
மலர் : 60
இதழ் : 14

கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



# தேர்தல் நடந்தது; உள்ளாட்சி நடக்குமா?

'அரசியல் வேறுபாடுகளை மறந்து அனைத்து கட்சிகளும் இசைவுடன் இயங்கினால் தான் உள்ளாட்சி அமைப்புகளால் பயன்விளையும்' என்று பொருத்தமான நேரத்தில் ஞாபகப்படுத்தியிருக்கிறார் தி.மு.க.தலைவர் கருணாநிதி.

இந்த நினைவூட்டலும் ஒத்துழைப்பு உத்தரவாதமும் ஆளுங்கட்சியான அ.தி.மு.கவின் தலைமையிடமிருந்து வந்திருக்குமேயானால் வாக்காளர்கள் நம்பிக்கையும் மகிழ்ச்சியும் அடைந்திருப்பார்கள்.

மாறாக, இந்த அம்சத்தில் அ.தி.மு.க. தலைவியின் அழுத்தமான மௌனமே நம்மை வரவேற்கிறது! தமது கட்சி, உள்ளாட்சித் தேர்தலில் அபார வெற்றி பெற்றுள்ளதாகவும் தி.மு.க. தனது கடந்த ஐந்தாண்டு ஆட்சியின் மோசமான நிர்வாகம் காரணமாக உள்ளாட்சித் தேர்தலில் தோற்றிருப்பதாகவும் மட்டுமே அறிவித்திருக்கிறார் ஜெ.

இது உண்மையல்ல என்பது தேர்தல் முடிவுகளைக் காணும்போது தெரிகிறது.

மிருகபல மெஜாரிட்டியுடன் சட்டசபைத் தேர்தலை வென்ற அ.தி.மு.க. அந்த அளவு வெற்றியை இந்தத் தேர்தலில் பெறவில்லை. அதே சமயம், சட்டமன்றத் தேர்தலைக்













காட்டிலும் இத் தேர்தலில் குறிப்பிடும்படியான வெற்றியைப் பெற்றிருக்கிறது தி.மு.க. ஏன், பொதுத் தேர்தலில் காணாமல்போன ம.தி.மு.க.கூட இத்தேர்தலில் கணிசமான வெற்றிகளைப் கண்டிருக்கிறது!

ஆனால் அடுத்த நான்கரை ஆண்டுகளும் அரசாங்கம் அ.தி.மு.க. கையில் இருக்கப் போவதால், தி.மு.க. சார்ந்த உள்ளாட்சித் தலைவர்களுக்கு ஒத்துழைப்பும் நிதியுதவியும் சுலபத்தில் கிடைத்துவிடாது. மறுபுறமாக, அ.தி.மு.க., த.மா.கா. மேயர்கள் பொறுப்பேற்றுள்ள திருநெல்வேலி, திருச்சி மாநகராட்சிகளில் தி.மு.க. கவுன்சிலர்கள் பெரும்பான்மை பெற்றுள்ளன என்பதும் கவனத்துக்குரியது.

நிகர விளைவு...? உள்ளாட்சித் தேர்தல் என்பதாக ஒன்று நடந்த பிற்பாடும் உள்ளாட்சி என்பதே நடைபெறப்போவதில்லை. இதை மனத்தில் கொண்டுதான் 'எனது பதவிக் காலம் எப்படி அமையும் என்பது குறித்து என்னை நானே ஏமாற்றிக் கொள்ளப் போவ தில்லை. நான் யதார்த்தத்தைச் சந்தித்தாகவேண்டும்' என்று அறிக்கை விட்டிருக்கிறார் ஸ்டாலின்.

உள்ளாட்சித் தேர்தல்களில் கட்சி அரசியலும் அதனோடு கைகோக்கும் காழ்ப்புணர்ச்சி களும் நுழைந்துவிட்டதால் அவை முற்றிலுமாக அர்த்தம் இழந்துபோய்விட்டன.

வேறுபாடுகளை மறந்து ஒத்துழைக்க வேண்டும் என்று தி.மு.க. தலைவர் கூறுகிறார். ஆனால், அவர் முதல்வராக இருந்த கால கட்டத்தில்கூட, உள்ளாட்சி மன்றக் கூட்டங்களில் அடிதடியும் வன்முறையும் நடைபெற்றுள்ளன. அரசியல் வேறுபாடுகள் மறைவது அவ்வளவு சுலபமில்லை. அத்தகைய அரசியல் பண்பாடு இன்றைய சூழலில் இல்லவே இல்லை.

தேர்தல் நடைபெற்றபோதே அ.தி.மு.க. தொண்டர்கள் (குண்டர்கள்?) அராஜகத்தில் ஈடுபட்டுள்ளனர். இந்திய வரலாற்றிலேயே முதல் முறையாக, வாக்குகள் எண்ணப்படும்




மையங்களுக்குள்ளும் புகுந்து வன்முறை, அராஜகத்தை அரங்கேற்றியுள்ளனர்.

இவ்வாறிருக்க, உள்ளாட்சியில் வேற்றுக் கட்சிக்காரர்கள் என்னவிதமான ஒத்துழைப்பை எதிர்பார்ப்பது?....

எவ்வித ஒத்துழைப்பும் கிடைக்காது, உள்ளாட்சி நிர்வாகம் ஸ்தம்பித்துப் போகும் என்பதே நிலைமையெனில், ஏகமாக செலவு செய்து உள்ளாட்சித் தேர்தல் நடத்திதான் என்ன பயன்?

ஜனநாயகத்தின் ஆணிவேர் என்று சொல்லப்படும் உள்ளாட்சி அமைப்புகள், அரசியலில் புகுந்து விளையாடுவதால் சல்லிவேராக மாறிப்போய்விட்டன.

இந்தப் போக்கு கண்டு, மக்களும் சலித்துப் போயிருக்கிறார்கள். அதனால்தான், நடைபெற்ற உள்ளாட்சித் தேர்தலில் மிக அதிகமான சுயேட்சை வேட்பாளர்கள் வெற்றி பெற்றிருக்கிறார்கள். கட்சி சார்பற்ற உள்ளாட்சி அமைப்புத் தலைவர்களை மக்கள் நாடுகிறார்கள் என்பதற்கு இது ஓர் அடையாளம். பழக்கப்பட்ட ஏராளமான சின்னங் களிடையே பழக்கமில்லாத புதிய சின்னங்களைத் தேடித் தேர்ந்தெடுத்து, அவர்கள் வாக்களித்திருப்பது, அவர்கள் மாற்றத்தை நாடுகிறார்கள் என்பதையே உணர்த்துகிறது.

மக்கள் விரும்பும் மாற்றத்தை ஏற்று அவர்களது உணர்வுகளுக்கு அரசியல் தலைவர்கள் மதிப்பளிக்க வேண்டும். உள்ளாட்சி அமைப்பு தேர்தல்களிலிருந்து கட்சி அரசியலைச் சலித்தெடுத்து, உருப்படியான செயல்பாடுக்கு வழி வகுக்க வேண்டும்.

கவுன்சில் உறுப்பினர்களை மக்கள் தேர்ந்தெடுக்க, அவர்கள் வாக்களித்து மேயரைத் தேர்வு செய்வதற்குப் பதிலாக, மேயரையும் மக்களே நேரடியாகத் தேர்ந்தெடுக்கும் இந்த முறையானது, கட்சி சார்பற்ற உள்ளாட்சி அமைப்புகளுக்கென்றே ஏற்படுத்தப்பட்டது; நற்பயன் தரத்தக்கது. ○

பிரபலங்கள் சிலரிடம் இந்தக் கேள்வியைக் கேட்டதும் கண்டாங்கிச் சேலை கொசுவம் போல நறுக்கென்று அழகான பதில் வந்தது.


• நல்லிகுப்புசாமி

**சுகி. சிவம்**

சாமர்த்தியமாகச் சொல்ல வேண்டும் என்றால் என் மனைவி. அதுதான் பாதுகாப்பு. சத்தியமாகச் சொல்வதென்றால் அன்னை அபிராமி. 'அபிராமி அந்தாதி'யில் 'சின்னஞ் சிறிய மருங்கினில் சாத்திய செய்யப்பட்டு' என்ற பாடல் இதை மெய்ப்பிக்கும். புடைவையில் தெய்வீக மூர்த்தங்கள் (சிலைகள்)தான் பேரழகு.

# புடைவையில் யார் அழகு?


• அறுசுவை அரசு நடராஜன்

**ஓவியர் மாருதி**

உலகிலுள்ள உடைகளையெல்லாம், ஆராய்ச்சி செய்த ஓர் ஐரோப்பியர், இறுதியில் எல்லா ஆடைகளிலும் புடைவையே அழகு என்று சொல்லியிருக்கிறார். மரத்தில் பின்னிப் படர்ந்திருக்கும் கொடி போல இயற்கையான அழகிய தோற்றம் சேலை அணிபவர்களுக்கு மட்டுமே கிடைக்கிறது. பெண்களின் உடற்கூறுப்படி சில குறைகள் இருந்தாலும் அதையெல்லாம் புடைவை சரிகட்டி விடும். புடைவையில் இந்தியப் பெண்கள் அழகு என்றாலும் தென்னிந்தியப் பெண்களே அதிக அழகுடன் மிளிர்கிறார்கள். 'மீரா' படத்தில் கண்ட எம்.எஸ். சுப்புலட்சுமி அம்மா அவர்கள், 'இன்று வரை புடைவையில் தெய்வீகத் தோற்றம் தருகிறார்கள்.


• சுகி. சிவம்

**இராம. வீரப்பன்**

புடைவையின் தொடக்கமே தமிழ்நாடுதான். என்னதான் இன்று சுடிதார் என்கிற வடக்கிந்திய உடை, புடைவைக்குப் போட்டியாக வந்து விட்டாலும், குமரி தொடங்கி, இமயம் வரை புடைவை அணிவதை நம் கலாசாரத்தின் அடையாளமாக பின்பற்றவே செய்கிறார்கள். ஆயிரம் உடைகள் வந்தாலும், புடைவை தரும் மரியாதை

மிகுந்த அழகை எந்த உடையும் தர இயலாது. ஐரோப்பிய மண்ணில் பிறந்து இந்தியா வந்து, எளிய மக்களின் சேவையில் தம்மை இணைத்துக் கொண்ட அன்னை தெரசா அவர்கள் கூட புடைவைதான் அணிந்தார்கள். தூய்மையின் உருவாக வெண்ணிறப் புடைவையில் அவர் காட்சி தரும் எளிய அழகு, அவர் மறைந்து விட்டாலும் கூட இன்னும் மனத்தை விட்டு அகலவில்லை.

• இராம-வீரப்பன்





• மாருதி

**அறுசுவை அரசு நடராஜன்**

தஞ்சையில் ஆடிப் பதினெட்டு அன்று, அம்பாள் புடைவை அணிந்து வரும் அழகைப் பார்ப்பதற்கென்றே பெண்கள் கூட்டம் மொய்க்கும். 'புடைவை அழகு வைபவம்' என்றே இதற்குப் பெயர். என்னைப் பொறுத்தவரை நாம் வணங்குகிற தாய் தெய்வம் அணிந்திருக்கும் ஆடையே அழகு. பதினைந்து வயதுப் பெண் என்றாலும் எண்பது வயது பாட்டி என்றாலும் எந்த வயதுப் பெண்ணுக்கும் புடைவைதான் அழகு. அதில் 'மடி' என்று அழைக்கப்படும் பட்டுப் புடைவை பெண்களுக்கு மேலும் பொலிவும், மரியாதையும் மிக்க தோற்றத்தைக் கொடுத்து விடுகிறது. 'மடி' என்ற சொல்லின் அர்த்தமே ஆசாரம், கலாசாரம் என்பதுதான். என்னைப் பொறுத்தவரை, புடைவையணிந்த எந்தப் பெண்ணும் பேரழகுதான்.

**நல்லிகுப்புசாமி :**

நான் ஒருமுறை டெல்லியில் உள்ள எங்கள் விற்பனை நிலையத்திற்குச் சென்றிருந்தேன். அங்கே ஒரு பஞ்சாபிப் பெண் புடைவை அணிந்து வந்திருந்தார். எனக்கோ ஆச்சர்யம். "உங்கள் கலாசார உடையான சுரிதார் பிடிக்காதா?" என்றேன். 'எனக்கு புடைவையே அதிகம் பிடித்திருக்கிறது கௌரவமான தோற்றத்தையும் தருகிறது. எனவே கடந்த ஒரு வருடமாக புடைவைதான் அணிகிறேன். அதற்கு முன்பு எனக்குப் புடைவை அணியத் தெரியாது' என்று சொன்னவர், புடைவைக்கு மாறியதன் சுவாரஸ்யப் பின்னணியைப் பற்றிச் சொன்னார்.

"டெல்லி தூர்தர்ஷனின் ஆங்கிலச் செய்தி வாசித்து வரும் கல்பனா ஐயர் தினமும் விதவிதமான புடைவைகளை அணிந்து தொலைக்காட்சியில் தோன்றுவதை பார்த்தேன். அவர் புடைவை அணிந்துள்ள விதம் உறுத்தாததாகவும், மதிப்பு கூட்டுவதாகவும் எனக்குத் தோன்றியது. உடனே தூர்தர்ஷனுக்கு ஃபோன் செய்து கல்பனா ஐயரின் தொலைபேசி எண் பெற்று அவருடன் தொடர்பு கொண்டேன். அவர்தான் உங்கள் கடையை அறிமுகப்படுத்தியவர்; அத்துடன் புடைவை அணியவும் கற்றுக் கொடுத்தார்" என்றார்.

நான் இந்தத் துறையில் இருக்கிறேன் என்பதற்காகச் சொல்லவில்லை. புடைவையில் மட்டும்தான் பெண்கள் போற்றத்தக்க அழகுடன் இருக்கிறார்கள். புடைவையில் நம் தமிழ்ப் பெண்கள் ஜொலிப்பார்கள் என்றாலும், இங்கே வரும் அயல்நாட்டுப் பெண்களும், புடைவை அணிந்து செல்வதைப் பார்க்கும் போது உலகம் முழுமைக்குமான உடை, புடைவைதான் என்றுதான் தோன்றுகிறது.

**— ஜெயன்**

# கறுப்பு சிவப்பு



திருச்சியில் 1945-46ல் நடந்த ஒரு மாநாட்டில், தந்தை பெரியார், திராவிடர் கழகத்தினரின் முத்திரையாக கறுப்புச் சட்டையை அறிவித்தார். பெரியார், கறுப்பு நிறத்தைத் தேர்ந்தெடுத்ததன் பின்னணி என்ன? கறுப்பு என்பது இழிவைக் குறிக்கும் நிறம். அந்த கறுப்புச் சட்டையை அணிகிறபோது, 'ஆதிக்க ஜாதியினர் இழிவு படுத்துகிறார்கள்' என்று நினைவூட்டிக் கொண்டே இருக்கும். அப்போது, அவர்களுக்கு, இந்த அடிமைத்தனத்தைக் களைந்தெறிய வேண்டும் என்கிற புரட்சி மனப்பான்மை ஏற்படும். இந்த அடிப்படையில்தான் தி.க.வின் கொடியில் கறுப்பும், சிவப்பும் இடம் பெற்றுள்ளது.

சிவப்புச் சட்டையின் கதை என்ன?

அமெரிக்காவில் சிகாகோ நகரில், 1876ல் எட்டு மணி நேரம் மட்டுமே பணி, வேலைக்கு ஏற்ற ஊதியம் போன்ற கோரிக்கைகளை வலியுறுத்தி போராட்டம் நடத்தியபோது, ஆதிக்க முதலாளி வர்க்கம், தொழிலாளர்களின் மீது துப்பாக்கிச் சூடு நடத்தி, வன்முறையைக் கட்டவிழ்த்து விட்டது. அதில் மரணமடைந்த தொழிலாளிகளின் சட்டைகள், ரத்தத்தில் தோய்ந்து சிவப்பாயின. அதுமுதல், தொழிலாளவர்க்கத்தின் புரட்சியைக் குறிக்கும் நிறமாகிவிட்டது சிவப்பு. இது ஓர் உலகளாவிய சிந்தனை.

நம் ஊரைப் பொறுத்தவரை 1923ல் மே முதல் தேதியை, தொழிலாளர் தினமாகக் கொண்டாடத் துவங்கியபோது, கம்யூனிஸ இயக்கத்தில் தொண்டர் படைகள் உருவாயின. துடிப்புமிக்க, இளைஞர்களைக் கொண்ட தொண்டர் படைக்குரிய அடையாளமாக சிவப்புச் சட்டை நிர்ணயமானது. கம்யூனிஸ மாநாடுகள், பேரணிகளில் சிவப்புச் சட்டை மரபானது. கம்யூனிஸ்டுகள் சிவப்புச் சட்டை, சிவப்புத் துண்டு அல்லது சிவப்புத் துணி கட்டிக் கொள்கிறார்கள்.

கறுப்பு, பகுத்தறிவு கொள்கைக்கும், சிவப்பு பொது உடைமைக் கொள்கைக்கும் அடையாளமாக இருந்தது பழைய கதை.

இன்று கறுப்புச் சட்டை அய்யப்ப பக்தர்களுக்கும் சிவப்புச் சட்டை மேல்மருவத்தூர் பக்தர்களுக்கும் அடையாளமாகிவிட்டது!

**கௌதம்ராம்**



## அன்பான வேண்டுகோள்

சிவானந்த குருகுலத்தில் இருக்கும் சுமார் 300 ஆதரவற்ற குழந்தைகளும், முதியோர்களும் இந்த வருடம் தீபாவளி திருநாளை மனமகிழ்ச்சியுடன் கொண்டாட பொதுமக்களிடம் உதவிக்கரம் நீட்டுகிறது.

பொதுமக்கள் அன்புடன் அளிக்க விரும்பும் நன்கொடை பணம், பொருள் எதுவாக இருந்தாலும் இக்குழந்தைகளின் நலனை முன்னிட்டு ஏற்றுக்கொள்ளப்படும். பொதுமக்கள் தங்களால் இயன்ற உதவியை பணமாகவோ, அல்லது புத்தாடைகள், பட்டாசு, இனிப்பு, எண்ணெய், சீயக்காய், அரிசி, கோதுமை போன்ற தானிய வகைகளை நன்கொடை கொடுக்குமாறு கேட்டுக் கொள்கிறோம்.

அன்புடன் அளிக்க விரும்பும் நன்கொடைத் தொகையினை காசோலையாகவோ / டிராப்டாகவோ 'சிவானந்த சரஸ்வதி சேவாஸ்ரமம்' என்ற பெயரில் அனுப்பி வைக்கும்படி கேட்டுக்கொள்கிறோம்.

**அனுப்ப வேண்டிய முகவரி :**

நிர்வாகி,
'சிவானந்த சரஸ்வதி சேவாஸ்ரமம்'
நெ. 20 கம்பர் தெரு.
கிழக்கு தாம்பரம், சென்னை – 600 059.
Phone: 2391078,2392444

**சென்னையில் நன்கொடை கொடுக்க வேண்டிய முகவரி :**

திரு. ரத்தன் பிரகாஷ் மல்ஹோத்ரா
ஆ/எ.பிரகாஷ் டிரேடிங் கம்பெனி,
நெ.156, தம்பு செட்டி தெரு,
சென்னை – 600 001.
Phone: 5342428, 5342803, 5342587

குருகுலம், காட்டாங்கொளத்தூர். 04114-52345 (STD) 954114-52345, 5181 (Local Call)

பின்குறிப்பு : காசோலையாகவோ / டிராப்டாகவோ 'சிவானந்த சரஸ்வதி சேவாஸ்ரமம்' என்ற பெயரில் தான் அனுப்ப வேண்டும் என்பதை கேட்டுக் கொள்கிறோம்.

E-mail : sivanand@md2.vsnl.net.in
Visit our website at:www.sivanandagurukul.org




✉ வலிப்புநோய் வருவதற்கான காரணங்கள், அவற்றின் வகைகள், ஏற்படும் பாதிப்புகள், முன்னெச்சரிக்கை நடவடிக்கைகள் பற்றிய 'வலிப்பு ஜீன்ஸ் சம்பந்தப்பட்டதா?' கட்டுரை பயனுள்ளதாய் இருந்தது.
கிருஷ்ணகிரி, ஆர். மாதவராமன்

✉ 'தேன் கூட்'டில் நிறைய 'விஷயத்தேன்' கிடைக்கிறது. இனிதான சுவையான விஷயங்கள் தொடரட்டும்.
விழுப்புரம், ஜி. ப்ரணவ்,

✉ ரம்பாவின் பிளானட் பிரவேசம் எப்படியோ, ஆனால் அவரது வண்ணப் படம் பரவசம் அடையச் செய்து விட்டது!
பெத்தானியாபுரம்,
நெல்லை வி.சிவா.

# கிருஷ்ணா ஸ்வீட்ஸுக்கே மைசூர்பாவா?

✉ கல்கியின் பட்டா நிலமான ஒரு பக்கத்தை 'மிட்டா மிராசு' விமர்சனத்துக்கு ஒதுக்கி புறம்போக்கு நிலமாக்கி விட்டீர்களே...
அயன்புரம், த. சத்தியநாராயணன்

✉ ஆப்கானிஸ்தான் போரை விட, உலக அமைதிதான் முக்கியமென்பதை தலையங்கம் வாயிலாக அறிவுறுத்திய விதம் அருமை!
கும்பகோணம், எஸ்.கே. மூர்த்தி

✉ திருப்பதிக்கே லட்டு, திருநெல்வேலிக்கே அல்வா, கிருஷ்ணா ஸ்வீட்ஸுக்கே மை சூர்பா போல ஜோதிடர் முருகு ராஜேந்திரனுக்கே ஜோதிடம் கூறியிருக்கிறீரே!
சென்னை – 78, கே.எஸ். நாராயணன்

✉ மாதுரியின் 'ஒசாமா பின் ஓ! நரசிம்மா' கற்பனையாக இருந்தாலும் இரண்டு பக்க ஜோக்ஸ் படிப்பதுபோல் தமாஷாக இருந்தது.
ஒட்டன்சத்திரம், செ.ரா. ரவி.

✉ ஷாமுடன் டு டிராக் பேட்டி திரைப் படம் மாதிரியே ஜெட் வேகத்தில் ஆரம்பித்து சுவையாக இருந்தது. பேட்டியில் ஷாம் 'பூவே வாய் பேசும்' பாடலை ஜோதிகாவுடன் பாடினேன்' என்று சொன்னது தவறு. சிம்ரனுடன்தான் பாடுவார். ஷாம் தவறாக சொல்லி யிருந்தாலும், சுமி, சக்கரம், சரியாக எழுத வேண்டாமா? அந்த அளவுக்கு 12B படம் குழப்பி விட்டதா?
வேலூர், நந்தினிஜெகன்




தீபாவளி நல்வாழ்த்துக்கள்

# A TRENDSETTER IN SWEETS

இனிமை • புதுமை • தனித்தன்மை

# K.V. Iyer Sweets & Savouries

220, Mint Street, Park Town, Chennai - 600 003. Ph: 535 53 69.

**Specialist in**

- Badam Sweets
- Kaju Sweets
- Ghee Sweets
- Milk Sweets
- Savouries
- Home Made Items

At Affordable Price!
29 years of experience
turns into a Quality






www:kviyersweets.com E.mail: kviyersweets@eth.net

---

சின்ன சின்ன பரிசுகள்! சின்னஞ் சிறு குழந்தைகளுக்கு –

இப்பொழுதே வாருங்கள்! உங்கள் குழந்தைகளுடன்

பருக பருக ஆனந்தம் அதிக ஆனந்தம்

சுத்தமான தஞ்சாவூர் டிகிரி காப்பிக்கு

# ஜீவா காபி

கல்யாணங்களுக்கும்
சுபகாரியங்களுக்கும்

100% பியூர் பில்டர் காபி பவுடர்

தயாரிப்பாளர்கள்:

## ஜீவா காபி ஒர்க்ஸ்

28, பி.வி. நாயக்கன் தெரு, திருவல்லிக்கேணி, சென்னை – 600 005.

இலவச டோர் டெலிவரிக்கு தொடர்பு கொள்ளவும் : 8444725

**எப்போதுமே அழகாக, நறுவிசாக ஆடையணியும் பிரபல பெண்மணிகளிடம் 'டிரஸ்' என்ற ஒரே ஒரு வார்த்தையைச் சொல்லி, பேச வைத்த போது...**

கமலி ஸ்ரீபால்:

ஒரு பெண்ணின் பர்ஸனாலிட்டியைக் கூட்டும் மந்திரக்கோல் - அழகான ஆடை! சுத்தமும், அழகும், கண்ணியமும் நிறைந்த ஆடைகள் பெண்களின் ரசனையைக் கூட்டிக் காட்டும்.

சிறு வயதிலிருந்தே எனக்கு டிரஸ்ஸிங் சென்ஸை சொல்லித் தந்தது எங்கம்மா சுந்தரி. இன்றைக்கும் என்னோட காஸ்ட்யூம் டிஸைனர் அவங்கதான். என்னிடம் இருக்கும் ஆடைகள் பற்றி என்னைவிட அவங்களுக்கு நல்லா தெரியும். ஏன்னா, வாங்கிக் கொடுப்பதே அவங்கதான்.



எனக்கு கான்செப்டுக்கு ஏற்ற டிரஸ் அணியப் பிடிக்கும். ராஜஸ்தானி டைப் புடைவையானால், அதற்கேற்ற ரவிக்கை, அரக்கு வளையல் , பொட்டு என மெனக்கெடுவேன். க்ரீம் நிறத்தில் தங்க ஜரிகை போட்ட புடைவை என்றால், கை நிறைய தங்க வளையல்கள், லாங்செயின், ஜிமிக்கி என மலையாளப் பெண் தோற்றம் ஏற்படுத்திக் கொள்ளப் பிடிக்கும். சில சமயம் காஞ்சிபுரம் பட்டுப் புடைவை, பிச்சோடா கொண்டை, தலை நிறைய பூ என அசல் தமிழ்ப் பெண் ஆகிவிடுவேன்.

நான்கு பீரோ நிறைய முந்நூறுக்கும் மேற்பட்ட புடைவைகள் இருந்தாலும், வெளியே போகவும், பணியிடத்தில் அணியவும் சுரிதார்தான் பிடிக்கும். நீண்ட பயணங்களுக்கு லாங்டாப்ஸ் உள்ள குர்தா சௌகரியமானது.



நானும் என் அக்கா சாந்தியும் சின்ன வயதில் ஒரே போன்ற காப்பர் சல்ஃபேட் நிற பட்டுப் பாவாடை தைத்துக் கொண்டோம். அந்தப் பாவாடையின் வழவழப்பும், ஜரிகை மினுமினுப்பும் இன்னும் நினைவிலிருக்கிறது. சிவப்பு நிறத்தில் வெள்ளையில் இங்கிலீஷ் டிஸைன் போட்ட புடைவையை முதன் முதலாக கட்டிக் கொண்டேன். அந்த அமர்க்களமும், ஆவலும் ஆஹா!

என்னுடைய பதினெட்டாவது வயதில் வாங்கிய பட்டுப்புடைவையை இன்றைக்கும் மெருகு குலையாமல் வைத்திருக்கிறேன். காரணம், பூப்போல பாதுகாப்பதுதான்!

சம்க்கிவர்க் தனி, பருத்தி தனி, டிஷ்யூ தனி, ஸின்தெடிக் தனி என பிரத்யேகமாக அடுக்கி, மேட்சிங் ரவிக்கைகள் ஆல்டர் செய்து அல்லது தைத்து, அவ்வப்போது ஃபால்ஸ் தைத்து, மிக கவனமாக துவைத்து, இஸ்திரி போட்டு ரக வாரியாக அடுக்கி வைத்துவிடுவேன். அணியும் போதும், கட்டியதே தெரியாமல், அழுக்குப்படாமல் ஜாக்கிரதையாக அணிந்து

கொள்வேன். அதேபோல, அணியும் ஆடைக்கு ஏற்ப, பொட்டு, லிப்ஸ்டிக், நகை, செருப்பு எல்லாமே பொருத்தமாக இருக்கிறதா என பார்த்துக் கொள்வேன்.

ரசனைகளை, அழகிய தோற்றத்தால் இன்னும் வெளிப்படையாக காட்டிக் கொள்ளலாமே!

**கமலி ஸ்ரீபாலுக்கு இந்திராகாந்தியின் டிரஸ் சென்ஸ் மிகவும் பிடிக்குமாம்!**

**வீணை காயத்ரி:**

மேடையிலே பாடறவங்களுக்கு எப்படின்னு தெரியலை. ஆனா, எனக்கு பட்டுப் புடைவைக் கட்டிக்கிட்டு, வீணை வாசிக்கிறது அசௌகரியமாதான் இருக்கு! காரணம், பட்டுப் புடைவையோட வெயிட்! தோள் பட்டையில் 'பின்' பண்ணிவிடும் போது, புடைவை இன்னும் கனக்கும். அந்த கனத்தோட வீணையை மீட்டறது சிரமமாக இருக்கும். வீட்டில், நான் காஷுவல் உடையில் சாதகம் பண்ணும்போது, கிடைக்கிற ஒரு சௌகரியம், வாசிப்பில் வெளிப்படும் ஒரு லாகவம், இதெல்லாம் மேடையில் பட்டுப் புடைவையோட கச்சேரி செய்யும் போது கிடைப்பதில்லை. இருந்தாலும், கச்சேரிக்கு நாங்க பட்டுப் புடைவையைப் பயன்படுத்த காரணம், மேடையில் பல மணி நேரம் உட்கார்ந்து வாசித்துவிட்டு, எழும்போது, பட்டுதான் கசங்காமல் அப்படியே இருக்கும். பட்டுப் புடைவைக்குச் சமமான தோற்றம் தரும், அதே சமயம் கனக்காத ஒரு மெட்டீரியலை யாராவது அறிமுகப்படுத்தினால் ரொம்ப நல்லா இருக்கும்.

எம்.எஸ். அம்மா, பட்டம்மாள் போன்றவங்க புடைவை கட்டுகிற நேர்த்தியே வெகு அழகு. அவங்களை மேடையிலே பார்க்கும்போது அவங்க மேலே நமக்கு ஒரு தனி மரியாதையே ஏற்படும்.

இப்ப சில பேர், கச்சேரி மேடையை ஒரு ஃபேஷன் ஷோவா நினைச்சு அலங்காரம் பண்ணிக்கிட்டு வராங்க. எனக்கு இதுலே உடன்பாடு இல்லை.

# அழகாக ஆராதிக்கிறாங்க!

உங்கள் எண்ணங்களை, சொல், செயலால் மட்டுமல்ல, ஆடைகளாலும் பிரதிபலிக்க முடியும். அதிலும் பெண்கள், தங்கள்

கச்சேரி மேடையை நாம்ப கத்துக்கிட்ட வித்வத்துக்கு மட்டுமே பயன்படுத்தணும். ரசிகர்களோட கவனத்தைத் திசை திருப்ப அதீத அலங்காரம் தூண்டுதலா இருக்கக்



**ஹா**ங்காங்கில் இருந்து நண்பர் அனுப்பிய செய்தி: உலக தகவல் மையத்தின் மேல் மோதிய விமானத்தின் எண் தெரியுமா? Q33MY இதை கம்ப்யூட்டரில் MICROSOFT WORDல் FONT SIZE 72 என வைத்து பெரிய எழுத்துக்களில் டைப் செய்யுங்கள். பின்னர் அதனை செலக்ட் செய்துவிட்டு Font WINGDINGS என்பதைத் தேர்வு செய்து கிளிக்குங்கள். இப்பொழுது பாருங்கள் திரையில் என்ன தோன்றுகிறது என்று. அட! ஆச்சர்யமாய் இல்லை. ஒரு விமானம் அதைத் தொடர்ந்து உலக தகவல் மையம் போல் 2 கட்டடங்கள். பின்னர் ஒரு எலும்புக்கூடு மற்றும் ஸ்வஸ்திக் சக்கரம்!

– சி. மகேஷ்

கூடாது.

பட்டுப் புடைவைகள் அறுபது இருக்கு. மத்த வெரைட்டி புடைவைகள் சுமார் நூறு இருக்கும். என்கிட்டேயே எனக்குப் பிடிக்காத ஒரு குணம், எப்பவாவது எனக்கு மனச் சோர்வு ஏற்பட்டுதுன்னா, காரை எடுத்துக்கிட்டுப் போய், ஒரு பட்டுப் புடைவை வாங்கிட்டு வந்துடுவேன். ஒரு சமயம், அது போன்ற மன நிலையில், இருப தாயிரம் ரூபாய்க்கு நான்கு பட்டுப் புடைவைகள் வாங்கியதுமுண்டு. இந்த விநோத மான பழக்கத்தை, கொஞ்சம் கொஞ்சமா குறைச்சுக்கிட்டு வர்றேன். மற்றபடி, பண்டிகைக்கு என்று விசேஷமா புடைவை வாங்கற பழக்கமெல்லாம் கிடையாது.

என்னோட பழைய பட்டுப் புடைவை களை, என் கணவர் பாலவாக்கத்தில் நடத்தி வரும் 'விஸ்வகுரு வித்யாரண்ணி' ஆஸ்ரமத்துக்குக் கொடுத்து விடுவேன். மற்ற ரக பழைய புடைவைகளை வசதி இல் லாத கல்லூரி மாணவிகளுக்குக் கொடுப் பது என் வழக்கம்.

> வீணை காயத்ரிக்கு சோனியா காந்தி, சுஷ்மா ஸ்வராஜின் டிரஸ் சென்ஸ் பிடிக்குமாம்!

அனுராதா:

**ச**மீபத்தில் ஒரு டி.வி. நிகழ்ச்சிக்காக நான் சித்ரா விஸ்வேஸ்வரனை பேட்டி எடுத்தேன். நிகழ்ச்சி முடிந்ததும், என் புடைவையைத் தொட்டுப் பார்த்து, "நல்லா இருக்கு'னு பாராட்டினாங்க. ஒரு பிரபல நடனப் பெண்மணி, நான் கட்டியிருந்த புடைவையைப் பாராட்டியதும் எனக்குப் பெருமை தாங்கலை. இத்தனைக்கும், நான் அப்போ கட்டியிருந்தது இரண்டாயிரம் ரூபாய் விலையுள்ள ஜார்ஜெட் ஷிபான் புடைவைதான்.

என் குடும்ப, நண்பிகள் வட்டாரத் துலேயே, 'பெஸ்ட் டிரஸ் செலக்டர்' என்று ஸ்பெஷல் பட்டமே உண்டு. அதனாலே, யாருக்காவது டிரஸ் வாங்கணும்னாகூட, என்னைக் கடைக்குக் கூட்டிக்கிட்டுப் போயிடுவாங்க... அன்புத் தொல்லை!

'பட்டு கட்டினால்தான் அழகு'னு சொல்றதை நான் ஒப்புக் கொள்ள மாட் டேன். எந்த மெட்டீரியலா இருந்தாலும், அதை கட்டுகிற விதத்தில் கட்டிக் கொண் டால்தான் எடுபடும். காட்டன்லேயே நூறு ரூபாயிலிருந்து, மூவாயிரம் வரைக்கும் அழகழகான புடைவைகள் இருக்கு. அதிலே, நம்ம பட்ஜெட்டுக்கு ஏற்ற மாதிரி வாங்கி, அழகா அயர்ன் பண்ணி உடுத்திக் கிட்டா ரொம்ப பார்வையா இருக்கும்.

எனக்கு நகை மேலே ரொம்ப ஆசை கிடையாது. ஆனா டிரஸ் மேலே கிரேஸ்! நிகழ்ச்சி தொகுப்பாளரா இருக்கிறதனாலே, ரொம்ப 'சூஸி'யா இருப்பேன். ஒரு நிகழ்ச்சியில் கட்டிக்கிட்ட புடைவையை, குறைஞ்சது ஆறுமாசத்துக்காவது பீரோ விலிருந்து வெளியே எடுக்காமல் இருப் பேன். மத்தவங்ககிட்டே இருக்கிற டிஸைனோ, கலரோ ரிபீட் ஆகாமல், வெரைட்டியா இருக்கணும்னு தீவிரமா இருப்பேன். சில சமயம், டி.வி. நிகழ்ச் சிகளில் என்னுடன் பங்கு பெறும் வி.ஐ.பி. பெண்களுக்கு போன் செய்து 'நாளைக்கு என்ன கலர் டிரஸ்ல வரப் போறீங்க?'னு கேட்டுட்டு, அதுக்கு கான்ட்ராஸ்டா இருக் கிற புடைவையா கட்டிட்டுப் போவேன்.

இவ்வளவு கவனமும் சிரமமும் எடுத்துக்கிறதனாலேதான், பொது நிகழ்ச் சிகளில் என்னைச் சந்திக்கும் பெண்கள், 'அன்னிக்கு, அந்த நிகழ்ச்சியிலே நீங்க கட்டிக்கிட்ட புடைவை ரொம்ப அழகு'னு பாராட்டறாங்க!

> "இந்தி நடிகை ரேகாவின் காஸ்ட்யூம் சென்ஸ் என்னை அசத்தும்" என்கிறார் அனுராதா.

— வி. சாந்தி

படங்கள்: யோகா

மேற்கு வங்கத்திலுள்ள ஏழு கிராமங்களிலிருந்து பிரத்யேகமாகச் சென்னைக்கு வருகின்ற 'பெங்கால் காட்டன்' சேலைகளை, பாண்டி பஜார் 'சாருலதா'வில் குவித்திருக்கிறார்கள். இது மட்டுமில்லை, சாந்தி நிகேதனிலிருந்து இவர்களுக்காக மட்டுமே விசேஷமாகத் தயாரித்து வழங்கப்படுகிற காந்தா நூல் பின்னல் வேலைப்பாடு கொண்ட சேலைகள் அசத்தல் ரகம். காந்தா சேலைகள் 'துஸ்ஸார் ஸில்க்' வகையில் தயாராகின்றன. 'எகோ பிரண்ட்லி'யாக மரம் செடி வகைகளின் இழைகளைக் கொண்டு உருவாக்கப்படுகின்றன.

சின்னத்திரை நடிகைகள், தொலைக்காட்சித் தொடர்களில் விரும்பி அணிகிற துனியாகாளி, பாலு செர்ரி ரகங்கள், பட்டுப் புடைவைகளுக்கு நிகரான கம்பீரம் தருபவை.

அலுவலகம் செல்லும் பெண்கள் துனியாகாளி



# சாந்தி நிகேதனிலிருந்து

ரகங்களை மிகவும் விரும்புகிறார்களாம். கல்யாண ரிஸப்ஷனுக்கே இப்போது பாலு செர்ரி ரகங்கள் அணியப்படுகின்றன.

காந்த்தா சேலைகளின் பூ டிசைன்கள், பார்டர், எல்லாம் தொடர்ச்சியாக ஒரே நூலைக் கோத்து வாங்கி உருவாக்கப்படுகின்றன. ஒரு சேலையின் பூ வேலைகள் செய்து முடிக்க, இருபது நாட்களாகுமாம்.

'பெங்கால் ஸில்க்' என்பது பட்டுப் பூச்சிகளைக் கொல்லாத 'அஹிம்சா பட்டு!' கல்லூரிப் பெண்களைக் கவரும் ஆசைப்பட்டு!

இன்னும் ஜாம்தாரி, டாக்காய் போன்று மேற்கு வங்கத்தின் பிரத்யேகமான பாரம்பரியச் சேலை வகைகளும் 'சாருலதா'வில் உண்டு.



# சென்னைக்கு...

முந்நூறு ரூபாய் முதல் மூவாயிரம் ரூபாய் வரை கண் கவரும் ஆடைகள். பட்டுப் புடைவையின் அதிகபட்ச விலையே ரூபாய் இரண்டாயிரத்து ஐந்நூறுதான்.

ப்ளவுஸ் துணியும் சேர்ந்தே கிடைப்பதால், நல்ல கிராக்கி.

மற்ற பருத்திச் சேலைகளைவிட பெங்கால் காட்டன் உறுதியானது, நீள அகலம் கூடுதலானது, சுருங்குவதில்லை என்பதுதான் வங்கப் புடைவைகளின் தங்க அம்சம்.

"வங்காளத்தின் கலை நுட்பத்தைத் தமிழ் நாட்டு மக்களுக்கு ஏற்ற வகையில் சற்று மாறுதலோடு அறிமுகம் செய்யவே 'சாருலதா'வைத் தொடங்கினோம். இங்கே பெங்கால் காட்டனில், பிரத்தியேகமாக ஒன்பது கஜம் சேலைகளையும் தயாரித்து விற்கிறோம்" என்று பெருமையோடு சொன்னார் நிர்வாகி கமலாராஜன்.

முன்பு வாங்கிய பருத்திச் சேலைகள் புழங்கிக் கசங்கிப் போய்விட்டனவே என்று கவலைப்பட வேண்டாம். சாருலதாவில் 'காலண்டர் பாலிஷிங்' என்று ஒரு சேவை வசதி இருக்கிறது. பழைய சேலையைச் சலவை செய்து இவர்களிடம் தந்துவிட்டால் போதும். பன்னிரண்டு ரூபாய் செலவில், ஸ்டார்ச் போட்டு, புது மெருகேற்றித் தந்து விடுகிறார்கள். நம்முடைய பழைய சேலைதானா என்று மலைத்துப் போக நல்ல சான்ஸ்.

வெளிநாடுகளில் வாழும் நம்மவர்கள், ஈ-மெயிலில் ஆர்டர் தந்து பெற்றுக் கொள்கிறார்களாம்.

— சுப்ர.பாலன்

படங்கள் : யோகா



# பழைய துணிக்குப் பயனுண்டா?

“ஏழெட்டு வருடங்களுக்கு முன்பு, பழைய துணிகள் பற்றி மக்களுக்கு இருந்த மனப்பான்மை இப்போது மாறி விட்டது. வீட்டில் பழைய துணி இருந்தால் அதைப் போட்டுவிட்டு பாத்திரம் வாங்கி வைப்பார்கள். ஆனால் இப்போது, பழைய துணிகளை ஆதரவற்றோர் இல்லங்களுக்கு கொடுத்து உதவுகிறார்கள்” என்கிறார் உதவும் கரங்கள் வித்யாகர்.

‘உதவும் கரங்கள்’ இல்லங்களில் சின்னஞ்சிறு குழந்தைகள் முதல், முதியோர்கள் வரை பல்வேறு வயதினரும் பராமரிக்கப்பட்டு வருவதால், வழங்கப்படும் துணிமணிகள் எந்த அளவு என்றாலும் பிரச்னையே இல்லை. பல துணிகளில் சிறு மாற்றங்கள் செய்ய வேண்டியிருக்கும். அவற்றைச் செய்ய இவர்களிடம் தையல் யூனிட் இருக்கிறது.

“பெரும்பாலானவர்கள், பழைய துணிகள் துவைத்து, இஸ்திரி போட்டு, கொண்டு வந்து கொடுப்பார்கள் சிலர், அழுக்காகவே கொண்டு வந்து கொடுப்பார்கள். அவற்றை நன்றாகத் தோய்த்து, சுத்தம் செய்த பின்னரே, எங்கள் இல்லங்களில் இருப்பவர்களுக்கு அணிவதற்குக் கொடுப்போம். சில துணிகள் அணிவதற்குத் தகுதியில்லாத அளவில் இருக்கும். அவற்றைத் தரை துடைக்க பயன் படுத்திக் கொள்வோம்.

“துபாய் போன்ற அயல்நாடுகளில் வாழும் சில நண்பர்கள், பழைய துணிகள் சேகரித்து அனுப்பலாமா என்பார்கள். அவர்களுக்கு நான் சொல்லும் பதில், வேண்டாம் என்பது தான்! காரணம் அப்படிச் சேகரித்து அனுப்பப்படும் துணிகள் பழைய துணிகள்தான் என்றாலும்கூட கஸ்டம்ஸில் வரி கட்டச் சொல்லி விடுவார்கள். அப்படி வரி கட்டி, பழைய துணிகளைப் பெற்றுக் கொள்வதைவிட, இங்கேயே புதிய துணிமணி வாங்கிவிட முடியும்” என்கிறார் வித்யாகர்.

பொதுவாக, புடைவை, வேட்டிகளை வாங்கிக் கொள்வதில் இல்ல நிர்வாகிகளுக்கு சிரமங்கள் உண்டு. அவற்றைத் துவைப்பதற்கு நிறைய தண்ணீர் தேவைப்படும். தண்ணீர்த் தட்டுப்பாடு நிலவும் இன்றைய சூழ்நிலையில், புடைவை, வேட்டிகளைவிட, சுரிதார், நைட்டி, ஷார்ட்ஸ், பேண்ட் போன்ற ஆடைகளையே சௌகரியமாக நினைக்கிறார்களாம்.

பழைய உடைகள் மட்டுமில்லை; பழைய பொம்மைகள், காலணிகள், பாடப் புத்தகங்கள், டீ.வி, பிரிட்ஜ் போன்ற வீட்டு சாதனப் பொருட்களைக் கூட காட்டாங்கொளத்தூர் சிவானந்தா ஆஸ்ரமத்தில் பெற்றுக் கொள்கிறார்கள்.

“எங்கள் முதியோர் இல்லத்தில் மரணப் படுக்கையில் இருந்த ஒருவர் தமது கண்களைத் தானமாக வழங்க முன் வந்தார். இறப்பதற்கு, சில மணி நேரம் முன்பு, என்னிடம் ‘நான் போட்டுக் கொண்டிருப்பது, என் மாமனார் அன்போடு வாங்கிக் கொடுத்த ராசியான சட்டை. நான் இறந்தால், என்னை எரிக்கிறபோது இந்தச் சட்டையையும் எரித்து, வீணாக்கி விடாதீர்கள். இந்த இல்லத்தைச் சேர்ந்த என் சகாக்களில் யாருக்காவது என் நினைவாகக் கொடுத்து விடுங்கள்’’ என்றார். அவரது நல்லெண்ணம் என்னை நெகிழ வைத்தது” என்கிறார் சிவானந்த ஆசிரம நிர்வாகி ராஜாராம்.

பேட்டி: **எஸ். சந்திரமௌலி**

ராஜியிடம் அப்படி மனம் திறந்து பேசியிருக்கக் கூடாதோ. மாடிப் படிக் கட்டின் கைப்பிடியில் சுற்றியிருந்த தீபா வளி மின்விளக்குச் சரத்தை அவிழ்த்தவாறு கீழிறங்கிய விது நினைத்துக் கொண்டாள்.

அன்றைக்கு ஏதோ அப்படி ஒரு மனநிலை. மனத்தில் உள்ளதையெல்லாம் கொட்டிவிட வேண்டுமென்று. இப்போது ராஜி மூலமாய்ச் செய்தி ரஞ்சிக்குப் போயிருக்கும், நிச்சயமாய். ஆனால் ரஞ்சியோடு நின்று விடும். நல்ல வேளையாக, ரஞ்சியின் தமிழ் நண்பர் வட்டம் பெரிது இல்லை. ராஜியின் வட்டம் பெரியது. ஆனால், ரஞ்சியைத் தவிர வேறு யாரிடமும் சொல்ல மாட்டாள்.

விளக்குச் சரங்களை அட்டைப் பெட்டியில் போட்டு அலமாரியின் மேல்தட்டில் திணித்துக் கதவை மூடினாள். அடுத்த தீபாவளி வரை... வார்த்தை இடறியது.

அடுத்த தீபாவளி. அது அவளுக்கு ரமேஷுடன் இருக்குமா.

சமையலறைக்குள் நுழைந்தாள். பளிங்கு அங்கணத்தில் நேற்றிரவிலிருந்து விழுந்த பாத்திரங்களும், தட்டு, கோப்பைகளும் குவிந்து கிடந்தன. தட்டுக்கள், கோப்பைகளை அலசி டிஷ்வாஷரில் போட வேண்டும். மற்றவற்றைச் சோப்புப் போட்டுக் கழுவ வேண்டும். கழுவக் கழுவ, பாத்திரங்கள் விழுந்து கொண்டேதான் இருக்கும். ரமேஷும் அவளும் தொடர்ந்து தோற்கும் 'அங்கணப் போர்' என்று முன்பு இது பற்றிச் சிரித்திருக்கிறாள். சிரிப்பு நின்று நாளாயிற்று. இப்போதெல்லாம் அலுப்பும் கோபமும்தான் சுலபமாய் வருகிறது.

டெல்லியில் ராம்சந்த் தலைமையில் வரிசையாய்ச் சாப்பாட்டு வகைகளை மேசை மேல்வைத்து, கேட்டுக் கேட்டுப் பரிமாறிச், சாப்பாடு முடிந்ததும் தட்டுகளை எடுத்துக் கொண்டு சமையலறைக்குத் திரும்பும் சக்குபாய், ராஜ்பாபு ஞாபகம் வந்தது. பளிச்சென்ற பெங்கால் காட்டன் புடைவை நலுங்காமல் அதை மேற்பார்வை செய்யும் அம்மாவும்.

முதல் தடவை இங்கே வந்தபோது அம்மாவால் அவள் அதிர்ச்சியை மறைக்க முடியவில்லை. ரமேஷுக்கு அவளைக் கொடுக்கச் சம்மதித்தபோது, அமெரிக்க வாழ்க்கை பற்றிய அம்மாவின் கனவுகள் விதுவின் கனவுகளைவிட அதீதமாக இருந்திருக்க வேண்டும். "வீட்டு வேலையெல்லாம் இப்படி நீங்கள் இரண்டு பேருமேதான் செய்யணுமா?"

ரமேஷுக்குச் சிரிப்பு. "எங்க வீட்டு வேலையை நாங்க செய்யாம வேற யார் செய்வாங்களாம்?" இது ஒரு பெருமையாகத் தன் மாமியாருக்குத் தெரியாது என்பது ரமேஷுக்கு மறந்து போயிருந்தது.

பொதுவாக, அமெரிக்க மத்திய வர்க்க வாழ்க்கையைப் புரிந்து கொள்வது அம்மாவுக்குச் சிரமமாக இருந்தது. இந்திய மத்திய வர்க்கத்தையே அவள் புரிந்து கொள்ள முயன்றதில்லை. சொந்த வட்டத்துக்கு வெளியே போய்ப் பார்க்க வேண்டுமென்ற உணர்வு அம்மாவுக்கு இருந்ததே இல்லை. விதுவுக்கும் கூடத்தான்.

அவளுக்கும் அம்மாவுக்கும் இடையே ஏதோ சரியில்லை என்பது புரிய ரமேஷுக்கு இரண்டு வாரங்கள் ஆயிற்று. "என்ன, விது?" என்றான். அவளுக்குச் சொல்லத் தெரியவில்லை. சொல்லவும் விருப்பமில்லை. அம்மாவின் பாராட்டு முத்திரை அவளுக்குச் சிறு வயதிலிருந்தே எவ்வளவு முக்கியம் என்பது ரமேஷுக்குப் புரியப் போவதில்லை. அம்மா விதுவைவிட அழகி. அம்மா விதுவை விடப் புத்திசாலி, திறமைசாலி. அவள் கட்டுரைகள் ஹிந்துஸ்தான் டைம்ஸில் வருகின்றன, அவள் ஓவியங்கள் காலரிக் கண்காட்சிகளில் இடம் பெறு

5

கின்றன. விது மட்டும் பிறக்காமல் இருந்திருந்தால், அம்மா இந்நேரம் ஏதாவது பெரிய பதவியில் இருந்திருப் பாள். இப்படிப்பட்ட அம்மாவுக்கு, தான் இப் போது வாழும் விதம் பிடிக்க வில்லை. மீண்டும் தன்னால் அம்மாவுக்கு ஏமாற்றம். அம்மா வருவாள் என்று எதிர்பார்த்துத் துள்ளிக் கொண்டிருந்த விது அடங்கிப் போனாள்.

ஏர்போர்ட்டில் வழியனுப்பும்போது கூட, சொரசொரப்பு ஏறத் தொடங்கியிருந்த மகளின் உள்ளங்கைகளை அம்மா தடவிக் கொண்டே இருந்தாள். 'எப்படி வளர்ந்தவள் நீ', என்பதை வார்த்தையில் சொல்லவில்லை. கண்களில் நீர் கோத்து நின்றது.

**காஞ்சனா தாமோதரன்**



ஊருக்குத் திரும்பியதும் அம்மா என்ன செய்வாள் என்பது விதுவுக்கு நன்றாகத் தெரியும். "தாய்நாட்டில் நல்ல நிலைமையில் இருந்திருக்கக் கூடிய ரமேஷும் வித்யாவும் இப்படி ஒரு சாதாரண வாழ்க்கைக்காக ஏன் அயல்நாட்டுக்குப் போய் கஷ்டப்பட வேண்டும்?" ஓரங்கள் அழகாய்க் கத்திரித்து, வெண்ணெய் தடவிய, வெள்ளரி சாண்ட்விச் முக்கோணத்தை நளினமாய்க் கடித்தபடி, அல்லது இறக்குமதி செய்யப்பட்ட பீங்கான் கோப்பையிலிருந்து டார்ஜிலிங் டீ உறிஞ்சியபடி, அவள் தன் க்ளப் சிநேகிதிகளிடம் இந்தக் கேள்வியைப் பகிர்ந்து கொள்வாள். விமானப்படை வார இறுதி விருந்துகளில், அப்பாவின் நண்பர்களிடம் அமெரிக்கச் சமூகம் பற்றி அங்கலாய்ப்பாள். தன் மகளுக்கு ஓர் அமெரிக்க மாப்பிள்ளைதான் வேண்டுமென்பதில் அன்று தனக்கு இருந்த உறுதியை, அது ஏன் என்ற கேள்வியை, வசதியாக மறந்து விடுவாள்.

அம்மா தேவையில்லாமல் விஷயத்தைப் பெரிது படுத்துகிறாள் என்றுதான் விது நினைத்தாள். மண வாழ்வின் உற்சாகம் இன்னும் மங்க ஆரம்பித்திருக்கவில்லை அப்போது. படிப்பு, வேலை என்ற எதிர்பார்ப்புகளின் மிதப்பு வேறு.

அங்கணத்தினுள் ஒரு க்ரண்டி நழுவி விழுந்து அவளைத் திடுக்கிடச் செய்தது. பெருமூச்சுடன் மீண்டும் சமையலறையைச் சுற்றிப் பார்த்தாள்.

தட்டுக் கழுவ மனமில்லை. அருணாவும் அம்பிகாவும் பள்ளிக் கூடத்திலிருந்து திரும்ப இன்னும் மூன்று மணி நேரமாகும்.

வீட்டின் மௌனம் அழுத்தியது. ஃபோனில் ராஜியைக் கூப்பிடவும் மனமில்லை. அறைச் சுவர்களின் நீளமும், தரையின் அகலமும், விட்டத்தின் உயரமும் அதிகரித்தது போலிருந்தது. மௌனம் இன்னும் பெருகி அழுத்தியது. மூச்சு முட்டியது. இங்கிருந்து உடனே வெளியேற வேண்டும்.

பரபரவென்று இஞ்சி - ஏலக்காய் டீ செய்தாள். அதை ஒரு ஸ்டைரஃபோம் கோப்பையில் ஊற்றினாள். ஓவர்கோட், கைப்பை, கார்ச்சாவி எல்லாவற்றையும் எடுத்துக் கொண்டு வெளியேறினாள். எங்கே போக வேண்டுமென்று திட்டமில்லை. எங்கேயாவது போனால் சரி.

**கா**ரில் ஏறியதும் செல்ஃபோன் மணி. ரஞ்சி அவள் வேலையிலிருந்து கூப்பிடுகிறாள்.

"ஹாய், விது! எப்படி இருக்கே?"

"ஹாய் ரஞ்சி! ஆஸ்பென் எல்லாம் நல்லா இருந்ததா? ஜாக் நிக்கல்ஸனைப் பார்த்தியா?" தன் சிரிப்பு செயற்கையாய், வறட்சியாய்த் தெரிந்தது விதுவுக்கு.

"ஒரே ஒரு நாள் சாப்பிடப் போன இடத்தில், சில நட்சத்திரங்களைப் பார்த்தோம், விது. அவ்வளவுதான். உன் தீபாவளி விருந்தெல்லாம் எப்படிப் போச்சு?"

"வழக்கம்போல, ரஞ்சி. இன்னிக்குத்தான் வீட்டு அலங்காரங்களை எல்லாம் ஒதுக்கினேன்."

ராஜி, நிச்சயம் ரஞ்சியிடம் பேசியிருக்கிறாள். இப்படிக் குசலம் விசாரிப்பதற்காக ரஞ்சி வேலையிலிருந்து கூப்பிடமாட்டாள். அந்த ஓட்டைவாய் ராஜியை விட்டுக் கொடுக்காமல் இவள் விஷயத்தை எப்படிக் கேட்கப் போகிறாள், பார்க்கலாம். விது

















தனக்குள் சிரித்துக் கொண்டான்.

"விது, இப்போ என்ன பண்ணிக்கிட்டிருக்கே?"

"ஒண்ணுமில்ல, ரஞ்சி. வீட்டிலேயே அடஞ்சு கிடக்கிற மாதிரி இருந்தது. வெளியே ஒரு சுத்து சுத்திட்டு வரலாமேன்னு, ஏலக்காய் டீயும் கையுமா இப்போதான் காரில் ஏறினேன்."

"மத்தியானச் சாப்பாட்டு நேரமாகப் போகுதே. என் கூடச் சாப்பிட வர்றியா?"

"நீ வழக்கமா போற இடங்களுக்கு ஏத்த மாதிரி நான் ட்ரெஸ் பண்ணிக்கலையே."

"உனக்கு இட்டாலியன் பிடிக்குமே. இன்னும் பதினஞ்சு நிமிஷத்தில் 'சென்டானிஸ்' வர்றியா? ட்ராஃபிக் அதிகம் இல்லன்னா நானும் சரியா அங்கிருப்பேன்."

அவளுக்கு முன்னரே ரஞ்சி வந்து காத்திருந்தாள். அவன் மேசைக்கருகே, முரட்டுக் கற்கள் சுற்றிலும் பாவிய பெரிய கணப்பில் தீ இதமாய்ப் பொறி பரத்திக் கொண்டிருந்தது.

"இங்குள்ள சீஸ்-போர்ட்டபெல்லோ காளான் சாண்ட்விச் எனக்கு ரொம்பப் பிடிக்கும்."

"எனக்கும்தான்."

"பின்னணியில கேட்கிற இந்த இட்டாலியன் இசையும் எனக்கு ரொம்பப் பிடிக்கும். எல்லாரும் பெரிய வட்டமா நின்னு, கையைக் கோத்துக்கிட்டு, சிரிச்சுக்கிட்டே துள்ளுறது மாதிரி, அப்படியே இட்டாலியின் சூரிய ஒளியையும், கடலையும், திராட்சைத் தோட்டங்களையும் இந்தக் குளிருக்குக் கொண்டு வந்துருது."

"நீ இட்டாலி போயிருக்கியே. எனக்கும் அங்கெல்லாம் போய்ப் பார்க்கணும்னு ஆசை. அங்கே காலாலே திராட்சைகளை மிதிச்சு ஆடிக்கிட்டே ஒயின் செய்யறதைப் பத்திக் கேள்விப்பட்டிருக்கேன். இது அதுக்கான இசையோ?"

"இப்போ இருக்கிற நிலைமையில மெடிட்டரேனியன் பக்கம் பிரயாணம் செய்றது அவ்வளவு சுலபமா இருக்காது, விது...."

பேச்சு தானாகவே தேய்ந்தது. சங்கடமான மௌனம். ரஞ்சி விரல் நகங்களால் கண்ணாடித் தம்ளர் மேல் தாளம் போட்டாள். விது எதிர்ச்சுவரில் மாட்டியிருந்த படத்தைப் பார்த்தாள். ஒரு இட்டாலியன் வில்லா. பூங்கொடிகள் அசையும் முற்றத்தில் வெயிலும் நிழலும் படர்ந்திருந்தன. அந்த வெயிலுக்கு அந்த நிழல் இதமாய்த் தெரிந்தது. தூரத்தில் நீலமாய் மெடிட்டரேனியன் கடல்.

பரிசாரகர் சாண்ட்விச் தட்டுகளையும், இரண்டு ஐஸ் டீக்களையும் மேசை மேல் வைக்கும் சப்தம் கேட்டதும் படத்திலிருந்து மீண்டாள் விது.

ஐஸ் டீயில் எலுமிச்சம் துண்டைப் பிழிந்து கொண்டே ரஞ்சி நேரடியாக விஷயத்துக்கு வந்தாள்.

"விது, நான் உங்கிட்டே பேசப் போறேன்னு ராஜிக்கும் தெரியும். ராஜி எனக்கு ஒரு கோடிதான் காட்டினாள். அனாவசியமா உன் சொந்த விஷயத்தில் தலையிடறேன்னு நினைச்சா நேரடியா நீ எங்கிட்டே சொல்லலாம். ஒரு சினேகிதியா நான் உங்கிட்டே பேசலாமா?"

போர்ட்டபெல்லோ காளான் மீது காய்ந்த மிளகாய் வற்றல் விதைகளைத் தூவிக் கொண்டிருந்த விது அவளை நிமிர்ந்து பார்த்தாள். பேசத் தொடங்கினாள்.

(தொடரும்)




ஒரு பணக்காரனுக்கு, 'கம்ப்யூட்டர், ஆணா, பெண்ணா?' என்று சந்தேகம் ஏற்படவே, பட்டிமன்றம் நடத்தினான்.

பெண்கள் அணி, 'கம்ப்யூட்டர் ஆண்தான்' என்று சொல்லி காரணங்களை அடுக்கியது.

1) அவனை வழிக்குக் கொண்டு வர, அவனது கவனத்தை நம் பக்கம் திருப்ப வேண்டும்.

2) அவனிடம் நிறைய விஷயங்கள் உண்டு; ஆனால் சுயமாக எதையும் உபயோகிக்கத் தெரியாது.

3) அவன் நம் பிரச்னைகளைத் தீர்க்கக் கூடியவன்; ஆனால் அவனே அதிகத் தொந்தரவும் தருவான்.

4) நாம் ஒருவனைத் தேர்ந்தெடுத்த பிறகு தான், 'இன்னும் கொஞ்சம் காத்திருந்தால் மேலும் நல்ல சாய்ஸாக அமைந்திருக்குமோ?' என்று தோன்றும்.

ஆண்கள் அணியோ, 'கம்ப்யூட்டர் பெண்தான்' என்று வாதாடியது.

1) அதைப் படைத்தவனுக்குத்தான் அதன் உள் விஷயங்கள் புரியும்.

2) தன்னை வெளிப்படுத்தவும், பகிர்ந்து கொள்ளவும் அவள் உபயோகிக்கும் செய்கைகள் பூடகமாக இருக்கும்.

3) நமது சிறிய குற்றங்களையும், பிற்பாடு பிரயோகிக்கும் வகையில், ஞாபகத்தில் வைத்துக் கொள்ளக் கூடியவள்.

4) நாம் அவளிடம் ஈடுபாடு கொண்டுவிட்டால், நம்மை அறியாமலேயே, நம் வருமானம் பாதிக்கு மேல் அவளுக்காகச் செலவாகி விடும்.

— கமலா, சென்னை – 17.

# கம்ப்யூட்டர் ஆணா, பெண்ணா?

இட்லியைப் பற்றி எழுத்துபூர்வமான முதல் ஆதாரக் குறிப்பு கி.பி 10ம் நூற்றாண்டில் கன்னடத்தில் சிவ கோட்டி ஆச்சார்யா எழுதிய 'வதார்தனே' என்னும் நூலில் காணப்படுகிறது. செல்வந்தர் ஒருவர் வீட்டுக்கு வந்த துறவிக்கு, பதினெட்டு வகையான உணவு பரிமாறப் பட்டது. அவற்றில் ஒன்று இட்லி என குறிப்பிடப் பட்டுள்ளது.

– கே. சுதர்ஷன், தூத்துக்குடி.

மராட்டிய மாமன்னன் சத்ரபதி சிவாஜி மன்னராகப் பொறுப்பேற்ற ஆண்டு: 21.7.1674

சிவாஜி பற்றிய வாழ்க்கை வரலாற்றை தொலைக்காட்சி நடிகர் திலகம் சிவாஜியின் முன்னுரையுடன் ஒளிபரப்பியது: 21.7.1974

நடிகர் திலகம் சிவாஜிகணேசன் மறைந்த தினம்: 21.7.2001

ஆதாரம்: 'தி ஹிந்து'

தகவல். ஆர். சச்சிதானந்தன்





இடுப்பில் புடைவை கட்டும் இடத்தில் இறுக்கிக் கட்டுவதால் சிலருக்குப் புண் ஆகிவிடும். கடுக்காயை, சந்தனக் கல்லில் உரைத்து, தடவி வந்தால் குணமாகி, புண் ஆறும்!

– பா. அச்சுதன்

துப்பாக்கியைத் தன் கொடியில் சின்னமாக வைத்துள்ள நாடு மொஸாம்பிக்.

சவுதி அரேபியாவின் கொடி மட்டும் எந்தச் சந்தர்ப்பத்திலும் கீழே இறக்கப்படுவது கிடையாது. காரணம், அந்தக் கொடியில் இஸ்லாத்தின் மூலமந்திரமான 'கலிமா' பொறிக்கப்பட்டிருப்பதே!

– இரா. ஆதிநாராயணன்,
தஞ்சாவூர் – 9.

ஒரு ரூபாய் செலவழிக்கும் முன் இருமுறை யோசி. ஒரு வார்த்தை பேசும் முன் நூறுமுறை யோசி.

– ஜப்பான் பழமொழி.

– உ. தங்கவேல் சரவணன்,
விக்கிரமசிங்கபுரம்.



காலியான பை நிமிர்ந்து நிற்க முடியாது. அறிவில்லாத மனிதன் உயர்ந்து நிற்க முடியாது.

– மிலண்ட்

–அரிச்சந்திரன்,
சென்னை – 41.




திருச்சி அரியமங்கலம் காட்டூரில் உள்ள ஒரு ஹோட்டலின் பெயர் 'மீசை.'

திருச்சியல் உள்ள ஒரு ஹோட்டலின் பெயர் 'வாழை இலை.'

– எஸ்.வி. பார்த்தசாரதி,
திருச்சி – 19.

# அச்சத்தில் மெப்ஸ் பெண்கள்



கொஞ்ச நஞ்ச மல்ல, ஆயத்த உடை தயாரிப்பில் சுமார் ஐம்பதாயிரம் பெண்கள் வேலை செய்கிறார்கள், சென்னை தாம்பரத்தில் உள்ள மெப்ஸ் வளாகத்தில், தையல் கருவிகளை இயக்குவதிலிருந்து, துணி வெட்டுவது தைப்பது பிரித்தெடுப்பது மற்றும் இஸ்திரி செய்வது ஆகியவை வரை இந்த நிறுவனங்களில் (தொண்ணூறு சதவீதம்) பெண்களின் சாம்ராஜ்யம்தான். இவர்களின் வேலை வாய்ப்பு சமீபத்தில் நியூயார்க்கின் வணிககோபுரங்கள் தாக்கப்பட்டதிலிருந்து கேள்விக்குறியாகிவிடுமோ என்ற அச்சம் தோன்றியிருக்கிறது.

தென்னைமரத்தில் தேள் கொட்டினால் பனை மரத்தில் நெறி கட்டுவானேன்? இதை அறிந்துகொள்ள இதோ கொஞ்சம் பின்னணி விவரங்கள்.

"மெட்ராஸ் எக்ஸ்போர்ட் ப்ராஸஸிங் ஸோன்" என்பதன் சுருக்கம்தான் மெப்ஸ். ஏற்றுமதியை ஊக்குவிக்கும் நோக்கத்தில் இதை சென்னையில் உருவாக்கியது மத்திய அரசு. இந்த வளாகத்தில் பல கட்டடங்களைக் கட்டி மத்திய அரசு பல்வேறு தொழிற்சாலைகளுக்கு வாடகைக்கு விட்டிருக்கிறது. தவிர தொழில் நிறுவனங்கள் தங்களது தேவைக்கேற்ப கட்டடம் கட்டிக் கொள்ள காலி மனைகளையும் ஒதுக்கீடு செய்கிறார்கள். இப்படி இந்த வளாகத்தில் இயங்கும் நிறுவனங்கள் ஆயத்த ஆடைகளை உருவாக்குபவை மட்டுமல்ல. தோல் பொருள்கள், வைரம் மற்றும் தங்க நகைகள், கம்ப்யூட்டர் உதிரிபாகங்கள், ஏற்றுமதிக்குத்



தேவையான கண்டெய்னர்கள் ஆகியவற்றைத் தயாரிக்கும் நிறுவனங்களும் உண்டு. இவற்றில் மிக அதிக அளவில் பெண்கள் பணியாற்றுவது ஆயத்த ஆடை நிறுவனங்களில்தான். என்ன காரணம்?

மேற்படி கேள்வியையும், இது தொடர்பான வேறு சந்தேகங்களையும் டாக்டர் சக்கரபாணி ஆனந்தனிடம் கேட்டோம். (இவர் டாக்டரேட் வாங்கியிருப்பது உடைகள் ஏற்றுமதிப் பிரிவில்). மெப்ஸ் வளாகத்தில் உள்ள முன்னணி ஆயத்த உடை தயாரிப்பு நிறுவனத்தின் மேலாளராக விளங்குகிறார். இவர். "பெண்களுக்கு இயல்பாகவே ஒரு கலா ரசனை உண்டு. பூத் தொடுப்பதிலிருந்து கோலம் போடுவதுவரை அவர்களது விரல்கள் செய்யும் சாகசங்கள் கொஞ்ச நஞ்சமல்ல. இது ஆயத்த உடை தயாரிப்புக்கு மிகவும் வேண்டியதோர் தன்மை. கல்வித்தகுதி குறைவாகவே உள்ளவர்களும் இதில் சேரலாம் என்பதும் ஒரு காரணம்" என்றார்.

மெப்ஸ் வளாகத்தில் தயாரிக்கப்படும் பொருள்கள் அனைத்தும் ஏற்றுமதிக்காக மட்டுமே. இதற்காகத்தான் அரசு இந்த நிறு வனங்களுக்கு மானியமும், ஏற்றுமதி வரியில் சலுகையையும் அளிக்கிறது.

என்ன விதமான உடைகள் எந்தெந்த நாட்டுக்கு ஏற்றுமதி செய்யப்படுகின்றன? ஜப்பானுக்கு குளிர்கால கோட்டு, ஜெர்கின் ஜாக்கெட், சட்டை மற்றும் நைட்கவுன்கள் ஏற்றுமதியாகின்றன. கோடையில் அணிந்து கொள்வதற்கு வசதியாக இவை 100 சதவீதம் பருத்தியினால் ஆனவை.

அமெரிக்காவுக்கு ஏற்றுமதியாகும் உடை வகைகள் குளிர் காலத்துக்கானவை. மழை மற்றும் பனியிலிருந்து முழுப்


• ஆனந்தன்



''இந்த ஜோக் எழுத்தாளரைக் கண்டுதான் எல்லாரும் பயப்படுவாங்க, உங்களைப் பார்த்துட்டு அவர் ஜகா வாங்கறாரே எப்படி?''

''அவர் ஜோக்கை ஆரம்பிக்கிறபோதே சிரிச்சிடுவேன்; சொல்லி முடித்ததும் முகத்தை சீரியஸா வச்சுக்கிடுவேன்...!''

— சீர்காழி ரேவதி



''அந்த லேடி டாக்டரை போலி டாக்டர்னு ஏன் சொல்றே?''

''பிரசவ வலி எடுத்த உடனே என்ன செய்யன்னு கேட்டதுக்கு அமிர்தஞ்சனமோ, அயொடெக்ஸோ தடவி ஒத்தடம் கொடுன்னு சொல்றாளே!''

– மேல்மங்கலம் பத்ரா



''என்னோட சந்தோஷம்தான் முக்கியம்னு என் அப்பா அடிக்கடி சொல்வாரு...''

''பின்னே என்ன, நம்ம காதலைப் பற்றி அவரிடம் தெரிவிச்சுட வேண்டியதுதானே...!''

''சொன்னேனே... என் சந்தோஷத்துக்காகத்தான் தடை விதிக்கிறதா அடிச்சுப் பேசிட்டாரு!''

– என். உஷா தேவி

பாதுகாப்பு அளிக்கக்கூடிய இந்த உடைகள் பாலிபிலிமினால் ஆனவை. மற்றும் பேட் (Pad) செய்யப் பட்டவை.

பின்லாந்து, இங்கிலாந்து, ஜெர்மனி போன்ற ஐரோப்பிய நாடுகளுக்கும் குளிர் கால உடைகள் தயாராகின்றன. என்றாலும் அமெரிக்க உடைகளைப் போல இவை கனமானக இருக்காது.

மெப்ஸ் வளாகத்திலிருந்து இப்படிப் பல்வேறு நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்படும் ஆயத்த உடைகளின் எண்ணிக்கை மாதத்துக்கு சுமார் நான்கரை லட்சம்.

மேற்படி விவரங்களை அளித்த ஆனந்தன், கட்டுரை தொடக்கத்தில் நாம் குறிப்பிட்டிருந்த அச்சத்தையும் வெளியிட்டார்.

''இதுவரை எந்தச் சிக்கலும் இல்லையென்றாலும், அமெரிக்கத் 'தாக்குதலுக்குப் பிறகு பல்வேறு கேள்விகள் எங்களை ஆட்டிப் படைக்கின்றன. இவற்றை ஆதாரம் இல்லாதவை என்று ஒதுக்கிவிட முடியாது. இப்போது அமெரிக்க மக்களில் பலருக்கும் ஒரு பாதுகாப்பில்லாத உணர்வு ஏற்பட்டிருக்கிறது. இதைத் தொடர்ந்து அவர்கள் விதவிதமாக உடுத்துவதில் கவனம் செலுத்தாது போனால்? மரணபயம் சூழ்ந்திருக்கும் போது கொண்டாட்டங்கள் குறையுமே. கொண்டாட்டமான பொது விழாக்களில்தானே புதிய ஆடைகளை வாங்கியணிவோம்! ஒரு வேளை பயங்கரவாதிகள், சில சக்திகளின் துணையோடு, அமெரிக்கா மீது மறுதாக்குதல் நிகழ்த்தினால்? அதனால் இப்போது வல்லரசாகவே இருக்கும் அமெரிக்காவிலும் பொருளாதாரச் சரிவு ஏற்பட்டால்? இது போன்ற கேள்விகள் நிஜமாகிவிட்டால் அது ஆயத்த உடை தயாரிப்பு நிறுவனங்களையும், அங்கு பெருமளவில் பணியாற்றும் பெண்களையும் நிச்சயம் பாதிக்கும்.''

பயங்கரவாதமும், யுத்தங்களும் உலகில் இல்லாமல் போகட்டும் என்ற நமது பிரார்த்தனைக்கு இப்போது மேலும் ஒரு வலுவான காரணம். ○

“இருபத்து நாலாயிரம் ரூபாய் விலையுள்ள ஒரு பொம்மையை ஸ்வீடன் நாட்டிலிருந்து வரவழைத்து, அதற்கு உடையலங்காரம் செய்யும் பொறுப்பை மயிலாப்பூர், 'ஹாட் பிரெட் ஸ்நாக்ஸ் சென்டர்' நிர்வாகத்தினர் என்னிடம் கொடுத்தபோது, எனக்கு ரொம்பவே த்ரில்லிங்காக இருந்தது. மனசுக்குள் ஒரு வேகம் தோன்ற, உடனே சில உடைகளை வடிவமைத்து, தயாரித்து, இரண்டே நாட்களில் அதற்கு அணிவித்துவிட்டேன். இப்போது அந்த லேடி செஃப் டால், ஸ்நாக்ஸ் சென்டர் நுழைவாயிலில் ஒரு கையில் பாத்திரத்தை வைத்துக்கொண்டு, இன்னொரு கையில்

# கலக்குது பாருங்க ஃபேஷன்!



கரண்டியால் முட்டையைக் கலக்கிக் கொண்டிருக்கிறது” (பார்க்க: படம்) என்றார் கீதா விஸ்வநாதன்.

ஆடையலங்காரத்துக்கான படிப்பில் டிப்ளமா பெற்ற இவர், ஸ்பென்ஸர் பிளாசாவில் 'ப்ரேயஸி' என்ற ஃபேஷன் நிறுவனம் நடத்தி வருகிறார்.

'தமிழ்நாட்டின் சிறந்த தொழில் முனைவோர்' விருது பெற்ற இவரது நிறுவனம் 'இமேஜ் கன்சல்டன்ஸி' சேவையை சமீபத்தில் தொடங்கியிருக்கிறது. இதன்மூலம் வாடிக்கையாளரின் வயது, உடலமைப்பு, நிறம், பட்ஜெட், சீதோஷ்ண நிலை போன்றவற்றுக்கு ஏற்ப ஆடைகளை வடிவமைத்துக் கொடுக்கிறார்கள்.

“ஒரு வித்தியாசமான கல்யாண அனுபவம். மாப்பிள்ளை லண்டனில். கல்யாணப் பெண் இருப்பதோ அமெரிக்காவில். மாப்பிள்ளை வீட்டார் ஐதராபாத். பெண்ணோட பெற்றோர் இங்கே சென்னையில். திடீர் கல்யாணம்



• 'ப்ரேயஸி' உடைகள்

என்பதால், ஷாப்பிங் செய்ய நேரமில்லை. கல்யாணப் பெண்ணோட தாயார் என்னிடம் வந்து, 'மணமக்களோட உடைகளை நீங்கதான் தயாரிச்சுக் கொடுக்கணும்'னு கேட்டுக்கிட்டாங்க.



• 'விரும்புகிறேன்' படத்தில்...

"நான் பெண், மாப்பிள்ளை இரண்டு பேரையும் ஈமெயிலில் தொடர்பு கொண்டு, அவங்களோட லேட்டஸ்ட் ஃபோட்டோவை வாங்கிக்கிட்டேன். அவங்களோட ரசனைக்கேற்ப, கல்யாண உடைகளை தைத்து, ஹைதராபாத்தில் கல்யாணம் நடக்கவிருந்த மண்டபத்துக்கே கூரியர் மூலம் அனுப்பி வைத்தோம்.

"அதெப்படி... அவ்வளவு கச்சிதமா



• கீதா



• விஜய்

நேரில் பார்த்து அளவெடுத்து தைச்ச மாதிரி, வடிவமைக்க முடிஞ்சது?'னு எல்லாருக்குமே ஆச்சரியம்."

"இன்னொரு சம்பவம். மத்திய தர குடும்பத்தைச் சேர்ந்த ஒரு வங்கி அதிகாரியோட மனைவி என்னோட வாடிக்கையாளர். ராணி மெய்யம்மை ஹாலில், ஒரு கல்யாணம். ரொம்ப வசதியான பெரிய வீட்டுக் கல்யாணம். அதிலே கலந்துக்கற அளவுக்குத் தம்மிடம் ரிச்சான புடைவை இல்லை என்பதால், கௌரவமான ஒரு டிரஸ் டிஸைன் பண்ணித் தரும்படி கேட்டாங்க. அவங்க பட்ஜெட் என்ன தெரியுமா? 1500 ரூபாய்! "நான் உடனே ஒரு ஷிஃபான் புடைவையை எடுத்துக் காட்டி, 'இதை எடுத்துக்கோங்க' என்றேன்.

"என்னங்க... நல்ல கிராண்டா வேணும்னு கேட்டா, நீங்க வெறும் ஐந்நூறு ரூபாய் புடைவையை எடுத்துத் தர்றீங்க?'னு நொந்துட்டாங்க.

"அவசரப்படாதீங்க... புடைவை விலைதான் ஐந்நூறு. அதுக்கு மேட்சா நான் டிஸைன் பண்ணப் போற ரவிக்கையில் தான் விஷயமே இருக்கு. நீங்க நாளைக்கு வாங்க'னு சொல்லி அனுப்பிட்டேன். அவங்களுக்கு நம்பிக்கையே இல்லை; தயக்கத்தோட போனாங்க!

"மறுநாள், நாங்க ஸ்பெஷலா சில்க்ல, எம்பிராய்டரி போட்டு, அவங்களுக்காகவே டிஸைன் பண்ணி தயாரிச்சிருந்த ரவிக்கையைக் காட்டியதும், ரொம்ப சந்தோஷமாயிட்டாங்க.

• லண்டன் ஃபேஷன் ஷோ





● நமக்கு ஞாயிறு விடுமுறை. கிரீஸ் நாட்டில் திங்கள் விடுமுறை. பாரசீகத்தில் செவ்வாய் விடுமுறை. சிரியாவில் புதன் விடுமுறை. எகிப்தில் வியாழன் விடுமுறை. ஐக்கிய அரபு நாடுகளில் வெள்ளி விடுமுறை. இஸ்ரேலில் சனி விடுமுறை.

–பொது அறிவுப் பெட்டகத்திலிருந்து
எஸ்: சுவாமிநாதன்

"ப்ளவுஸோட விலை ஆயிரம் ரூபாய்'னாலும் கவலையேபடாமல் எண்ணிக் கொடுத்துட்டுப் போயிட்டாங்க. ஒரு வாரம் கழிச்சு திரும்பி வந்து, 'ரொம்ப தாங்க்ஸ் மேடம். அந்தக் கல்யாணத்துலே எனக்கு ரொம்ப மரியாதை. வந்தவங்க எல்லாருக்குமே என் ப்ளவுஸ் மீதுதான் கண்ணு! 'எங்கே வாங்கினே? என்ன விலை?'னு துளைச்சு எடுத்துட்டாங்க!' என்று வாயெல்லாம் பல்லாக, பூரித்துப் போயிட்டாங்க. அந்த சந்தோஷத்தைத்தாங்க நாங்க பெரிசா நினைக்கிறோம்" என்றார் கீதா.

கீதா விஸ்வநாதனின் மகன் விஜய் விஸ்வநாதன், என்.ஐ.எஃப்.டி மாணவர். 'கள்ளழகர்,' 'மறுமலர்ச்சி' படங்களில் பாடல் காட்சிகளில் காஸ்ட்யூம் டிஸைனராகப் பணியாற்றியவர். 'விரும்புகிறேன்' படத்தில் இவர் டிஸைன் செய்த உடைகள் பிரசாந்த், ஸ்நேகாவின் ஸ்பெஷல் பாராட்டு பெற்றிருப்பதில் விஜய்க்கு ரொம்ப சந்தோஷம்.

அனுராதா ஸ்ரீராமின் வீடியோ ஆல்பம், எம்.ஆர்.எஃப், ரீகல் வாஷிங் ப்ளூ, பரணி சில்க், கோ ஆப்டெக்ஸ், ஸ்பிரைட் குளிர்பானம், மீரா ஹேர் ஆயில் போன்ற விளம்பரப் படங்களின் ஆடைகளும் இவர் டிஸைன் செய்து கொடுத்தவைதானாம்.

லண்டனில், ஐந்து வருடங்களுக்கு முன் நடைபெற்ற உலக நாடுகளின் ஃபேஷன் ஷோவில் பிரேயஸி சார்பில் கலந்துகொண்டு, தாம் வடிவமைத்த ஆடைகளுக்கு 'பெஸ்ட் பிரைடல் வேர்' விருதை தட்டிக் கொண்டு வந்த விஜய், பெருமைப்பட்டுக் கொள்ளும் இன்னொரு விஷயம் காதி கிராமோத்யோக்பவனின் ஆர்டர் சமீபத்தில் கிடைத்திருப்பது.

"காதி உடைகள் என்றாலே சிம்பிளாக இருக்கும். அந்த டிரெண்டை மாற்றவிருக்கிறோம். பிரேயஸியின் வித்தியாசமான நிறங்களை, வெரைட்டியான டிஸைன்களை, காதியில் அறிமுகப்படுத்தும் மிகப் பெரிய பொறுப்பை இந்திய அரசாங்கம் தந்திருக்கிறது. இனி, காதியிலும் நவநாகரிக ஃபேஷனை எதிர்பார்க்கலாம்" என்கிறார் விஜய் விஸ்வநாதன்.

— மடிப்பாக்கம் வெங்கட்
படங்கள்: **யோகா.**







– அம்பை தேவா.



# ஆஸ்துமா, ஈஸ்னோபிலியா, அலர்ஜி, சைனஸ், காசநோய்களுக்கு தெய்வீக மூலிகை சிகிச்சை



பல வருட ஆராய்ச்சியின் மூலம், வேதங்களும், ஞானிகளும் போற்றியதும், கடவுளுக்கு சமமாகவும், நம் நாட்டின் பல பொக்கிஷங்களில் ஒன்றாகவும் கருதக் கூடிய பல தெய்வீக மூலிகைகளைக் கொண்டு பக்க விளைவுகள் இல்லாதவகையில், தாமே தயார் செய்த தெய்வீக மூலிகை மருந்துகள் மூலம் குழந்தைகளுக்கு வரும் பிரைமரி காம்ப்ளக்ஸ், எதிர்ப்பு சக்தி குறைவின் காரணமாக வரும் டஸ்ட் அலர்ஜி, சீதோஷ்ண நிலை மாற்றத்தால் வரும் மூக்கில் நீர் வடிதல், சளி, தும்மல், தொடர் இருமல், சுவாசிக்க முடியாதபடி மூக்கடைப்பு, சைனஸ், தொண்டை கரகரப்பு, தலைவலி, மலச்சிக்கல், ஈஸ்னோபீலியா, மூச்சு விடும் போது விசில் சத்தம் வருதல் (நின்றால் - நடந்தால் - படுத்தால் - மூச்சு வாங்குதல்) சாப்பிட முடியாமை, உடல் மெலிவு, உடல் வெளுத்து காணப்படுதல் போன்ற அறிகுறிகளை உடைய **ஆஸ்துமா** நோய்களுக்கு சிறப்பான சிகிச்சை அளிக்கப்படுகின்றது மற்றும் **எய்ட்ஸ், எல்லாவித புற்றுநோய், BP இதய நோய், சிறுநீரக கோளாறு, சர்க்கரை வியாதி, ஆண்மைக் குறைவு, குழந்தையில்லாத குறை, அல்சர் மூட்டுவலி, சொரியாசிஸ்** போன்றவைகளுக்கு சிறப்பான ஆலோசனைகளுக்கும் & சிகிச்சைக்கும் அணுக வேண்டிய முகவரி.



*தெய்வீக மூலிகை வைத்தியர்கள்*

தலைமை முகவரி : Dr.M.குருபரன் & Dr.M.சபாபதி, Dr.M.சிவசக்தி, S/o Dr.C.K.மாணிக்கவாசகம்

P.B.No.30, No.3, திருநாத முதலி நகர், (காலேஜ் எதிரில்), திருப்பத்தூர், வேலூர் Dt. - 635 601 ✆ 04179-20469, 22769

சென்னை கிளை : 115, புரசைவாக்கம் நெடுஞ்சாலை, (பிரின்ஸ் மேனர் பக்கத்தில்) கெல்லீஸ், சென்னை - 10

இரு முகவரிகளின் ஆலோசனை நேரம் தினமும் காலை 10 to 1, மாலை 5 to 7 ✆ 6424285, 6427638

## ஒவ்வொரு மாதமும் வெளியூர்களில் டாக்டரை நேரில் சந்திக்க

| | | | | |
|---|---|---|---|---|
| **வேலூர்**<br>2ந் தேதி - 12 pm to 2 pm<br>(N.S.R.லாட்ஜ்) 26/A, ஆரணி ரோடு,<br>(கண் ஆஸ்பத்திரி அருகில்)<br>✆ : 0416 - 213159 | **காஞ்சிபுரம்**<br>2ந் தேதி - 5 pm to6 pm<br>ராஜம் லாட்ஜ், (பஸ் நிலையம் அருகில்) காமராஜர் தெரு,<br>✆ : 04112 - 22519 | **கடலூர்** (S.A.Dt.)<br>4ந் தேதி - 9 am to 11 am<br>ஆர்காடு உட்லண்ட்ஸ் ஹோட்டல்,<br>✆ : 04142 - 30707, 30717 | **விழுப்புரம்**<br>4ந் தேதி - 2 pm to 3 pm<br>ஹோட்டல் ஆனந்தா,<br>பஸ் நிலையம் எதிரில்,<br>✆ : 04146 - 22962, 24960 | **திருவண்ணாமலை**<br>4ந் தேதி - 5pm to 6 pm<br>ராதா லாட்ஜ்,<br>(பஸ் நிலையம் எதிரில்)<br>✆ : 04175 - 22536 |
| **மும்பை**<br>7 & 8ந் தேதி - 10 am to 8 pm<br>The South Indian Concerns Ltd.,<br>401, Telang Road, Matunga (CR),<br>✆ : 022 - 4011589 | **பெங்களூர்**<br>9ந் தேதி - 11 am to 1 pm<br>ஹோட்டல் பிரட்வே, (கல்பனா தியேட்டர் அருகில்) கெம்பகவுடா ரோடு. ✆ : 080-2266374,2873013 | **ஒசூர்**<br>9ந் தேதி - 4 pm to 5 pm<br>சீனிவாசா லாட்ஜ்,<br>பாகலூர் ரோட்,<br>✆ : 04344 - 42899, 43321 | **சேலம்**<br>12ந் தேதி - 11 am to 1 pm<br>ஹோட்டல் செல்வம்,<br>புதிய பஸ் நிலையம் எதிரில்,<br>✆ : 0427 - 449333, 449332 | **ஈரோடு**<br>12ந் தேதி - 4 pm to 6 pm<br>ஹோட்டல் ஆக்ஸ்போர்ட்,<br>பஸ் நிலையம் எதிரில்,<br>✆ : 0424 - 226611/12/13/14 |
| **கோயம்புத்தூர்**<br>13ந் தேதி - 9 am to 1 pm<br>சேரன் பேலஸ் லாட்ஜ்<br>(சாந்தி தியேட்டர் பின்புறம்)<br>✆ : 0422 - 302211, 302220 | **மதுரை**<br>14ந் தேதி - 9 am to 11 am<br>ஹோட்டல் கிரண்ட்ஸ் சென்ட்ரல்,<br>மேலப் பெருமாள் மேஸ்திரி தெரு,<br>✆ : 0452 - 743941 | **தஞ்சாவூர்**<br>14ந் தேதி - 5 pm to 7 pm<br>அசோகா லாட்ஜ்,<br>தஞ்சாவூர்.<br>✆ : 04362 - 30021, 30022 | **திருச்சி**<br>15ந் தேதி - 9 am to 11 am<br>ஹோட்டல் ஆனந்த், (சென்ட்ரல் பஸ் நிலையம் அருகில்)<br>✆ : 0431 - 415545 | **நாமக்கல்**<br>15ந் தேதி - 2 pm to 4 pm<br>ஹோட்டல் தேவி அன்னபூர்ணா,<br>நாமக்கல்.<br>✆ : 04286 - 20433, 21336 |
| **நியூடெல்லி**<br>[illegible] & 19ந் தேதி - 10 am to 8 pm<br>South Indian Hotel, 10211, Padam Singh Road, Ajmal Khan Road, Karol Bagh. ✆ : 011-5717126,5723651 | **தர்மபுரி**<br>22ந் தேதி - 8 am to 10 am<br>ஸ்ரீ மாதேஸ்வரா லாட்ஜ், 103,<br>அதியமான் பைபாஸ் ரோடு,<br>✆ : 04342 - 60226, 61472 | **திருப்பூர்**<br>22ந் தேதி - 2 pm to 3 pm<br>ராமகிருஷ்ணா லாட்ஜ்,<br>ஈஸ்வரன் கோவில் தெரு,<br>✆ : 0421 - 740418 | **உடுமலைப்பேட்டை**<br>22ந் தேதி - 6 pm to 7 pm<br>ஹோட்டல் குறிஞ்சி,<br>(பஸ் நிலையம் எதிரில்)<br>✆ : 04252 - 24353 | **திண்டுக்கல்**<br>23ந் தேதி - 9 am to 11 am<br>ஹோட்டல் குறிஞ்சி,<br>பஸ் நிலையம் பின்புறம்,<br>✆ : 0451 - 421056, 427017 |
| **தூத்துக்குடி**<br>23ந் தேதி - 5 pm to 6 pm<br>ஹோட்டல் ஆல்வின்,<br>தேவர்புரம் ரோடு,<br>✆ : 0461 - 327780 | **திருநெல்வேலி**<br>24ந் தேதி - 8 am to 11 am<br>ஹோட்டல் ஸ்ரீ சித்ரபதி,<br>மதுரை ரோடு,<br>✆ : 0462 - 333312 | **நாகர்கோவில்**<br>24ந் தேதி - 2 pm to 3 pm<br>ஹோட்டல் சரண்யா,<br>மீனாட்சிபுரம்<br>✆ : 04652 - 36078 | **விருதுநகர்**<br>25ந் தேதி - 8 am to 10 am<br>அண்டன் லாட்ஜ்,<br>மதுரை ரோடு,<br>✆ : 04562 - 45537 | **கரூர்**<br>25ந் தேதி - 2 pm to 4 pm<br>அரசி லாட்ஜ்,<br>ஜவகர் பஜார்<br>✆ : 04324 - 63763, 62663 |

**தகவல்** : SUN, RAJ, VIJAY, DD T.V. களில் எமது பேட்டியை காணத் தவறியவர்கள், டாக்டரின் மூலிகைகள் பற்றிய 26 வருட அனுபவ ஆராய்ச்சிகள் அடங்கிய **"எளிய முறையில் பிணி அகற்றும் தெய்வீக மூலிகைகள்"** இயற்கை உணவுகளின் பெருமைகள், அதிசய உண்மைகள் அடங்கிய **"என்றும் இளமை காக்கும் இயற்கை உணவுகள்"** என்ற இரு புத்தகத்தையும் பதிவுத் தபாலில் பெற ரூ.130/- மேற்கண்ட முகவரிக்கு D.D. அல்லது M.O. அனுப்பவும்.



**தீபாவளி நெருங்கிடுச்சே! பெண்கள் தங்களுக்குப் பிடித்த புடைவைகளைக் கடை கடையாக ஏறி இறங்கி வாங்கி வைத்து விடுவார்கள். அப்போதுதான் 'தீபாவளி மூட்' வரும். 'இந்தத் தீபாவளிக்கு வந்திருக்கும் லேட்டஸ்ட் நிறங்களை விளக்கி, உங்கள் புடைவை ஆசையைப் பெரிதாக ஊதி விடுகிறார், தி.நகர் 'விஜய் பொட்டீக்' சாந்தா விஜயராகவன்.**

# வண்ணக்

தீபாவளி புடைவை விற்பனை ஆரம்பமே அமர்க்களமாக இருக்கிறது. மற்ற புடைவைகளை விட பட்டுப் புடைவைகளும், பட்டு நூல் கலந்த புடைவைகளும் அதிகமாக விற்பனையாவது தீபாவளி சீசனில்தான்.

தனிப்பச்சை, கறுப்பு இந்த இரண்டு வண்ணங்களையும் தீபாவளிக்கு பெண்கள் அதிகம் வாங்குவதில்லை. பச்சை நிறத்தை சீமந்தத்தின்போது கட்டாயமாக வாங்கி விடுவதனால் செலக்‌ஷன் என்னும் போது பச்சையைத் தவிர்த்து விடுகிறார்கள். ஆனால் பச்சையோடு பொருந்தக்கூடிய, வெல்வெட் க்ரீன், ஆலிவ் க்ரீன், வாஸ்லின் க்ரீன், ஸஃபையர் க்ரீன்... முதலியன பெண்களுக்குப் பிடித்தமான நிறங்கள்.

லைட் பேல், டஸ்ட் ப்ரௌன், டிம் கிரே போன்ற டல்லான நிறங்களைக் காட்டிலும், டார்க் ஷேடுகளில் 'ரிச் பல்லு' வைத்த புடைவைகள்தான் மளமளவென்று விலை போகும்.

மெரூன், ஜெர்மன் ப்ளூ, சந்திரிகா, அபிராமி, ஃபாண்டா ஆரஞ்சு போன்ற நிறங்கள் மகளிர் விருப்ப நிறங்கள். இந்த வருட தீபாவளிக்கு என ஸ்பெஷலாக புதுமையான நிறங்களில் 'வத்ஸ' சாரிஸ் என்ற நூதன புடைவையை வடிவமைத்திருக்கிறோம் பொதுவாகவே, ஆரணி என்றாலே பட்டுக்குப் பிரசித்தி என்பது தெரிந்ததுதான். ஆனால் அதே ஆரணியில் உள்ள எங்கள் தறியில் பட்டு போன்ற ஃபினிஷிங் உள்ள காட்டன் புடைவைகளை நெய்து தரச் சொல்லி அறிமுகப்படுத்தியிருக்கிறோம்.

பருத்தி நூலின் மென்மையான இழை, ஆனால் பட்டுப் புடைவையின் உயர்ந்த நேர்த்தி, இரண்டும் கலந்த ரிச் லுக் பு வையாக இருப்பது இதன் தனி அம்ச விலை என்ன தெரியுமா? ஆயிரத்துக்குள்

ரம்பா, ஷாட் க்ரீன், ஷாட் ப்ளூ, கமல் பிங்க், கனகாம்பரா போன்ற புதுமையான நிறங்களில் பாரம்பரிய டிஸைன் பார்டர் கொண்ட இந்த 'வத்ஸ்' புடைவைகளை, காட்டன் புடைவை என்று சொன்னால்தான் தெரியும். அப்படி

யொரு பளபளப்பு.

இந்தப் புடைவைகளின் முக்கிய சிறப்பம்சம் ஸ்டார்ச் போடத் தேவையில்லை. டிரைவாஷ், பெட்ரோல் வாஷ்... ஊஹூம்... சாதாரணமாக, துவைத்து, கையாலேயே நீவி மடித்து விடலாம்! கசங்காது; சுருங்காது.

கல்லூரி மாணவிகளுக்கென்றே, இதே 'வத்ஸி' ரகத்தில், சுரிதார் மெட்டீரியலும் தருவித்துள்ளோம். உடலும், பைஜாமாவும் பிளெயினாகவும், டாப் மட்டும் ஜரி கலந்து, மிக அழகாக இருப்பதால், இளம் பெண்களிடையே நல்ல வரவேற்பு பெற்றிருக்கிறது.

தீபாவளி என்றால் பட்டு தான் வாங்கணும் என்றில்லாமல், டோரியா கட்டங்களில், அழகான 'பத்திக்' வேலைப்பாடு செய்யப்பட்ட புடைவைகள் வாங்கி அணியலாம். ஜரிகையே இல்லாமல், வேல்தாரி டிஸைன்களில், நானூறு ரூபாயிலிருந்து நான்காயிரம் ரூபாய் வரை, காட்டன் மிக்ஸ், சில்க் வெரைட்டி புடைவைகள் குவிந்து கிடக்கின்றன.

இந்த ரகப் புடைவைகளோடு, மைசூர் பிரிண்டட் சில்க், எல்லோரா, நவரத்தினா, கல்யாண ராசி, கிரேப் போன்ற புடைவைகளும் எக்கச்சக்கமாக விற்பனையாகும் என்று எதிர்பார்க்கிறோம்.

- ஆர்.லலிதா

# கனவுகள்...



# ஸ்ரீ சாரதா சக்தி பீடம்



72, காமராஜ் சாலை, பழைய பெருங்களத்தூர்,
(வழி) தாம்பரம், சென்னை - 63. Tel & Fax: 237 6129.
E-mail: sspeetam@md3.vsnl.net.in, sspeetam@hotmail.com
Please visit our Website at: www.sspeetam.org

# தீபாவளி நல்வாழ்த்துக்கள்

## ஏழை மாணவர்களுக்கு உதவுங்கள்

பேரன்புடையீர்! வணக்கம்

நம் சக்தி பீடத்தின் சார்பில் கடந்த 14 ஆண்டுகளாக நடைபெற்று வரும் "ஸ்ரீ ராமகிருஷ்ண சேவா குருகுலத்தில்" தாய், தந்தையற்ற, திக்கற்ற 120 மாணவர்களும் 30 மாணவிகளும் தங்கி படித்து வருகின்றனர்.

நாள்தோறும் இறைவழிபாடு, கூட்டு பிரார்த்தனை, பகவத்கீதை பாராயணம் ஆகியவைகளுடன், நல்ல கல்வி, காலை, மாலை உடற்பயிற்சி ஆகியவைகள் அளிப்பதுடன் உணவு, உடை, தங்குமிடம் ஆகியவைகளும் இலவசமாக வழங்கப்பட்டு நல்ல முறையில் வளர்ந்து வருகிறார்கள்.

மேலும் பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர் ஆகியோர்களின் உயர்ந்த லட்சியங்கள் போதிக்கப்படுவதுடன், சமுதாய சேவை பயிற்சியும் அளிக்கப்படுகிறது.

இக்குருகுலத்தின் பராமரிப்பு செலவு முழுவதும் நன்கொடையாளர்கள் அளிக்கும் உதவிகள் மூலம் மட்டுமே நடைபெற்று வருகிறது. ஆகவே, தாங்கள் இப்புனிதப் பணிக்கு தங்களால் இயன்ற உதவியைச் செய்யும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

| | | |
|---|---|---|
| • காலை சிற்றுண்டி (150 பேருக்கு) | ரூ. | 1,000/- |
| • மதிய உணவு | ரூ. | 2,000/- |
| • இரவு சிற்றுண்டி | ரூ. | 1,000/- |
| • இனிப்பு மற்றும் பால் வழங்குதல் | ரூ. | 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு ஓராண்டிற்கு கல்வி உதவித் தொகை | ரூ. | 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு பராமரிப்பு செலவு ஓராண்டிற்கு (உணவு, உடை, கல்வி) | ரூ. | 12,000/- |
| • குருகுலத்தின் ஒரு மாதத்திற்கான பராமரிப்பு செலவு | ரூ. | 2,00,000/- |

மேலும் தங்களின் பிறந்த நாள், திருமண நாள், குழந்தைகளின் பிறந்த நாள், தொழில் / வியாபாரம் தொடங்கிய நாள், மற்றும் இதர பண்டிகை நாட்களான தீபாவளி, பொங்கல், கிறிஸ்துமஸ், ரம்ஜான் போன்றவைகளில் மாணவர்களுக்கு சிறப்பு விருந்து ஒன்றை அளித்து அவர்களுடன் மகிழ்ச்சியை பகிர்ந்து கொள்ளலாம்.

தாங்கள் அளிக்கும் தொகை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்கிறோம். தங்கள் நன்கொடைகளை "ஸ்ரீ சாரதா சக்தி பீடம்" என்ற பெயருக்கு **Cheque / DD / MO** மூலம் அனுப்பி வைக்கும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

நன்கொடைகளுக்கு 80G பிரிவின்படி
வருமானவரி விலக்கு உண்டு.

இறைவன் தொண்டில்
சுவாமி ஸ்ரீ ஸர்வாத்மானந்தர்

ஓம் நமோ பகவதே ராமகிருஷ்ணாய:







# விவேகானந்தர் தேசீய இயக்கம்

72, காமராஜ் நெடுஞ்சாலை, பழைய பெருங்களத்தூர், (வழி) தாம்பரம்,
சென்னை - 600 063. தொலைபேசி: 237 6129.

## தீபாவளி நல்வாழ்த்துக்கள்

## 702 கிராமங்களில் பயிலும் 24,600 ஏழை மாணவர்களுக்கு உதவுங்கள்!

பேரன்புடையீர்! வணக்கம்

கிராமப்புறங்களில் படிக்கும் வசதியற்ற மாணவ, மாணவிகளுக்கு மாலை நேரங்களில் ஓராசிரியர் பள்ளி என்கின்ற முறையில், படித்த, வேலையில்லாத இளைஞர்கள், மற்றும் பெண்களைக் கொண்டு ஏழு மாவட்டங்களில், 702 கிராமங்களில் 24,600 மாணவ, மாணவிகளுக்கு ஆன்மீகப் பயிற்சியுடன் கூடிய இலவசக் கல்வி அளிக்கப்பட்டு வருகின்றது. அத்துடன் பகவான் ஸ்ரீ இராமகிருஷ்ணர், தூய அன்னை சாரதா தேவியார், வீரத் துறவி சுவாமி விவேகானந்தர் ஆகியவர்களின் உபதேசங்களும், மற்றும் ஜெபமும், தியானப் பயிற்சியும் அளிக்கப்படுகிறது. மேலும் சமய சமரசம், மதநல்லிணக்கம், சமூக ஒற்றுமை ஆகியவை வலியுறுத்தப்படுகின்றன.

ஒவ்வொரு மையத்திலும் (பள்ளி) 35 மாணவ, மாணவிகளுக்கு மாலையில் 2மணிநேரம் ஆன்மீகத்துடன் கூடிய கல்வியை அவர்களுக்கு அளிப்பதால் இளம் வயது முதல் ஒழுக்கத்துடன் வாழ்வதற்கு வாய்ப்பு ஏற்படுகின்றது.

அனைத்து மையங்களிலும் மாதந்தோரும் பௌர்ணமியன்று பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணருக்குச் சிறப்பு பூஜையுடன், உலக அமைதிக்காகவும், மக்களின் நல்வாழ்விற்காகவும் கூட்டு வழிபாடு செய்து 24,600 மாணவ, மாணவிகளுக்கும் ஒருவேளை அன்னதானம் வழங்கப்படுகிறது.

- ஒரு மையத்தின் ஒரு மாதத்திற்கான பராமரிப்புச் செலவு (பௌர்ணமி பூஜை உட்பட) ரூ. 900/-
- ஒரு மையத்தின் ஓர் ஆண்டின் பராமரிப்புச் செலவு (நோட்டுப்புத்தகங்கள் மற்றும் பௌர்ணமி பூஜை உட்பட) ரூ. 12,000/-
- 702 மையங்களுக்கும் பராமரிப்பு செலவு ஒரு மாதத்திற்கு ரூ. 6,30,000/- (இலட்சம்)

நன்கொடையாளர்கள் Cheque / D.D / M.O. மூலம் **VIVEKHANAND NATIONAL MOVEMENT** என்ற பெயருக்கு அனுப்பி வைக்கும்படி தாழ்மையுடன் கேட்டுக் கொள்கிறோம்.

இறைவன் தொண்டில்

ராஜா பக்கிரிசாமி M.Sc., M.Ed., M.Phil., Ph.D.,
மாநிலத் தலைவர்

சுவாமி ஸ்ரீ சர்வாத்மானந்தர்
நிறுவனர் மற்றும் பொதுச்செயலாளர்.

நன்கொடைக்கு வருமான வரி விலக்கு உண்டு

# தொலைத்தவை எத்தனையோ!

பிறந்தவுடன்
கருவறையைத்
தொலைத்தோம்

தன்னலமாய்
இருந்து
நட்பைத்
தொலைத்தோம்.

வெளிப்படையாய்ப் பேசி
உறவைத் தொலைத்தோம்

தூக்கத்தில் ஆழ்ந்து
இரவைத் தொலைத்தோம்

அரசியல் பேசி
நேரத்தைத் தொலைத்தோம்.

இருப்பிடம் தேடி
இயற்கையைத் தொலைத்தோம்

கஞ்சனாய்
இருந்து
பெயரைத்
தொலைத்தோம்.

கடன்பட்டதால்
வாழ்வைத்
தொலைத்தோம்.

வாழ்க்கை முடிந்ததும்
உயிரைத் தொலைத்தோம.

'எதை நீ கொண்டு வந்தாய்
அதை நீ இழப்பதற்கு?'

என்கிறது கீதை.

கொண்டு வராமலே
இத்தனை தொலைத்த
நாம்
கொண்டு வந்திருந்தால்...?

ப்ரணா

# உங்கள் வீட்டுக்கு

ஓம் சரவணபவ தரும்

தரமான- தெய்வீக

# 5 தீபாவளிப் பரிசுகள்!



சரவணபவ

காஞ்சி மகாப்பெரியவர் அருளியபடி

யமபயம் போக்கும் தீபம்

பிரதிக்கு முன்பதிவு செய்யவும்!

## நந்தா விளக்கு

(20 ரூபாய் மதிப்புள்ளது)

இரண்டு புத்தகங்கள்!

சகல செல்வங்களுக்கும் அதிபதியான

## லக்ஷ்மி-குபேரன்

(வண்ண ஸ்டிக்கர்)

நந்தா விளக்கை வைக்க

## ஐஸ்வர்ய கோலம்

(வண்ண ஸ்டிக்கர்)

ஹரித்துவாரிலிருந்து கொண்டுவரப்பட்ட

## புனித கங்கை தீர்த்தம்

(ஸாஷே பாக்கெட்டில்)

காசி காலபைரவர் முன் பூஜிக்கப்பட்ட

## காசிக்கயிறு

மற்றும்

## காசி விசாலாட்சி குங்குமப் பிரசாதம்

தீபாவளியைச் சிறப்பிக்கும்

# 2-புத்தகங்கள் 5-பரிசுகள்

தொடர்புகொள்ள :- 105, ஜானி ஜான்கான் சாலை, இராயப்பேட்டை, சென்னை-14

● ஏகப்பட்ட அராஜகம் செய்தும், குறைந்த மார்ஜினில் ஸ்டாலின் வெற்றி பெற்றதை ஆளும் கட்சியால் ஜீரணித்துக் கொள்ள முடியவில்லை. உடனே மேலிடத்திலிருந்து வோட்டு எண்ணும் மையங்களுக்கு, "மேயரை விடுங்கள்... நமது கூட்டணி அதிக வார்டுகளில் வெற்றி பெ
ஏற்பாடு செய்யுங்
கள்'' என்ற



காதில் விழுந்தவை

ஆலோசனை பறந்தது. உடனடியாக "கவிழ்ப்பு' வேலையில் ஈடுபட்டனர் ஆளும் கட்சியினர். "சுமார் 30 வார்டுகளின் முடிவு, ஆளும் கட்சிக்கு சாதகமாக மாற்றப் பட்டது" என்கிறார்கள் தி.மு.கவினர்.

இப்போது பெரும்பான்மை இருப்பதால் துணை மேயர் பொறுப்பு அ.இ.அ.தி. மு.க.வுக்குப் போகும். ஆளும் கட்சி துணையின்றி எந்த தீர்மானமும் மேயரால் நிறைவேற்ற முடியாது. மேலும் மேயர் பல்வேறு அவமானங்களைச் சந்திக்க வேண்டியிருக்கும். ரிப்பன் கட்டடம் போர்க்களமாக மாறி விடும். எந்த நலப் பணிகளும் நடக்காது. இவைகளையெல்லாம் மனத்தில் வைத்து, மேயர் பொறுப்பை ஸ்டாலின் ஏற்றுக் கொள்வதா வேண்டாமா என்று தி.மு.கவில் விவாதம் நடந்து வருகிறது.

## கோட்டையை 'கோட்டை' விடுகிறதா தி.மு.க.?

"பதவியை விட வேண்டிய அவசியமில்லை. கிடைத்ததை வைத்துக் கொண்டு போராடுவோம். அரசியல் கூட்டணிகள் எப்போது வேண்டுமானாலும் மாறலாம். அப்போது மாமன்றத்தில் த.மா.கா. உறுப்பினர்கள் ஆதரவும் கிடைக்கும்" என்று ஒரு வாதமும் வைக்கப்படுகிறது.

பதவியை ஏற்றுக் கொள்ளாமல் சுப்ரீம் கோர்ட்டில் வழக்கு போட்டு, மத்திய போலீஸ் பாதுகாப்போடு மாநகராட்சிக்கு மறு தேர்தல் நடத்த முயற்சி செய்யலாம்" என்றும் ஒரு தரப்பினர் சொல்கிறார்கள்.

● வட சென்னையில் உள்ள வார்டுகளில் தி.மு.க. படு தோல்வி அடைந்திருப்பது தலைமைக்கு அதிர்ச்சியைக் கொடுத்திருக்கிறது. "வடசென்னை செயலாளர் பலராமனுக்கு அன்பழகனும் ஆற்காடும் கொடுக்கும் 'செல்லம்' காரணமாகத்தான் தலைமையால் பலராமனைச் சரியாக கண்டிக்க முடியவில்லை" என்கிறார்கள். பொதுவாகவே சென்னையில் கழகத்தின் செயல்பாடுகள் தலைமைக்குத் திருப்தியளிப்பதாக இல்லையாம். 'கோட்டை' கைநழுவி போய்விடுமோ என்ற பயம் வந்திருக்கிறது. "அ.தி.மு.க.வின் அத்துமீறல்களை எதிர்த்து நிற்க இன்னமும் துடிப்பான நிர்வாகிகள்- குறிப்பாக வட சென்னைக்கு வேண்டும்" என்கிறார்கள் தி.மு.க. தொண்டர்கள்.

● "நல்ல வேளையாக நாங்கள் தனித்து நின்றோம். அ.தி.மு.க.-த.மா.கா. கூட்டணியில் நின்றிருந்தால் த.மா.கா. அதிக இடங்களில் போட்டியிட்டு வெற்றியும் பெற்றிருக்கும். செல்வாக்கு சரியவில்லை என்று கொக்கரித்திருக்கும். இப்போது அவர்கள் 'எக்ஸ்போஸ்' ஆகிவிட்டார்கள்" என்று சந்தோஷப்படுகிறார்கள் காங்கிரஸ் பிரமுகர்கள்.

— சஞ்சயன்

• ரீது குமார்



# சாதுஷூக்காக சாகடிப்பதா?

எல்லாம் நம் காஞ்சிப் பட்டுப் போலத் தான் – பட்டு நூல் உருவாகும் போது பல பட்டுப் பூச்சிகள் 'பட்பட்' என்று உயிர் விடுவதை நன்றாகத் தெரிந்து வைத்துக் கொண்டிருந்தும், 'பட்'டென்று பட்டை விட்டொழிக்க முடிகிறதோ? பட்டும் படாடோபமுமாகக் காட்சியளித்தால் தானே பிறவி எடுத்த பயனே கிட்டுகிறது?

தெற்கிலேயே இந்த கதி என்றால், ஃபாஷன் ப்ரியர்களும், பகட்டுப் பிரகஸ்பதிகளுமான வடநாட்டாரை இந்த வியாதி விட்டு வைக்குமா? அதுவும் வருவது குளிர் காலம் எனும் போது, சாதூஷ் ஷாலைப் போர்த்திக் கொண்டால்தானே ஒரு கர்வக் கதகதப்பு கிடைக்கும்? அங்கே குளிர்காலம் தான் திருமண ஸீஸன் வேறு! வேலைப்பாடு கொண்ட சாதூஷ் ஷாலை மேலே போட்டுக் கொண்டால் தான், ஸ்டேட்டஸ் உயரும்... வரதட்சணையும் உயரும்!

'சிரு' (chiru) என்பது ஒரு மான் வகை; திபெத், சைனா எல்லைகளில், பயங்கரமான தட்பவெப்ப நிலையில் ஜீவித்துக் கொண்டிருக்கும் ஓர் அற்பப் பிராணி. அதன் முடியிலிருந்து நெய்யப்படுவது தான் சாதூஷ் ஷால்கள்.

காஷ்மீரத்தில் இதன் விலை இருபத்தையாயிரம் என்றால், அது யு.கே. சென்றடையும் போது, லண்டன் வாசிகள் கொடுக்கும் விலை பத்தாயிரம் பவுண்டுகள்! சிருவின் உயிருக்கு ஏன் ஆபத்து என்று இப்போது புரிகிறதல்லவா?

சாதாரணமாக, ஒரு சிரு உயிர் நீத்தால்.... அதாவது இயற்கையாக மரணித்தால்.... அதன் உடம்பிலிருந்து கிடைக்கும் முடியை வைத்துக் கொண்டு ஒரு கர்சீஃப்கூட செய்ய முடியாது. குறைந்தது 21 மான்கள் மரித்தால்தான் ஒரு 'ஷால்' உருவாகும். அப்புறமென்ன? மான்களை வேட்டையாடி 'ஷால்' தயார் செய்து, உலக மார்க்கெட்டில் விற்று கோடீஸ்வரர்களாக, ஒரு கூட்டமே உள்ளது.

இதனால் இனம் மளமளவென்று குறைந்து, (வருடந்தோறும் 20,000 சிரு மான்கள்

கொல்லப்படுகின்றனவாமே?) அருகிவரும் விலங்குகள் பட்டியலில் இடம் பெற்று, சிரு வேட்டைக்குத் தடையும் விதிக்கப்பட்டுவிட்டது. எல்லாம் செவிடன் காதில் சங்கூதிய கதையாகிவிட்டது. இந்திய விலங்கு பாதுகாப்பு அமைப்புகள் உடனே, 'மக்களை அறிவுறுத்துவோம்; இந்த ஷால்களை வாங்கினால் பாவம்' என்ற ரீதியில் எடுத்துச் சொல்வோம் என சங்கராச்சார்யார் பாணியைப் பின்பற்றத் துவங்கினார்கள். பல பெரிய மனிதர்களும் இந்த நல்ல காரியத்துக்குத் துணைபோக இசைந்தார்கள். ஜெயாபச்சன், அவந்திபிர்லா, மனீஷா கொய்ராலா போன்ற செலிப்ரிட்டிகளும் 'சாதூஷைத் தூஷியுங்கள்' என்று பிரசாரம் செய்ய ஆரம்பித்தார்கள்.

அப்படியும் மார்க்கெட்டில், 30-70 சாதூரஷ் ஷால், 50-50 ரகம், 80-20ரகம் என்று விதவிதமாக சாதூரஷ்ஷுடன் வேறு எதைஎதையோ கலந்து உருவாகும் தயாரிப்புகள் குவிந்த வண்ணமிருந்தன. இதில் எது அசல், எது போலி என்று சரியாகத் தெரியாத காரணத்தால், ஏகமாக ஏமாந்து போய்க் கொண்டிருந்தார்கள்.

டிசைனர் ரீது குமார் இதற்கொரு முடிவுகட்ட ஒரு நூதன வழியைக் கையாண்டார். பெருமையடித்துக் கொள்பவர்களால் இந்த ஷாலைக் கைவிட முடியாது; ஆனால் அதை வாங்கினாலோ விற்றாலோ கம்பி எண்ண வேண்டும். எனவே, சாதூரஷ் ஷாலைப் போலவே காட்சியளிக்கும் விதத்தில், வேறு 'ஸின்தடிக் வுல்' உபயோகித்து, 'மாற்று சாதூரஷ்' கலெக்ஷன்களைப் பிரபலப்படுத்தத் துவங்கினார். இவற்றின் விலையும் மலிவு; பார்த்தாலும் செயற்கை இழை போல் தெரியாது; மெஷினால் தைக்கப் படுவதால் எளிதில் நைந்து போகாது. எல்லாவற்றுக்கும் மேலாக, எஞ்சி இருக்கும் கொஞ்ச நஞ்ச மான்களும் செத்து மடியாமல் பிழைத்துப் போகும்! செமினார்களிலெல்லாம் 'ஸே நோ டு சாதூரஷ்' என்று எழுதப்பட்ட டீ-ஷர்ட்டுகளை விநியோகித்து, ஃபாஷன் ஷோக்களிலும், சாதூஷுக்கு மாற்றான ஆடைகளை அணிந்து கொண்டு, டீ.வி. பர்சனாலிட்டிகள் அமர்க்களப் படுத்துகிறார்கள்.

— ஜெ. ஆர்.

# செப்புமொழி பதினெட்டுடையாள்
# (அஞ்சல் மூலம் இந்தியில் பேச பயிலலாமே)

இப்போதெல்லாம் அயல்நாட்டுக்குச் செல்வது மிக சாதாரணமாகிவிட்டது. ஒவ்வொரு வீட்டிலும் ஒரு நபர் அயல்நாட்டில் இருக்கிறார் அல்லது நெருங்கிய உறவினர் அயல் வாசம் செய்பவராக இருக்கிறார். இப்படி செல்பவர்கள் வேலை தேடியோ, மேல் படிப்புக்காகவோ செல்கிறார்கள். இவர்களில் எத்தனை பேர்கள் தான் வசிக்கும் நாட்டை ஏன், இடத்தை முழுமையாக சுற்றிப் பார்த்திருக் கிறார்கள்.

''ஓடும் தண்ணீர் சுத்தமாக இருக்கும் 'பஹதா பானீ நிர்மலா என்று ஒரு பழமொழி இந்தியில் உள்ளது. அதேபோல் பல இடம் சென்று பல மனிதர்களைச் சந்திப்பவர்களின் கண்ணோட்டம். நோக்கு பரந்ததாக இருப்பதை பலர் அனுபவ பூர்வமாக பார்த்திருக்கின்றனர். அது எப்படி? என்று கேட்கலாம்? ஒன்றுமில்லை தினமும் தாம்பரத்திலிருந்து, கடற்கரை வரை மின்சார வண்டியில் பயணம் செய்பவர்களைக் கேட்டுப் பாருங்கள்? எத்தனை புதுமுகங் களைப் பார்க்கின்றனர். எத்தனை விதமான குடும்பப் பிரச்சினைகள் அலசப்படுகின்றன. எத்தனை விதமான அனுபவங்களை நாம் அனுபவிக்காமலே அறிந்துகொள்கின்றோம் என்பது தெரியவரும்.

தேச ஒற்றுமைக்காக, உலக ஒற்றுமைக் காக என்று பாதயாத்திரையாகவோ, மிதிவண்டி யாத் திரையாகவோ செல்பவர்களுடன் உரையாடி இருக்கிறீர்களா? ''உலக ஒற்றுமைக்கும், பாத யாத்திரைக்கும் என்ன சம்மந்தம்'' என்று அவர் களிடம் வினவியிருக்கிறார்களா? அவர்களிடம் பேசினால் ஒரு கருத்து தெளிவாக புரியும். உலக ஒற்றுமையோ, தேச ஒற்றுமையோ, பல இடங்களுக்கு பயணம் செய்பவர்களால் வலுப் படுத்தப்படுகின்றது. அது எப்படி? என்று கேட் கலாம்.

பல இடங்களுக்குச் செல்லும்போது பல் வேறு வாழ்க்கை முறைகளை, பல்வேறு உணவு பழக்கவழக்கங்களை, பல்தரப்பட்ட கஷ்டங் களில் வாழ்ந்து கொண்டிருப்பவர்களைப் பார்க்க முடியும். வாழ்க்கை என்பது என்னவென்று புரியும். பரந்த நோக்கும் வளரும். (வஸுதைவ குடும்பகம் – உலகமே என் குடும்பம்) என்ற எண்ணம் வரும்.

நம்மில் பலர் பல இடங்களுக்குச் செல்லத் தயங்க முக்கியமான காரணம் பிற மொழிகளை அறிந்திராமல் இருப்பதே ஆகும். குறைந்த பட்சம். அனுதினம் அதிகமாகப் பயன்படுத்தப் படும் சொற்களையாவது அறிந்திருந்தால் நல்லது.

ஒரு இடத்திலிருந்து மற்றொரு இடத் திற்கு செல்ல பன்மொழி அறிவு மிகவும் உதவி

> ''ஓடும் தண்ணீர் சுத்தமாக இருக்கும் 'பஹதா பானீ நிர்மலா என்று ஒரு பழமொழி இந்தியில் உள்ளது. அதேபோல் பல இடம் சென்று பல மனிதர்களைச் சந்திப்பவர்களின் கண்ணோட்டம். நோக்கு பரந்ததாக இருப்பதை பலர் அனுபவ பூர்வமாக பார்த்திருக்கின்றனர்.

யாக உள்ளது. எவ்வளவுதான் அறிவாளியாக இருந்தாலும், நாம் செல்லும் இடத்தில் பேசும் மொழியை அறியாமல் இருந்தால், நம் அறிவு பயனில்லாததாக ஆகிவிடுகிறது.

ஒரு அறிஞர் இருந்தாராம். அவர் நதிக் கரைக்கு அப்பால் இருக்கும் இடத்தை அடைய ஒரு இடத்தில் ஏறி அமர்ந்தார். அவர் தன் அறிவை ஓடக்காரனிடம் காட்டத் துவங்கினார். பேச்சை ஆரம்பித்தார்.

அறிஞர் – என்னப்பா உனக்கு விஞ்ஞானம் தெரியுமா? என்றார்.

ஓடக்காரன் – என்ன சாமி நானே அஞ் ஞானி. விஞ்ஞானம் எதற்கு?

அறிஞர் – அப்படியானால் உன் வாழ்க் கையின் 25 சதவீதம் வீணாகி விட்டதே. அது சரி இதிஹாசம் தெரியுமா?

ஓடக்காரன் – ஆமா... தினப்போதே பரிஹாஸமா இருக்கு. இதிஹாசம் எதற்கு?

அறிஞர்: ஓ! 50 சதவீதம் தொலைத்து விட்டாயே என்றார்.

இதற்குள் ஓடம் அங்கிருந்த ஒரு பாறையில் இடித்தது. ஓடத்தினுள் தண்ணீர் நிரம்ப துவங்கியது. ஓடக்காரன் அறிஞரிடம் கேட்டான்.

''சாமி உங்களுக்கு நீந்த தெரியுமா?''

''எனக்கு சரியாக நடக்கவே தெரியாதே என்று அறிஞர் கூறினார்.

அப்படியானால் உங்கள் வாழ்க்கை 100 சதவீதம் போய்விட்டதே எனக்கூறி நீரில் குதித்து நீந்திச் சென்று தப்பினான்.

மொழி அறிவு நம்மை பல சூழ்நிலைகளை யும் எதிர்நீச்சல் அடித்து சமாளிக்க உதவுகின றது. முக்கியமாக இந்தி மொழி அறிந்திருந்தால் இந்தியா முழுவதும் சுற்றி பார்க்க முடிகிறது.

இந்தியாவில் பல் மாநிலங்களில் பேசப்படும் மொழிகளான குஜராத்தி, பஞ்சாபி, கஷ்மீரி, ஓரியா, பங்களா மற்றும் மராட்டி மொழிகள் இந்தி மொழியை ஒத்திருக்கின்றன. தவிர தென்னிந்திய மொழிகளான கன்னடம், மலையாளம், தெலுங்கு மொழிகளின் உச்சரிப்பும், ஒலி அமைப்பும் இந்தி மொழியைப் போன்றே உள்ளன. எனவே இம்மாநிலத்தில் இருப்பவர்கள் இந்தியை நன்கு அறிந்துள்ளனர். இக் காரணத்தால் இந்தி மொழி கைவசமிருந்தால் பல் மாநிலங்களுக்கு சென்று விட்டு வெற்றியுடன் திரும்ப முடிகிறது.

இவை அனைத்தையும் மனத்தில் கொண்டு பாரத ஸ்டேட் பாங்கு அதிகாரிகள் சங்கப் பயிற்சி மையம் (State Bank of India Officers Association Institute, Chennai) ***தபால் மூலம் பேச்சு மொழி இந்தி பயிற்சி அளித்து வருகிறது.***

'Diploma in Coversational Hindi' என்று அழைக்கப்படும் இப்பயிற்சி அஞ்சல் வழியில் நடத்தப்படுவதால் எந்த இடத்திலிருந்தும் இந்தியில் பேசக் கற்றுக் கொள்ளலாம். அதாவது பயிற்சியில் சேருபவர்களின் விலாசத்திற்கு ஒவ்வொரு மாதமும் பாடங்கள் கூரியர் மூலம் அனுப்பப்படும். இப் பாடத்தைத் தவிர பேச்சு மொழி சம்பந்தப்பட்ட புத்தகங்களும் மற்றும் தமிழ் மூலம் பயிலுபவர்களுக்குப் "பேச்சு மொழி இந்தி சொற்களஞ்சியம்" என்ற புத்தகமும் ஆங்கிலம் மூலம் கற்பவர்களுக்கு 'Conversational Word Finder' என்ற புத்தகமும் வழங்கப் படுகிறது. இதைத் தவிர மாதா மாதம் நடக்கும் நேர்முக வகுப்புகளில் பேச பயிற்சி அளிக்கப் படுகின்றது.

> முக்கியமாக இந்தி மொழி அறிந்திருந்தால் இந்தியா முழுவதும் சுற்றி பார்க்க முடிகிறது.

நேர்முக வகுப்புகள் மாதம் ஒருமுறை ஞாயிற்றுக்கிழமைகளில் (மதிய உணவுடன்) நடத்தப்படுகிறது. நேர்முக வகுப்புகளுக்கு வர முடியாதவர்களுக்கு உதவியாக Resource Centres (மொழிவள மேம்பாட்டு மையங்கள்) **திருச்சி, கோவை, மதுரை, தில்லி, ஐதராபாத், மும்பை** போன்ற பல் இடங்களில் அமைக்கப்பட்டுள்ளன.

**பயிற்சி காலம்: 6 மாதம்**

**பயிற்சி கட்டணம்: ரூ. 500/- மட்டுமே (தேர்வு, நேர்முகப் பயிற்சிக் கட்டணம் உட்பட)**

மொழிஆர்வம் உடைய எவரும் இந்தப் பயிற்சியில் சேரலாம். இந்தி மொழி ஆரம்பம் முதல் கற்பிக்கப்படுவதால் அடிப்படை கல்வித் தகுதி, வயது வரம்பு எதுவும் தேவையில்லை. (பள்ளி சிறுவர்கள் முதல் ரிடையர் ஆகி வீட்டில் இருப்பவர் வரை ஆர்வமுடைய அனைவரும் சேரலாம்) இப்பயிற்சி தமிழ் மற்றும் ஆங்கிலம் மூலம் நடத்தப்படுகிறது.

பயிற்சியில் தேறியவர்களுக்கு வருடா வருடம் நடக்கும் பட்டமளிப்பு விழாவில் "Diploma in Conversaional Hindi" சான்றிதழ்கள் வழங்கப்படுகின்றன. இப்பட்டமளிப்பு விழாவில் இதுவரை ஆற்காடு இளவரசர், முன்னாள் பிரதமர் சந்திரசேகர், மறைந்த பாரத ரத்னா சி. சுப்ரமணியம், டாக்டர் கிரண் பேடி ஐ.பி.எஸ், பாரத ஸ்டேட் வங்கியின் தலைமைப் பொது மேலாளர் திரு. R.C. ஷர்மா போன்றவர்கள் முக்கிய விருந்தினராக உரை நிகழ்த்தியுள்ளனர்.



"29.9.2001 அன்று நடந்த பட்டமளிப்பு விழாவில் தங்கப்பதக்கம் பெற்ற மாணவர்கள்"

**ஜனவரி 2002ல் துவங்கவிருக்கும் பயிற்சியில் சேர விரும்புவர்கள் ரூ.100க்கான டிமாண்ட் டிராப்ட் SBIOA Institute, Chennai என்ற பெயரில் எடுத்து, சுயவிலாசமிட்ட, தபால் தலையுடன் (Rs. 6) கூடிய உறையுடன் கீழ்க்கண்ட முகவரிக்கு எழுதவும். உரையின் மேல் English Medium/Tamil Medium என்று பயிற்சி மொழியைக் குறிப்பிடவும். இந்த ரூ. 100/- பயிற்சிக் கட்டணத்திலிருந்துக் கழித்துக் கொள்ளப்படும்.**

**The Executive Director,**
**SBIOA Institute,**
**229, N.S.C Bose Road,**
**P.B.No. 1279,**
**Chennai 600 001**
**Phone: 044 - 5340226**

# சிவகாமியின் சபதம்

## இருபத்து ஏழாம் அத்தியாயம்

## ஒரு குதிரை

பல்லவ சக்கரவர்த்தியையும் அவருடைய திருக்குமாரரையும் பார்த்தவுடனே, சற்றுத் தூரத்திலேயே சிவிகை தரையில் இறக்கப்பட்டது. ஆயனரும் சிவகாமியும் சிவிகையிலிருந்து இறங்கிப் பயபக்தியுடன் நடந்து வந்தார்கள்.

"ஆயனரே! வாருங்கள்! சிவகாமியையும் அழைத்து வந்தீர்களா? மிகவும் நல்லது. பிரயாணம் சௌக்கியமாயிருந்ததா?'' என்று சக்கரவர்த்தி கேட்டார்.

"பல்லவேந்திரா! தங்களுடைய குடை நிழலின் கீழ்ப் பிரயாணம் சௌக்கியமாயிருப்பதற்குக் கேட்பானேன்?" என்று கூறிய வண்ணம் ஆயனர் அருகில் வந்து வணங்கினார்.

அவருக்குப் பின்னால் அடக்கத்துடன் வந்த சிவகாமியும் சக்கரவர்த்திக்கு நமஸ்கரித்தாள். அவளுடைய உள்ளத்தில் சக்கரவர்த்தியிடம் பக்தியும் மரியாதையும் நிறைந்திருந்தன. அதே சமயத்தில் இன்னதென்று தெரியாத ஒரு வகைப் பயமும் குடி கொண்டிருந்தது.

"சிவகாமி! உனக்கு மங்களம் உண்டாகட்டும்! உன்னிடம் அடைக்கலம் புகுந்திருக்கும் பரத சாஸ்திரக் கலை மேலும் மேலும் வளர்ந்து பூரணம் அடையட்டும்!" என்று மகேந்திர பல்லவர் ஆசி கூறிவிட்டு, ஆயனரைப் பார்த்துச் சொல்லத் தொடங்கினார்.

"ஆயனரே! இன்றைக்கு உங்கள் பிரயாணம் சௌகரியமாயிருந்தது என்று சொன்னீரல்லவா? இனி நெடுகிலும் அப்படியே இருக்கும் என்று சொல்வதற்கில்லை. இந்த யுத்தம் முடியும்வரையில் சாலைகளிலே சைன்யங்களின் நடமாட்டம் அதிகமாயிருக்கும். ஆகையால் இன்னும் கொஞ்ச காலத்துக்கு நீர் இங்கேயே வந்து தங்கியிருப்பது நல்லது..."

அமரர் கல்கி



யனருக்கு தூக்கி வாரிப் போட்டது. அரண்ய வீட்டில் அரை குறையாகச் செய்யப் பட்டுக் கிடந்த நடன சிற்ப உருவங்கள் எல்லாம் அவருடைய கண் முன்னால் நின்றன.

"பல்லவேந்திரா..." என்று ஏதோ சொல்லத் தொடங்கினார்.

மகேந்திரர் தமது குரலைச் சிறிது கடுமைப்படுத்திக் கொண்டு, "மறு வார்த்தை வேண்டாம். நீரும் உம் புதல்வியும் நாளை முதல் இங்கே வந்து விட வேண்டியது. இது நமது ஆக்ஞை!" என்றார்.

ஆயனர் நடுங்கியவராய், "பல்லவேந்திரா! தங்கள் ஆக்ஞைக்கு மறுவார்த்தையும் உண்டா? அவ்விதமே செய்கிறேன்" என்றார்.

"ஆயனரே! இந்தக் கோயில்களை எவ்வளவு சீக்கிரமாக வேலை செய்யலாமோ அவ்வளவு சீக்கிரமாக முடிக்க வேண்டும். கோயில்கள் பூர்த்தியாகும் வரையில் நீர் வேறு எந்த வேலையையும் கவனிக்க வேண்டியதில்லை. இந்த வேலைக்காக நீர் எப்போது எவ்வளவு திரவியம் கேட்டாலும் கொடுக்கும்படியாகத் தனாதிகாரிக்குக் கட்டளையிட்டிருக்கிறேன். இன்னும் உமக்கு வேண்டிய ஆட்களையும் வேறு வசதிகளையும் உடனுக்குடன் அனுப்பும்படி ஏற்பாடு செய்திருக்கிறேன். எந்தக் காரணத்தினாலாவது காரியம் குந்தகப்படுவதாயிருந்தால் நீர் குமார சக்கரவர்த்திக்குச் செய்தி அனுப்பி வேண்டியதைத் தெரியப்படுத்தலாம்'' என்று சக்கரவர்த்தி கூறியதும், அருகில் நின்ற மாமல்லரை ஆயனர் நோக்கினார். அப்போது அவர் முகபாவமானது ஏதோ கேட்க வேண்டுமென்ற விருப்பத்தைப் புலப்படுத்தியது.

"ஆம், ஆயனரே! இனிச் சில காலத்துக்கு உமக்கு வேண்டியதையெல்லாம் மாமல்லரிடந்தான் தெரியப்படுத்த வேண்டும். நாளைய தினம் பல்லவ சைனியத்துடன் நான் போர்க்களத்துக்குப் புறப்பட்டுச் செல்கிறேன். நான் திரும்பி வரும்வரையில் பல்லவ சாம்ராஜ்யத்தை நிர்வகிக்கும் சகல பொறுப்புக்களையும் மந்திரி மண்டலத்தார் மாமல்லருக்கு அளித்திருக்கிறார்கள். நாளை முதல் மாமல்லர்தான் சக்கரவர்த்தி" என்றார் மகேந்திர பல்லவர்.



க்கரவர்த்தி ஆயனரிடம் சற்றுக் கடுமையான குரலில் கூறி வந்த மொழிகளைக் கேட்டுக் கவலையும் பயமும் கொண்டிருந்த சிவகாமி, அவருடைய கடைசி வார்த்தைகளைக் கேட்டதும் அளவில்லாத குதூகலம் அடைந்தாள். அவளுடைய மனத்தில் பலவித இன்பகரமான எண்ணங்கள் பொங்கித் ததும்பின. அவற்றுள் முக்கியமானது மாமல்லர் இப்போது போர்க்களத்துக்குப் போகவில்லை என்பதுதான். அதனோடு, சக்கரவர்த்தியும் போய் விடுகிறார். மாமல்லர் சக்கரவர்த்திக்குரிய சர்வாதிகாரங்களுடன் இருக்கப் போகிறார். இனி அவரும் தானும் அடிக்கடி சந்திப்பதற்குத் தடையொன்றும் இராது! தாமரைக் குளக் கரையில் மாமல்லரைச் சந்தித்து அளவளாவுவதைப் பற்றிய பகற் கனவுகள் சிவகாமியின் உள்ளத்தில் எழுந்தன. முகத்தில் அவளை அறியாமல் முறுவல் தோன்றியது. ஆசை ததும்பிய கண்களின் ஓரத்தினால் மாமல்லரை அவள் பார்த்தாள். ஆனால், ஐயோ! இதென்ன? அவருடைய கருணை ததும்பும் முகத்தில் இப்போது ஏன் இந்தக் கடுகடுப்பு? தன்னை ஏன் அவர் திரும்பிப் பார்க்கவில்லை? ஒரு வேளை தான் அவ்விடம் வந்ததே அவருக்குப் பிடிக்கவில்லையோ?

பின்னரும் இரண்டு மூன்று தடவை சிவகாமி மாமல்லரின் முகத்தை ஆவலுடன் நோக்கினாள். அவர் அவள் பக்கம் பார்க்கவே இல்லை. நேற்றுத் தாமரைக் குளத்தில் அகன்ற கண்களால் விழுங்கி விடுபவர் போல் தன்னைப் பார்த்தவர், பின்னர் வீட்டிலே சக்கரவர்த்தியும் ஆயனரும் பேசிக் கொண்டிருந்தபோது அடிக்கடி கண்களினாலே தன்னுடன் இரகசியம் பேசியவர், இப்போது தன்னைப் பார்க்கவும் விரும்பாதவர் போல் இருப்பதன் காரணம் என்ன? சிவகாமியின் கண்களில் கண்ணீர் ததும்பும் போலிருந்தது. அவள் விரைவாக அங்கிருந்து அப்பால் சென்று ஒரு பாறையின் பின்னால் ஒதுங்கி நின்றாள்.



னால், நரசிம்மருடைய மனநிலை உண்மையில் எவ்வாறு இருந்தது? ஆம்; அவர் கோபம் கொண்டுதானிருந்தார். ஆனால் யார் மீது என்பதை

நாம் அறியோம். அது நரசிம்மருக்கே தெரிந்திராத போது நமக்கு எப்படித் தெரிந்திருக்க முடியும்?

மாமல்லருடைய உள்ளத்திலே சிவ காமியிடம் பிரேமை பொங்கிக் கொண் டிருந்தது. சிவிகையிலே அவளுடைய திவ் வியவதனத்தைப் பார்த்ததும் அவருக்கு எல்லையில்லாத குதூகலம் ஏற்பட்டது. உடனே ஓடிச் சென்று அவளை வரவேற்க வேண்டுமென்றும், கையைப் பிடித்துச் சிவிகையிலிருந்து இறக்கிவிட வேண்டு மென்றும் ஆவல் பொங்கிற்று. அதெல்



லாம் முடியாமற் போகவே, அவரது ஆசை கோபமாக மாறியது. அந்தக் கோபமானது எல்லாவற்றையும் எல்லாரையும் தழுவி நின்றது. பெரிய சாம்ராஜ்யத்துக்கு உரிமையுடன் பிறந்த தமது பிறப்பின் மேலேயே கோபங்கொண்டார். 'எதற்காகச் சக்கரவர்த்தியின் அரண்மனையிலே நாம் பிறந்திருக்க வேண்டும்? ஏழைச் சிற்பியின் மகனாக ஏன் பிறந்திருக்கக் கூடாது?'' என்று எண்ணினார்.

தாம் போர்க்களத்துக்குப் போகப் போவதில்லை என்று தந்தை சொன்னதும் சிவகாமியின் முகத்தில் பூத்த புன்முறுவல் அவருடைய கோபத்துக்குத் தூபம் போட்டது போலாயிற்று. போர்க்களத்துக்குப் போகாமல் அரண்மனையில் உட்கார்ந்திருப்பது அவமானம் என்பதை அவள் உணரவில்லை! போர்க்களத்துக்குப் போக விட்டாலும் அவளை அடிக்கடி பார்க்கவாவது முடியப் போகிறதா? அதுவும் இல்லை. காஞ்சிக் கோட்டையை விட்டு வெளிக் கிளம்பக்கூடாது என்று தந்தை வாக்குறுதி வாங்கிக்கொண்டிருக்கிறார். இதையெல்லாம் அறியாமல் சிவகாமி புன்னகை பூத்து மகிழ்கிறாள்!

இம்மாதிரி எண்ணங்களினால் நரசிம்மருடைய கோபம் மேலும் மேலும் வளர்ந்து கொண்டு வந்தது.

மனோலோகத்தில் இந்த நாடகம் நடந்து கொண்டிருக்கையில், சக்கரவர்த்தியும் ஆயனரும் தொடர்ந்து பேசிக்கொண்டிருந்தார்கள்.

பேசும்போதே தம்முடைய முகத்தையும் மாமல்லருடைய முகத்தையும் ஆயனர் மாறி மாறி ஏறிட்டுப் பார்ப்பதைக் கவனித்த சக்கரவர்த்தி, "ஆயனரே! ஏதாவது கோரிக்கை உண்டா? என்னிடமோ மாமல்லரிடமோ தெரியப்படுத்த வேண்டியது ஏதாவது இருக்கிறதா?'' என்று வினவினார்.

ஆயனர் தயங்கித் தடுமாறி, "ஆம் பல்லவேந்திரா! எனக்கு ஒரு பொருள் வேண்டும்! அதைத் தங்களிடம் யாசிப்பதா, குமார சக்கரவர்த்தியிடம் கேட்பதா என்று யோசித்துக் கொண்டிருக்கிறேன்'' என்றார்.

மகேந்திரவர்மர் புன்னகையுடன், "இன்றைக்கு என்னையே கேட்கலாம். நாளைக்கு நான் படையுடன் காஞ்சியிலிருந்து கிளம்பிச் சென்றபிறகு என்ன வேண்டுமோ அதைக் குமாரரிடம் கேட்கலாம்!'' என்றார்.

"பிரபு, எனக்கு ஒரு குதிரை வேண்டும்!''

"ஆ! என்ன கேட்டீர்?''

"நல்ல குதிரையொன்று வேண்டும்!''

"குதிரையா? குதிரை வேண்டும் என்றா கேட்டீர்? ஆயனரே! அதைக் காட்டிலும் என்னுடைய உயிரை நீர் கேட்டிருக்கலாம். இந்தப் பல்லவ சாம்ராஜ்யத்தையே கேட்டிருக்கலாம்! நன்றாய்க் குதிரை கேட்டீர் ஆயனரே! தென்னாடு என்றும் கண்டிராத மகா பெரிய யுத்தம் வந்திருக்கிறது என்று உமக்குத் தெரியாதா! காஞ்சியிலிருந்து தினந்தோறும் எத்தனை தூதர்கள் நாலா பக்கங்களுக்கும் போக வேண்டியிருக்கும் என்று தெரியாதா? குதிரையைத் தவிர வேறு ஏதாவது கேளும்!'' என்று சக்கரவர்த்தி சரமாரியாகப் பொழிந்து நிறுத்தினார்.

மகேந்திர பல்லவர் இவ்வளவு படபடப்புடன் பேசிக் கேட்டு ஆயனர் அறியாதவராதலால் மிரண்டு ஸ்தம்பித்து நின்றார்.

"ஓஹோ! உமக்கு வேறு ஒன்றும் வேண்டாம்; குதிரைதான் வேண்டும் போலிருக்கிறது. பல்லவ சாம்ராஜ்யத்தின் மகா சிற்பி ஒரு குதிரையை யாசித்தார். அதை மகேந்திர பல்லவன் கொடுக்கவில்லை என்ற பழிச்சொல் எனக்கு வேண்டாம். குதிரை தருகிறேன்; ஆனால், எதற்காக என்று மட்டும் சொல்லும். நீரும் சிவகாமியும் பிரயாணம் செய்வதற்கு வேண்டிய சிவிகைகளும் சிவிகை தூக்கும் ஆட்களும் இருக்கிறார்கள் அல்லவா? பின் குதிரை எதற்கு?'' என்று சக்கரவர்த்தி கேட்டு நிறுத்தினார்.

ஆயனர் சற்றுத் தைரியமடைந்து, "பல்லவேந்திரா! மிகவும் முக்கியமான ஒரு காரியத்தை முன்னிட்டுத்தான் கேட்டேன். ஆனால், அதனாலே யுத்த காரியங்கள் தடைப் படுவதாயிருந்தால்...'' என்று நிறுத்தினார்.

"அந்த முக்கியமான காரியம் என்ன? எனக்குத் தெரியலாமல்லவா? அல்லது ஏதேனும் இரகசியமா, ஆயனரே?''

"பிரபு! இரகசியந்தான்! ஆனால், தாங்கள் அறியக்கூடாத இரகசியம் அல்ல. அஜந்தா வர்ணச் சித்திரங்களின் இரகசியத்தை அறிய வேண்டுமென்று எத்தனையோ தடவை நாம் பேசிக் கொண்டதில்லையா? அந்த வர்ண இரக சியத்தை அறிந்தவர் ஒருவர் நாகார் ஜுன பர்வதத்தில் உள்ள புத்த சங் கிராமத்தில் தற்சமயம் இருக்கிறார்..."

"இதை முன்னமே ஏன் சொல்ல வில்லை. ஆயனரே? அவ்வளவு முக்கிய மான காரியமென்று தெரிந்திருந்தால், ஆட்சேபமே சொல்லியிருக்க மாட் டேனே? – அஜந்தாவின் அற்புதச் சித் திரங்களை நேரில் போய்ப் பார்த்து வர வேண்டுமென்ற ஆசையினால் வாதாபி புலிகேசியுடன் சிநேகம் செய்து கொள்ள வேண்டுமென்றுகூட ஒரு காலத்தில் எண்ணியிருந்தேன். அதெல்லாம் பகற் கனவாய்ப் போய்விட்டது – போகட்டும், குதிரை அவசியம் தருகிறேன். ஆயனரே! குதிரை மட்டும் போதுமா, இன்னும் ஏதாவது வேண்டுமா?"

"பல்லவேந்திரரின் ரிஷப இலச் சினை பதித்த பிரயாணச்சீட்டும் வேண் டும், இது யுத்த காலமல்லவா?"

"அதுவும் தருகிறேன். இவ்வளவு முக் கியமான காரியத்துக்கு யாரை அனுப்பு வதாக உத்தேசம், ஆயனரே? ஒருவேளை நீரே போவதாக உத்தேசமா?"

"எனக்குக் குதிரை ஏறவே தெரியாது, பிரபு! என்னுடைய சீடன் ஒருவனை அனுப்புகிறேன்."

"பகைவர் படைகள் வரும் வழியிலே அவன் போக வேண்டியிருக்குமே? கையில் நல்ல ஆயுதம் எடுத்துப் போக வேண்டும். இதோ இந்த வேலை அவனி டம் கொடுத்து அனுப்புங்கள்!" என்று கூறிச் சக்கரவர்த்தி, நரசிம்மரிடமிருந்து தாம் வாங்கி வைத்திருந்த வேலை நீட்டினார்.

ஆயனர் சற்றுத் தயங்கி நிற்கவே, "ஏன் தயக்கம்? இந்த வேல் நீர் அனுப் பப் போகும் வாலிபனுடைய வேல்தான்! மதயானையின் கோபத்திலிருந்து உம் மையும் சிவகாமியையும் பாதுகாத்த ஆயுதந்தான்; பரஞ்சோதி இதை வாங் கிக்கொள்ள ஆட்சேபிக்க மாட்டேன்" என்றார் சக்கரவர்த்தி.

இதைக் கேட்ட ஆயனர் மட்டுமல்ல – நரசிம்மரும் சிவகாமியுங்கூட ஆச்சரியக் கடலில் மூழ்கினார்கள்.

ஆயனர் தட்டுத் தடுமாறி, "பல்லவேந் திரா! தங்களுக்கு எப்படித் தெரிந்தது?" என்றார்.

"புத்த பகவான் என் கனவிலே வந்து சொன்னார்! அன்று உம் வீட்டில் தம்மு டைய சிலைக்குப் பின்னால் ஒளிந்திருந் தவர்களைப் பற்றியும் புத்தர் எனக்குக் கூறி னார். ஆயனரே! பல்லவ சக்கரவர்த்தியின் கண்களுக்கும் காதுகளுக்கும் எட்டாமல் பல்லவ சாம்ராஜ்யத்தில் எதுவும் நடக்க



முடியாது என்று உமக்குத் தெரியாதா?"

உடனே ஆயனர், கைகூப்பி வணங்கி, "பல்லவேந்திரா! நான் ஏதேனும் தவறு செய்திருந்தால் மன்னிக்க வேண்டும். சித்திரக் கலையில் உள்ள ஆசையினால் இந்தக் காரியத்தில் இறங்கினேன்'' என்று தொண்டையடைக்கக் கூறினார்.

"சிற்பியாரே! அஜந்தா இரகசியத்தை அறிவதில் உமக்கு எவ்வளவு ஆசையோ அவ்வளவு எனக்கும் உண்டு. திவ்விய மாய்ப் பரஞ்சோதியை அனுப்பி வையும். ஆனால், இதெல்லாம் எனக்குத் தெரிந்ததாக அந்தப் புத்த பிக்ஷுவிடம் மட்டும் சொல்ல வேண்டாம். ஏனோ தெரியவில்லை; பௌத்தர்களுக்கு என் பேரில் இல்லாத சந்தேகங்கள் எல்லாம் தோன்றுகின்றன. புத்த பகவானிடம் எனக்குள்ள பக்தியை அவர்கள் அறியவில்லை. ஆயனரே! குன்றைக் குடைந்து அமைக்கும் இந்த ஐந்து கோயில்களில் ஒன்றில் புத்த பகவானுடைய பிரம்மாண்ட சிலையொன்று செய்து வைக்கப் போகிறேன். அதைப்பற்றித்தான் நீர் வரும் போது மாமல்லரிடம் சொல்லிக் கொண்டிருந்தேன்!'' என்றார் சக்கரவர்த்தி.



வ்விதம் இங்கு ரஸமான சம்பாஷணை நடந்து கொண்டிருந்த போது, பாறை ஓரத்தில் சற்று மறைவாக நின்று இதையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த சிவகாமியின் உள்ளத்தில் பலவிதமான எண்ணங்கள் அலையெறிந்து எழுந்தன.

'இந்தச் சக்கரவர்த்திதான் எவ்வளவு சதுரராயிருக்கிறார்! புத்த பிக்ஷுவைப் பற்றி மாமல்லரிடம் நாம் எச்சரிக்கை செய்ய வேண்டுமென்றிருக்க, இவருக்கு ஏற்கெனவே எல்லாம் தெரிந்திருக்கிறதே! இவரிடம் எதையும் மறைத்து வைக்க முடியாது போலிருக்கிறதே! ஒருவேளை நம்முடைய இரகசியத்தையும் இவர் அறிந்திருப்பாரோ? அதனாலேதான் ஒருவேளை குமார சக்கரவர்த்தி நம்மிடம் இவ்வளவு பாராமுகமாக இருக்கிறாரோ? நாம் ஏதேனும் தவறு செய்து விட்டோமோ...?

இவ்விதம் எண்ணாததெல்லாம் எண்ணி அவள் உள்ளம் ஏங்கிற்று. விரைவிலே குமார சக்கரவர்த்தியைத் தனிமையில் பார்த்து அவருடைய கோபத்துக்குக் காரணம் தெரிந்து கொண்டாலன்றி, அவளுக்கு மனச்சாந்தி ஏற்படாதென்று தோன்றியது.

தற்செயலாகச் சிவகாமியின் பார்வை கீழே தரையில் கிடந்த ஒரு காவிக் கட்டியின் மேல் விழுந்தது. சட்டென்று ஒரு யோசனை தோன்றிற்று. அந்தக் காவிக் கட்டியைக் குனிந்து எடுத்துக்கொண்டு பாறையில் சித்திரம் வரையலானாள்.

குளத்தின் தண்ணீருக்கு அடையாளமாக அலையைப் போன்ற இரு கோடுகளை இழுத்தாள். அதன்மேல் ஒரு தாமரைப் பூவை வரைந்தாள். பக்கத்தில் இரண்டு தாமரை மொட்டுகளையும் போட்டாள். குளத்தின் கரையிலே ஒரு மான் குட்டியின் சித்திரத்தை எழுதினாள்.

எழுதும்போது கடைக்கண்ணால் பார்த்து, நரசிம்மவர்மர் தன்னைக் கவனிப்பதைத் தெரிந்துகொண்டாள்.

சித்திரம் எழுதி முடித்ததும் சிவகாமியின் மனத்தில் அமைதி ஏற்பட்டது. அந்தச் சித்திரத்திலடங்கிய செய்தியை நரசிம்மவர்மர் கட்டாயம் தெரிந்து கொள்வார். மற்றவர்களுக்கோ அதில் அர்த்தம் ஒன்றும் இராது. ஏதோ கிறுக்கியிருக்கிறது என்றுதான் எண்ணிக்கொள்வார்கள்! குமார சக்கரவர்த்திக்குத் தன்னிடம் அன்பு உண்டென்பது உண்மையானால், இந்தச் சித்திரத்தைப் பார்த்துவிட்டு அவசியம் அவர் தாமரைக் குளத்துக்கு வந்து சேருவார்.



ன்று மாலை சக்கரவர்த்தியும் குமாரரும் குதிரைகளின் மேல் ஏறிக் காஞ்சிக்கு இராஜபாட்டை வழியாகக் கிளம்பினார்கள். அந்தப் பாதை மத்தியானம் அவர்கள் வந்திருந்த ஐந்து குன்றுகளின் ஓரமாகத்தான் சென்றது. அவ்விடத்திற்கு வந்ததும் நரசிம்மர் சற்றுப் பின் தங்கினார். சிவகாமி சித்திரம் எழுதிய பாறைக்கு அருகில் வந்ததும் குதிரையை நிறுத்தி விட்டுக் கீழே இறங்கினார். அங்கே எழுதியிருந்த சித்திரத்தைப் பார்த்ததும் அவருடைய முகம் அந்தத் தாமரையைப் போலவே மலர்ச்சியடைந்தது. தரையில் கிடந்த அதே காவிக் கட்டியை அவரும் எடுத்து மானுக்கும் தாமரைக்கும் நடுவில் ஒரு வேலின் சித்திரத்தை எழுதினார்.

இருபத்து எட்டாம் அத்தியாயம்

# மலை வழியில்

சென்ற அத்தியாயத்தில் கூறிய சம்பவம் நிகழ்ந்து, நாலு தினங்களுக்குப் பிறகு பரஞ்சோதி போர் வீரனைப் போல் உடை தரித்து, கையில் வேல் பிடித்து, அழகிய உயர்சாதிப் புரவியின் மேல் அமர்ந்து, மலைப்பாதையில் தன்னந் தனியாகப் போய்க் கொண்டிருந்தான்.

சூரியன் அஸ்தமிக்க இன்னும் இரண்டு நாழிகைப் பொழுதுதான் இருந்தது. எனினும், அந்த மலைப் பிரதேசத்து மாலை வெயில் அவனுடைய இடது கன்னத்தில் சுளீரென்று அடித்தது.

பகல் நேரம் எல்லாம் தகிக்கும் வெயிலில் பிரயாணம் செய்து பரஞ்சோதி களைத்துப் போயிருந்தான். குதிரையும் களைப்படைந்திருந்தது. எனவே, குதிரையை மெதுவாக செலுத்திக் கொண்டு சென்றான்.

குதிரை மெல்ல மெல்ல அம்மலைப் பாதையில் ஏறி மேலே சென்று கொண்டிருக்கையில், பரஞ்சோதியின் உள்ளம் அடிக்கடி பின்னால் சென்று கொண்டிருந்தது. சென்ற ஒரு வார காலத்தில் அவன் அடைந்த அதிசயமான அனுபவங்கள் எல்லாம் திரும்பத் திரும்ப அவனுக்கு ஞாபகம் வந்துகொண்டிருந்தன.

காஞ்சி நகரில் புத்த பிக்ஷுவுடன் பிரவேசித்த அன்றிரவு நடந்த சம்பவங்கள் நினைவு வந்த போதெல்லாம் அவை உண்மையில் நிகழ்ந்தவைதானா அல்லது கனவிலே நடந்த சம்பவங்களா என்று பரஞ்சோதி அதிசயித்தான். பன்னிரண்டு நாட்களுக்கு முன்னால் திருச்செங்காட்டாங்குடியிலிருந்து கால்நடையாகக் கிளம்பிய பட்டிக்காட்டுச் சிறுவனா இன்று இந்த அழகான புரவியின் மேலே ஏறிச் செல்பவன் என்று கூட அவன் ஆச்சரியப்பட்டான்.

வெயிலின் வேகத்தினால் வியர்வையைத் துடைக்க வேண்டியிருந்த போதெல்லாம் பரஞ்சோதிக்கு தமிழகத்துச் சாலைகளின் அழகும் வசதிகளும் ஞாபகத்துக்கு வந்து கொண்டிருந்தன. சோழ நாட்டிலும் தொண்டை நாட்டிலும் சாலை ஓரங்களில் பெரிய விருட்சங்கள் அடர்த்தியாய் வளர்ந்து, குளிர்ந்த நிழல் தந்து கொண்டிருக்கும். சாலைகளின் இருபுறத்திலுமுள்ள வயல்களில் பசுமையான நெற்பயிர் இளந்தென்றலில் அசைந்தாடும்.



முதிர்ந்த பயிர்கள் கதிரின் பாரம் தாங்க மாட்டாமல் வயல்களில் சாய்ந்து கிடக்கும். ஆங்காங்கே பசுமையான தென்னந் தோப்புகளும் மாந்தோப்புகளும் கண் குளிரக் காட்சி தந்து கொண்டிருக்கும். வாழைத் தோட்டங்களையும் கரும்புத் தோட்டங்களையும் கண்ணால் பார்த் தாலே நாவறட்சி தீர்ந்து தணியும்.

ஆம்; வழிப் பிரயாணத்தின்போது தாகம் எடுத்துத் தவிப்பதென்பது அங்கெல்லாம் கிடையவே கிடையாது. தாமரையும், செங்கழு நீரும், நீலோற்பலமும் பூத்த குளங்களுக்குக் கணக்கேயில்லை. ஆறுகளும் சிற்றாறுகளும் சின்னஞ்சிறு வாய்க்கால்களும் அடிக்கொன்றாக வந்து கொண்டிருக்கும். இருபுறமும் பசுமையான செடிகொடிகள் படர்ந்த சிறுவாய்க் கால்களில் தண்ணீர் ஓடிக் கொண்டிருந் தால் அது ஓர் அழகு; தண்ணீர் இன்றி வாய்க்கால் வறண்டிருந்தால் அது இன் னொரு வகை அழகு. வறண்ட வாய்க்கால் களின் சிறு மணலில் நடப்பதைப் போன்ற இன்பம் வேறென்ன உண்டு? அப்படி நடக்கும்போது இரு கரைகளிலும் ஆங் காங்கே படர்ந்துள்ள காட்டு மல்லிகைக் கொடிகளில் பூத்த மலர்களிலிருந்து வரும் நறுமணம் எவ்வளவு மனோகரமாக இருக்கும்?

அதற்கிணையான இன்பம் இன் னொன்று சொல்ல வேண்டுமானால், உச்சி வேளையில் ஆலமரங்களும் வேப்ப மரங்களும் தழைத்து வளர்ந்த இராஜபாட் டைகளில் பிரயாணம் செய்வதுதான். இந்தப் பங்குனி மாதத்தில் சாலை ஓரத்து ஆலமரங்களிலே புதிய இளந்தளிர்கள் 'பளபள'வென்று மின்னிக் கொண்டிருக் கும். வேப்ப மரங்கள் பூத்துக் குலுங்கும்! மாமரங்கள் புதிய தளிர்விடும் அழகைத் தான் என்னவென்று சொல்ல? ஒரு நாளைக்கு மாமரம் முழுவதும் கருநீல நிறம் பொருந்திய இளந்தளிர்கள் மயமா யிருக்கும்; மறுநாளைக்குப் பார்த்தால், கரு நீல நிறம் இளஞ்செந்நிறமாக மாறியிருக் கும். அதற்குஅடுத்த நாள் அவ்வளவு தளிர் களும் தங்கநிறம் பெற்றுத் தகதகவென்று மின்னிக் கொண்டிருக்கும்.

இப்பேர்ப்பட்ட இயற்கை இன்பங் களை அளித்த இறைவனுடைய திருப் புகழை இன்னிசையிலே அமைத்து, மரக் கிளைகளில் ஊஞ்சலாடும் பூங்குயில்கள் இடைவிடாமல் பாடிக் கொண்டிருக்கும்.

திருச்செங்காட்டாங்குடியிலிருந்து காஞ்சிக்கு வரும் வழியில் இம்மாதிரி இன் பக் காட்சிகளையெல்லாம் பார்த்துக் கொண்டுவந்த பரஞ்சோதி அச்சமயம் அந் தக் காட்சிகளின் அழகையோ இன்பத் தையோ அவ்வளவாக அனுபவிக்க வில்லை.

இப்போது, எங்கே பார்த்தாலும் மொட்டைக் குன்றுகளே காணப்பட்ட பொட்டைப் பிரதேசத்தில், பசுமை என் பதையே காண முடியாத வறண்ட பாதை யில், அவன் பிரயாணம் செய்துகொண் டிருந்த போதுதான், சோழ மண்டலத்து வயல்களும் தோப்புகளும், தொண்டை மண்டலத்து ஏரிகளும் காடுகளும் அவன் மனக்கண்ணின் முன்னால் அடிக்கடி தோன்றி இன்பமளித்தன.

மேற்குத் திசையில் மலைகளுக்குப் பின்னால் சூரியன் மறையத் தொடங்கியபோது பரஞ்சோதி, அந்த மலைப்பாதையில் ஒரு முடுக்கில் திரும்பினான். அன்றைக்கெல்லாம் முட் புதர்களையும் கள்ளிச் செடிகளையும் தவிர வேறு எதையும் காணாமல் வந்த பரஞ்சோதிக்கு எதிரே, அப்போது ஓர் அபூர்வமான காட்சி தென்பட்டது. கண் ணுக்கெட்டிய தூரம் நெட்டையும் குட் டையுமான புரச மரங்கள் – ஆயிரம் பதி னாயிரம் மரங்கள் – இலை என்பதே இல் லாமல் ஒரே பூமயமாய்க் காட்சியளித்தன. அவ்வளவும் இரத்தச் சிவப்பு நிறமுள்ள கொத்துக் கொத்தான பூக்கள். மாலைக் கதிரவனின் செங்கிரணங்கள் அந்தப் புரசம் பூக்களின் இரத்தச் செந்நிறத்தை மிகைப்படுத்திக் காட்டின.

அது அபூர்வமான அழகு பொருந்திய காட்சிதான்; ஆனால், ஒருவகை அச்சந் தரும் காட்சியுமாகும். பரஞ்சோதி பிறந்து வளர்ந்த திருச்செங்காட்டங்குடி கிரா மத்தில் தென்மேற்கு மூலையில் இருந்த மயானத்தில் சில புரச மரங்கள் உண்டு. அவை பங்குனி சித்திரையில் இவ்விதம் ஒரே செந்நிறப் பூமயமாயிருப்பதை அவன் பார்த்திருந்தான். எனவே, புரச மரங்கள் பூத்திருக்கும் காட்சியைப் பார்க்கும்போது அவனுக்கு ருத்ர பூமியின் நினைவு வரு

வது வழக்கம்.


ப்போது அவன் கிராமத்துக்கு எத்தனையோ தூரத்துக்கு அப்பால் தனியாகக் காட்டு வழியில் போய்க்கொண்டிருந்தபோது மேற்கூறிய மயானத்தின் ஞாபகம் தோன்றி அவன் மனத்தில் பயங்கரத்தை உண்டு பண்ணிற்று. மயானத்தின் நினைவோடு பேய் பிசாசுகளின் நினைவும் சேர்ந்துவந்தது. மற்ற விஷயங்களில் மகா தைரியசாலியான பரஞ்சோதிக்குப் பேய் பிசாசு என்றால் பயம் அதிகம். 'இன்றைக்கு இந்தக் காட்டு வழியே இருட்டிய பிறகும் போக வேண்டுமே!' என்று நினைத்த போது அவனுடைய நெஞ்சையும் வயிற்றையும் என்னவோ செய்தது. அதோ அந்த இரண்டு மலைகளும் கூடுகிற இடத்தில்தான் அன்றிரவு தங்க வேண்டிய சத்திரம் இருப்பதாக அவன் அறிந்தான். அங்கே போய்ச் சேருவதற்குள்ளே இருட்டி ஒரு ஜாமத்துக்கு மேலாகி விடலாம். நிலா வெளிச்சமே இராது. முன்னிருட்டுக் காலம். 'அடடா! வழியிலே ஏன் இவ்வளவு தாமதித்தோம்?' என்று எண்ணியவனாய்ப் பரஞ்சோதி குதிரையை வேகமாய்ச் செலுத்த முயன்றான். ஆனாலும் பகலெல்லாம் பிரயாணம் செய்து களைத்திருந்த குதிரை எவ்வளவுதான் வேகமாய்ப் போய்விடக் கூடும்?

நிர்மானுஷ்யமான அந்தமலைப் பிரதேசம் உண்மையில் அச்சத்தைத் தருவதாய்த்தான் இருந்தது. பட்சிகள் மிருகங்கள் கூட அங்கே காணப்படவில்லை. இருட்டிய பிறகு நரிகள் ஊளையிட ஆரம்பிக்கும்; பயங்கரத்தை அவை இன்னும் அதிகப்படுத்தும்.


ற்றெல்லாம் பரஞ்சோதி நேர் வடக்கே சென்ற விசாலமான இராஜபாட்டையில் பிரயணம் செய்தான். அதன் ஜன நடமாட்டமும், குதிரைகளின் போக்குவரவும் அதிகமாயிருந்தன. பாதையில் பல இடங்களில் அவன் நிறுத்தப்பட்டான். சக்கரவர்த்தி தந்திருந்த பிரயாண இலச்சினையை அவன் அங்கங்கே காட்டிக்கொண்டு போக வேண்டியிருந்தது.

இன்று காலையிலே இராஜபாட்டையை விட்டு மலைப் பாதையில் திரும்பிய பிறகு அத்தகைய தொந்தரவு ஒன்றுமில்லை. ஆனால் இப்போது பரஞ்சோதிக்கு ஒரு பெரிய குதிரைப் படையே அந்த வழியில் வரக் கூடாதா என்று தோன்றியது.

ஆ! அது என்ன சப்தம்! குதிரைக் குளம்படியின் சப்தம் போலிருக்கிறதே! ஆம்; குதிரைதான் பின்னால் வந்து கொண்டிருக்கிறது. வருகிறது யாராயிருக்கும்? யாராயிருந்த போதிலும் நல்லதுதான். இருட்டுக்கு வழித் துணையாயிருக்குமல்லவா?

வருகிறது ஒரே குதிரையா? பல குதிரைகளா? பரஞ்சோதி தன் குதிரையை நிறுத்தி விட்டுக் காது கொடுத்துக் கேட்டான். சட்டென்று சப்தம் நின்றுவிட்டது. ஒரு வேளை வெறும் பிரமையோ? யாராவது வரக் கூடாதா என்று அடிக்கடி எண்ணியதன் பயனோ?

பரஞ்சோதி மேலே குதிரையைச் செலுத்தினான். மறுபடியும் பின்னால் குதிரை வரும் சப்தம் கேட்டது. திரும்பிப் பார்த்தால் ஒன்றும் தெரியவில்லை. மலைப் பாதை வளைந்து வளைந்து சென்றதனால் குதிரை சமீபத்தில் வந்தாலும் அதைத்தான் பார்க்க முடியாது.

இதற்குள்ளே சூரியன் அஸ்தமித்து நாலாபுறமும் இருள் சூழ ஆரம்பித்து விட்டது.

அதிக வளைவு இல்லாமல் பாதை நேராகச் சென்ற இடத்துக்கு வந்தபோது பரஞ்சோதி குதிரையைச் சற்றுநேரம் வேகமாக விட்டுக் கொண்டுபோய்ச் சட்டென்று நிறுத்திவிட்டுத் திரும்பிப் பார்த்தான். கொஞ்ச தூரத்தில் ஒரு குதிரை வந்துகொண்டிருந்தது. அதன் மேல் ஆள் இருப்பதும் தெரிந்தது. பரஞ்சோதியின் குதிரை நின்றதும் அவனும் தன் குதிரையை நிறுத்தினான்.

பரஞ்சோதிக்குச் சொல்ல முடியாத கோபம் வந்தது. குதிரையை லாகவமாய்த் திருப்பிப் பின்னால் நின்ற குதிரையை நோக்கி விரைவாகச் சென்றான். அப்பொழுது கையெழுத்து மறையும் நேரம்.

(தொடரும்)







• ஜெயலலிதாவுடன்...

# ஐஸ்வர்யாராய் கேட்ட ஆட்டோகிராஃப்!





அன்றைய ஜெயலலிதாவில் ஆரம்பித்து இன்றைய பூமிகா வரை மூன்று தலைமுறையாகத் தொடர்கிறது இவரது காஸ்ட்யூம் பணி. ஒரு பிரபல காஸ்ட்யூமர் என்று சொல்ல முடியாதபடி கதர்ச் சட்டையில் எளிமையாக இருக்கிறார் காசி.

"புதிய ஆடை அணிந்து வந்தால் அழுக்காகி விடும் என்ற மனோபாவம் வரும், பிறகு உழைக்க முடியாது. இயல்பாகவே ஆடம்பர உடைகள் என்றால் எனக்கு அலர்ஜி" என்று முரண்படும் காசி

தமது காஸ்ட்யூம் அனுபவங்களைக் கதைக்கிறார்.

"காரைக்குடி பக்கமுள்ள தானா வயல் கிராமத்திலிருந்து, பத்து வயது சிறுவனாகச் சென்னைக்கு வந்தேன். தியாகராயநகரின், தண்டபாணித் தெருவில் இருக்கும் சந்திரா டைலர்ஸில் (இன்றைக்கும் அந்தத் தையலகம் இருக்கிறது) ஐம்பது பைசா ஊதியத்தில் வேலை கிடைத்தது. அது மூன்று ரூபாயாக உயர்கிற வரை அங்கேயே வேலை செய்து தைக்கக் கற்றுக் கொண்டேன். பிறகு ஜெயலலிதாவிடம் காஸ்ட்யூமராக இருந்த ஜி. சீனுவாசனிடம் உதவியாளனாகச் சேர்ந்தேன். அவர் வேலையைவிட்டு நின்றபிறகு, என்னை தமது காஸ்ட்யூம் உதவியாளனாக ஜெயலலிதா சேர்த்துக் கொண்டார். அவரது உடைகளை இஸ்திரி போடுவது மட்டும்தான் எனக்கு வேலை. 'பட்டிக்காடா பட்டணமா' படத்தை 'பிரேமலு பிள்ளிலூ' என்று தெலுங்கில் எடுத்தார்கள். அதிலும் ஜெயலலிதாதான் நாயகி. ஹைதராபாத்தில் படப்பிடிப்பு. அப்போது அவரது பிறந்த நாள் வந்தது. பிறந்த நாள் அன்று உடுத்திக் கொள்வதற்காக 'நல்ல டைலரிடம் சென்று ஒரு ஜாக்கெட் தைத்து வா' என்று உத்தரவிட்டார். 'நானே நன்றாகத் தைப்பேன். ஒரு வாய்ப்புக் கொடுத்துப் பாருங்களேன்' என்றேன். 'சரி' என்றும் சொல்லாமல், 'தைக்காதே' என்றும் சொல்லாமல் தீர்க்கமாக என்னை நோக்கி ஒரு பார்வையை வீசி விட்டுப் போய் விட்டார். 'நடப்பது நடக்கட்டும்' என்று கொஞ்சம் பயத்துடன் தைத்தேன். ஜாக்கெட் நன்றாக வந்திருந்தது. அதை வாங்கிப் பார்த்த அவரது முகத்தில் மகிழ்ச்சிக்கு அளவே இல்லை. "இனி நீ எங்கேயும் போக வேண்டாம். எனக்கு மட்டும் காஸ்ட்யூமராக இரு" என்று ஒரு தையல் இயந்திரத்தை வாங்கிக் கொடுத்து விட்டார். பல படங்களுக்கு அவரோடு பணியாற்றினேன். அவரது பர்சனல் உடைகளையும் தைத்துக் கொடுத்தேன். ஆனால் வெளியே வந்து காஸ்ட்யூமராக வேண்டும் என்று கால்கள் துடிக்க, ஜெயலலிதாவிடம் சொல்லாமல் கொள்ளாமல் ஓடி வந்து விட்டேன்.





இன்று வரை போய்ப் பார்க்கவில்லை. அந்த குற்ற உணர்வு இன்னும் மனசுக்குள் மிச்சமிருக்கிறது. கடவுளை எப்படி போட்டோவில் பார்த்து வணங்குகிறேனோ அப்படித்தான் அவரையும் வணங்குகிறேன்.

பிரதாப் போத்தன் இயக்கிய 'மீண்டும் ஒரு காதல் கதை'யில் பணியாற்றிய போதுதான் ராதிகா நட்பு கிடைத்தது. கேரக்டருக்குத் தகுந்த மாதிரி உடை அணிவதில் இவரை அடித்துக் கொள்ளவே முடியாது. சினிமா காஸ்ட்யூம் என்றாலும், அணிபவரின் நிறம், உயரம், உடல் பருமன், முக அமைப்பு ஆகியவற்றுக்கு ஏற்ப, நிறத்தையும், டிசைனையும் எப்படித் தேர்வு செய்வது என்பதை ராதிகாவிடம் கற்றுக் கொண்டேன். ராதிகாவுக்குத் தைத்த உடைகள் பிடிக்கவில்லை என்றாலோ, அல்லது செட்டாகவில்லை என்றாலோ நம் கண் முன்பே கிழித்துப் போட்டுவிடுவார். அதே போல மறுநாள் படப்பிடிப்பிற்கான உடைகளை தைத்துக் கொண்டு நள்ளிரவு போய் கதவைத் தட்டினால் கூட சலிக்காமல், பொறுமையாகப் போட்டுப் பார்த்து கரெக்ஷன் சொல்வார்.

'ராஜாதி ராஜா' படத்தில் சூப்பர் ஸ்டார் ரஜினிகாந்தின் காஸ்ட்யூமராக பணியாற்றும் வாய்ப்புக் கிடைத்தது. அந்தப் படத்தில் வரும் 'மலையாளக் கரையோரம்' பாடலுக்காக லண்டனிலிருந்து அவர் வாங்கி வந்திருந்த வெள்ளை நிற பேரரலல் பேகி பாண்ட்டையும், வெள்ளை லூஸ் பிட்டிங் சட்டையையும் என்னிடம் கொடுத்து அதைப் போலவே தைக்கச் சொன்னார். இன்றும் பேரரல் பேண்ட், லூஸ்பிட் சட்டைகள் ஃபேஷனாக இருக்கின்றன. ரஜினியைப் பொறுத்தவரை, எந்தக் கம்பெனி படத்தில் நடிக்கிறாரோ அந்தக் கம்பெனி காஸ்ட்யூமரே பணியாற்ற வேண்டும் என்று சொல்வார். தமக்கென்று பிரத்யேக காஸ்ட்யூமர் இருந்தால் மற்றவர்களின் பிழைப்பு கெட்டு விடும் என்று நினைக்கும் நல்ல மனசு!

கமலுக்கு அவரது மனைவிதான் காஸ்ட்யூம் டிசைனர் என்றாலும், படத்தில் ஹீரோயின் மற்ற நடிகர், நடிகைகளுக்கு காஸ்ட்யூம் பொருத்தமாக இருக்க வேண்டும் என்பதில் கவனமாக இருப்பார். 'மைக்கேல் மதன காமராஜன்' படத்தில் பீம்பாய் கேரக்டரில் நடிக்க கடோத்கஜன் தோற்றத்தில் ஒரு நடிகர் மும்பையிலிருந்து வந்தார். இப்படியொரு கேரக்டர் இருப்பதாகவே எனக்குச் சொல்லப் படவில்லை. உடனடியாக அவருக்கு சபாரி சூட் தயாரிக்க வேண்டும் என்று கேட்டதும் ஸ்பாட்டிலேயே இரண்டு மணி நேரத்தில் தைத்துக் கொடுத்தேன். யூனிட்டே பாராட்டியது.

எஸ். ஏ. சந்திரசேகரனிடம், உதவி இயக்குனராகப் பணியாற்றிய காலம் தொட்டே இயக்குனர் ஷங்கரைத் தெரியும். ஜென்டில்மேனில் தொடங்கி இன்று வரை அவரது படங்களுக்கு, காஸ்ட்யூமராக பணிபுரியும் வாய்ப்புக் கொடுத்திருக்கிறார். உடைகளுக்கான கேட்லாக்கை அவரே கொடுத்து விடுவார். அதே போல் உடைகள் ரெடியானதும், சந்தேகம் வந்தால், ஆர்டிஸ்டை அணிய வைத்து ஸ்டில் எடுத்து பார்த்து விட்டுத் தான் ஸ்பாட்டிற்குப் போவார். 'ஒட்டகத்தை கட்டிக்கோ' பாடலுக்கு அவர் வாய்மொழியாக கொடுத்த டிப்ஸ்களை வைத்துக் கொண்டு ஓர் உடை தயாரித்தேன். ராஜஸ்தான் பாலைவன பின்னணியில் அந்தப் பாடலை எதிர்பாராமல் படம்பிடித்தார் ஷங்கர். அவரும் கூட எதிர்பார்க்கவில்லை. அந்த பின்புலத்துக்கு நான் தைத்த உடைகள் கச்சிதமாகப்

## தேசியகீதம்?

நல்ல சினிமா எடுப்பவர்களை, 'பிழைக்கத் தெரியாதவன்' என்று பாராட்டும் கோடம்பாக்கத்திலிருந்து, நிறைய பேர் திரண்டு வந்திருந்தது பெரிய ஆச்சர்யம்! பின்னே...? அது 'நந்தா' பட ஒலிப்பேழை வெளியிட்டு விழாவாச்சே! 'சேது' படத்தைப் பார்த்துவிட்டு யாரந்த 'பாலா' என்று அவரைத் தேடியதாக காம்ப்ளிமெண்ட் கொடுத்தார் கேஸட்டை வெளியிட வந்திருந்த கமல்ஹாசன். படத்தின் இசையமைப்பாளர் யுவன் சங்கர் ராஜா பற்றி வியந்தார் பாரதிராஜா. '''எனது அடுத்த படத்திற்கு இசையமைக்கலாமே

என்று யுவனைக் கூப்பிட்டேன். உங்க அப்பனுக்கும், எனக்கும் ஆயிரம் பிரச்னைகள் இருக்கலாம். அதுவேறு' என்றேன். அவனே எனது தயக்கத்தையெல்லாம் தவிடுபொடியாக்கிவிட்டு, இசை பற்றி நான் எதிர்பார்க்காததையெல்லாம் பேசி என்னை வியக்க வைத்துவிட்டான்'' என்றார். படத்தில் இடம்பெற்ற பாடல்களை இடையிடையே ஒலிக்கவிட்டார்கள். எல்லாம் உயிரை உருக்கும் சிச்சுவேஷன் பாடல்கள்.

விழாவின் முடிவில் தேசியகீதம் பாட அனுராதா ஸ்ரீராமை அழைக்க, அவரோ ''எனக்கு நிறைய ஈழத்தமிழர்கள் நண்பர்கள்'' என்று சொல்லிவிட்டு,



'ஜனகனமன' பாடலுக்குப் பதிலாக ஒரு தமிழ்ப் பாடலைப் பாடினார். அனுராதாவின் உணர்வுகளை மதிக்க வேண்டியதுதான். ஆனால் தமிழ்ப் பாடலுக்குப் பிறகு தேசிய கீதத்தைப் பாடியிருக்கலாமே!

— ஜெ

பொருந்தி விட்டன. அதே போல் 'காதலன்' படத்தில் வரும் 'முக்காலா முக்காபுலா' பாடலை ஆந்திர மாநிலம் ராஜமுந்திரியில் படம்பிடித்தோம். அந்தப் பாடலில் ஐந்து 'காஸ்ட்யூம் சேஞ்ச்' வரும். டான்சர்களின் கால்ஷீட்டோ ஒருநாள் தான் கையிருப்பு. ஆண், பெண் டான்சர்கள் நாற்பது பிளஸ் நாற்பது மொத்தம் எண்பது பேருக்கு நானூறு உடைகளை விடிய விடிய தைத்துக் கொடுத்து பாராட்டுப் பெற்றோம். அந்தப் படத்துக்கு மாநில அரசின் காஸ்ட்யூம் விருதும் கிடைத்தது.

'இந்தியன்' படத்தில் 'கப்பலேறிப் போயாச்சு' பாடலில், 2500 பேருக்கு அந்தக் காலத்து பீரியட் காஸ்ட்யூம் தைத்ததும் பெரிய அனுபவம். 'டெலிபோன் மணிபோல்' பாடலுக்காக இயக்குனர் ஆஸ்திரேலியா போக வேண்டும் என்றார். கமல், மனீஷாவுடன் ஆடும் நாற்பது ஆஸ்திரேலிய டான்ஸர்களுக்கு ஆஸ்திரேலிய வெப்சைட்டுகளைப் பார்த்து, அவர்களின் சராசரி உயரத்தை மனத்தில் கொண்டு தோராயமான அளவுகளில் உடை தயாரித்துப் போனோம். அவர்களே வியக்கும்படி கச்சிதமாகப் பொருந்தி விட்டன.

ஷங்கர் படங்களில் பணியாற்றும் போதுதான் உலக அழகிகள் ஐஸ்வர்யா ராய், சுஷ்மிதா சென் இருவருக்கும் காஸ்ட்யூம் டிசைன் செய்தேன். 'ஜீன்ஸ்' படத்தில் 'அன்பே அன்பே பாடலுக்காக' ரவி வர்மா ஓவியத்தில் உள்ள உடைகளை, காஸ்ட்யூமாக உருவாக்க வேண்டும் என்றார் இயக்குனர். தோட்டாதரணி அந்த மாடலை வரைந்து கொடுக்க அதை அப்படியே உருவாக்கினேன். இந்தப் பாடல் படப்பிடிப்பின்போது ஐஸ்வர்யா ராயிடம் நான்ஆட்டோகிராஃப் கேட்டேன். அவரோ எனனிடம் பிடிவாதமாக ஆட்டோகிராஃப் வாங்கிக் கொண்டார். சுஷ்மிதா சென் கைகுலுக்கிப் பாராட்டினார். யுக்தாமுகி கைப்பட ஒரு பாராட்டுப் பத்திரமே எழுதிக் கொடுத்தார்.

இயக்குனர் கதிர் காஸ்ட்யூம்களை, கைப்பட வரைந்தே காட்டி விடுவார். பாரதி ராஜாவோ 'கற்பனையில் இயல்பாய் வருவதை காஸ்ட்யூம் செய்' என்பார். 'கடல் பூக்கள்' படத்திற்காக 'முட்டம்' கிராமத்தில் படப்பிடிப்பு. ''மீனவப் பெண்கள் இப்படியா மடிப்புக் குலையாமல் புடைவை அணிவார்கள்? எல்லாவற்றையும் வாங்கி கசக்கி, பழைய புடைவைகள் போல ஆக்கி பிறகு அணியச் செய்'' என்றார். ஆனால் அங்கே ஷூட்டிங் பார்க்க வந்திருந்த மீனவப் பெண்கள் எல்லோரும் நைட்டி அணிந்திருந்தார்கள். ''உங்கள் முட்டம் மார்டனாக மாறி விட்டது'' என்றதும் சிரித்துக் கொண்டே ஆமோதித்தார். அவரிடம் நல்ல பெயர் வாங்குவது டாக்டரேட்டுக்குச் சமம்.

சந்திப்பு : **சக்கரத்தாழ்வார்**
படம் : **ஸ்ரீஹரி**



# சிவபெருமானை எந்தெந்த மலர்களினால்

## பூஜித்தால் என்னென்ன பலன்கள் கிடைக்கும்

| விரும்பும் பலன் | எந்த மலரால் அர்ச்சிக்க வேண்டும் |
|---|---|
| 1. பெருஞ் செல்வம் விரும்பு வோன் | தாமரை மலர், வில்வம், சதபத்திரம் சங்கபுஷ்பம் ஆகியவற்றால் லட்சக்கணக்கில் பூஜித்தால் சந்தேகமில்லாமல் பெருஞ்செல்வத்தைப் பெறுவான். |
| 2. இராஜபோகத்தை விரும்பு வோன் | பழுதில்லாத பத்து கோடி மலர்களால் பார்த்திவ் லிங்கத்தைப் பூஜிக்க வேண்டும். அல்லது பத்து கோடி வில்வ தளத்தை சுகந்த சந்தனத்தில் தோய்த்துப் பூஜிக்க வேண்டும். இதற்கு தாமரை மலர்கள் அல்லது சங்க புஷ்பங்கள் பூஜிக்கத்தக்கவை. பிறகு தூபதீபன நைவேத்ய அர்கிய, ஆரார்திக் பிரதக்ஷிணை, நமஸ்கார, க்ஷமாபணவிஸர்ஜனத் முதலியவற்றைச் செய்தால் இஷ்ட போகமும் ராஜரீகமும் உலகநாயகரான சிவபெருமான் திருவருளால் கிடைக்கும். |
| 3. பிரதானித்துவத்தை விரும்புவோன் | ஐந்து கோடி மலர்களாலும் |
| 4. சிறையிலிருந்து நீங்க விரும்புவோன் | லக்ஷம் புஷ்பங்களாலும் |
| 5. நோய் நீங்க விரும்புவோன் | ஐம்பதாயிரம் மலர்களாலும் |
| 6. அழகான மங்கையை மணம் செய்ய விரும்புவோன் | இருபத்து ஐயாயிரம் மலர்களாலும் |
| 7. கல்வியில் விருப்பம் கொண்டவன் | பன்னிராயிரத்து ஐநூறு மலர்களாலும் பூஜிக்க வேண்டும். |
| 8. கீர்த்தியடைய வேண்டிய வர்கள் | பதினாயிரம் மலர்களாலும் |
| 9. முக்தி வேண்டியவன் | ஐந்து கோடி மலர்களாலும் |
| 10. ஞானம் வேண்டியவன் | கோடி மலர்களாலும் அர்ச்சனை செய்ய வேண்டும். |

## விரும்பும் பலன் எந்த மலரால் அர்ச்சிக்க வேண்டும்

| | | |
|---|---|---|
| 11. சிவபெருமான் பிரத்தி யட்சமாக வேண்டியவன் | — — — | அரைக் கோடி மலர்களால் அர்ச்சித்து மிருத்யுஞ்சய மந்திரத்தை ஐந்து லக்ஷம் முறை உரு ஜபிக்க வேண்டும். |
| 12. தேகத் தூய்மையை விரும்புவோன் | — — — | லக்ஷ மலர்களால் அர்ச்சிக்க வேண்டும். |
| 13. ஜன்மாந்திர ஞானம் விரும்புவோன் | — — — | இரண்டு லக்ஷம் மலர்களால் அர்ச்சிக்க வேண்டும். |
| 14. கர்ம தாசனம் வேண்டுபவன் | — — — | மூன்று லக்ஷம் மலர்களால் அர்ச்சிக்க வேண்டும். |
| 15. ஸவ்பதை தரிசனம் வேண்டுபவன் | — — — | நான்கு லட்சம் மலர்களால் அர்ச்சிக்க வேண்டும். |
| 16. தீர்க்காயுளை விரும்புவோன் | — — — | லட்சம் அருகினாலும் |
| 17. புத்திரப்பேற்றை விரும்புவோன் | — — — | லட்சம் கருவூமத்தையாலும் |
| 18. புகழை விரும்புபவன் | — — — | லட்சம் அகத்திப் பூவினாலும் |
| 19. சித்தி முகத்தினை வேண்டியவன் | — — — | லட்சம் துளசியாலும் |
| 20. சத்துருஷ்யம் வேண்டியவன் | — — — | லட்சம் லட்சம் வெள்ளெருக்க மலர்களாலும் |
| 21. ரோக நீக்கம் விரும்பியவன் | — — — | மாதுளை மலர், உற்பல மலர், சப்பாத்தி மலர்களாலும், கரவீர மலர்களாலும் |
| 22. விஷ்ணுவின் அனுக் கிரகத்தை வேண்டுபவன் | — — — | அதஸிப் பூவினாலும் முக்திகாமி வன்னியினாலும் |
| 23. தானியசம்பத்தை வேண்டியவன் | — — — | மலை மல்லியாலும் |
| 24. வஸ்திர சம்பத்தை வேண்டியவன் | — — — | கோங்க மலராலும் |
| 25. மனநிர்மலத்தை வேண்டுபவன் | — — — | நிர்க்குண்டியாலும் பூஜிக்க வேண்டும். |

*சிவப் பிரீதியான மலர்கள் கிடைக்காவிட்டால் இதர மலர்களால் பூஜிக்கலாம்.*

### எந்த மலர்களால் சிவபெருமானை பூஜிக்கக் கூடாது.

சண்பகம், தாழை இவ்விரண்டு மலர்களால் சிவபெருமானை பூஜிக்கக் கூடாது

— சிவமஹாபுராணம்



* கே. பாலசந்தர்

சட்டை, வெள்ளை பாண்ட்டுக்கு மாறி, பதினைந்து வருடங்களாகிவிட்டன. எனக்கு வெள்ளை டிரஸ் பொருத்தமாக இருப்பதாக நண்பர்கள் சொல்லவே அதுவே நிரந்தரமாகி விட்டது. என் பிறந்த வீடான ஏவி.எம்.மில் சரவணன் சார், எப்போதும் வெள்ளை டிரஸ்தான் அணிவார். அந்த பாதிப்பில் நானும் முழுமையாக வெள்ளைக்கு மாறிவிட்டேன்.



* விக்ரமன்

**எப்போதும் இருக்கும் வெண்மை உடையி லேயே சில பிரமுகர்களி டம் ''நீங்கள் ஒயிட் அண்டு ஒயிட்டுக்கு மாறியது எப்போது?'' என்று கேட்டபோது...**

**எஸ்.பி. முத்துராமன் :**

**நா**ன் வெள்ளை



* எஸ்.பி.முத்துராமன்

# வெள்ளை

**கே. பாலசந்தர் :**

**சி**னிமா உலகில் சுமார் ருப்பத்தைந்து வருடங்களுக்கு முன்னால், ரெகுலராக வெள்ளை பாண்ட் . சட்டை அணிந்து கொண்டிருந்தது நான் மட்டும்தான் என்று நினைக்கிறேன். ஒரு கட்டத்தில், வெள்ளை உடை அணிய வேண்டும் என்கிற எண்ணம் வலுத்ததன் விளைவுதான் இந்த முடிவு. செட்டில், உட்கார்ந்து, எழுந்து, பணியாற்றும்போது, வெள்ளை உடையில் சிறிது அழுக்குபட்டாலும் பளிச்சென்று தெரியும் என்பதால், அப்போது காலையில் அணிந்து



* முரளி

செல்லும் உடையை, மதிய உணவுக்கு வீட்டுக்கு வரும்போது மாற்றி புதிய வெள்ளை டிரஸ் அணிந்துகொண்டு மறுபடி படப்பிடிப்புக்குப் போவேன். ஆனால் சமீபகாலமாக, லஞ்ச் பிரேக் சமயம் வீட்டுக்கு வர முடிவதில்லை. எனவே லைட் நிற சட்டைகளும் அணிய ஆரம்பித்திருக்கிறேன்.

**ஏவி.எம். சரவணன் :**

அதென்னமோ தெரியவில்லை. சிறுவயதில், எங்கள் தாயார், எங்கள் எல்லோருக்கும் வெள்ளை பாண்டும், சிறு சிறு துவாரங்கள் கொண்ட, இம்போர்டட் சட்டையும் தைத்துக் கொடுப்பார்கள். நான் சிறு வயது முதலே எங்கள் இருவருக்கும் வெள்ளைஉடை மீது அலாதி பிரியம் ஏற்பட்டுவிட்டது என்றுதான் சொல்ல வேண்டும். குளித்துவிட்டு வந்து, வெள்ளை பாண்ட், சட்டை அணிகிறபோது, ஒரு அதீத புத்துணர்ச்சி வந்துவிடுகிறது. அதுமட்டுமின்றி வெண்மை தூய்மையின் அடையாளம் : அடக்கத்தின் உருவம் என்று நினைக்கிறோம்.

* ஏவி.எம்.சரவணன்

# மனிதர்கள்!

தலையெடுத்து, துணி வாங்க ஆரம்பித்தபோது, அதே பழக்கத்தில், வெள்ளை பாண்ட், வெள்ளை சட்டை வாங்கி, அணிய ஆரம்பித்தேன். அறுபதுகளில் சில வருடங்கள் தயாரிப்பு நிர்வாகம் பார்த்துக் கொண்டபோது, கலர் சட்டை அணிந்தது உண்டு. என்றாலும் கடந்த சுமார் முப்பத்தைந்து வருடங்களாக ஒயிட் அண்டு ஒயிட்தான். வெள்ளைதான் எனக்குப் பிடித்த நிறம். என் கார்கூட வெள்ளை நிறம்தான். என் பேரன்கூட அடிக்கடி, "தாத்தா, வெள்ளை என்பது ஒரு நிறமே இல்லை. அதுபோய் உன் பேவரிட் கலரா?" என்று கேட்பான்.

**ஸ்ரீகிருஷ்ணா ஸ்வீட்ஸ் முரளி :**

நான் மட்டுமில்லை என் அண்ணன் கிருஷ்ணன்கூட எப்போதும் ஒயிட் அண்டு ஒயிட்தான்.

**'அமுதசுரபி' விக்ரமன் :**

நான் கடந்த சுமார் ஐம்பது வருடங்களாக வெள்ளை ஜிப்பா, வெள்ளை வேட்டிதான். அதுவும் கதர்தான். அதற்கு முன்பு, படித்துவிட்டு, வேலைக்குச் சேர்ந்ததுமுதல் வெள்ளை அரைக்கை சட்டை, வேட்டி. முன்பு, நானே நூல் நூற்று, அதைக் கொண்டுப் போய்க் கொடுத்துவிட்டு கதர் துணி வாங்கி வந்து ஜிப்பா தைத்துக் கொள்ளுவேன். ஏனோ, ரெடிமேடு ஜிப்பாக்களை நான் விரும்புவதில்லை. ஒரு தடவை எடுத்தால், ஆறு வேட்டி, ஆறு ஜிப்பாவுக்குத் துணி எடுத்து விடுவேன். வெள்ளைத் துண்டு போடுவது என் வழக்கம். சமீப காலமாக, அவ்வப்போது, வண்ணச் சால்வைகள் அணிகிறேன்.

— சந்திரமௌலி

முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

# குறையொன்றுமி

எட்டு விதமான பக்தியில் முதலாவது பக்த ஜன வாத்ஸல்யம்; இரண்டாவது பகவானைப் பூஜிப்பதை அனுமதிக்கக் கூடியவர்களாய் இருப்பது.

மூன்றாவது, மற்றவர்கள் பூஜை பண்ணட்டும் என்று பேசாமல் இருந்துவிடாமல், தானும் பண்ணவேண்டும்.

தானும் புஷ்பங்களை எடுத்து பகவானை அர்ச்சனை பண்ணி ஆராதிக்க வேண்டும். பகவத் கைங்கர்யத்திலே ஈடுபட வேண்டும்.

உபநிஷத் சொல்கிறது: ஜீவாத்மாவுக்குத் தனித்து ஒரு வாக்கியம் கிடையாது! இந்த ஜீவாத்மாவினுடைய ஆனந்தம் எது...? ஜீவாத்மாவானது பகவத் சேவை-கைங்கர்யம் பண்ணுகிறது. அதைப் பார்த்து பரமாத்மா ஆனந்திக்கிறான். அவனுடைய திருமுகம் 'ஆகா' என்று சந்தோஷப்படுகிறது. அதைப் பார்த்து இவன் ஆனந்தப் பட வேண்டுமேயொழிய, வேறு ஆனந்தம் ஜீவாத்மாவுக்கு இல்லை. அப்படி உயர்ந்த ரீதியிலே எம்பெருமானை அர்ச்சனை பண்ண வேண்டும்.

நான்காவதாகப் பாருங்கள்... **அவன்** விஷயத்தில் ஜம்பப்படக்கூடாது! படாடோபத்துக்காக, மற்றவர்கள் கொண்டாடுவார்கள் என்பதற்காக ஒன்று பண்ணக்கூடாது. முக்குறும்பறுத்த நம்பி என்று எம்பெருமானுக்குப் பெயர். கியாதி, லாபம், பூஜை - இது மூன்றும் முக்குறும்பு.

தனக்கு கீர்த்தி ஏற்படும் என்பதற்காகவே லாபம் ஏற்படும் என்பதற்காகவோ பகவான் விஷயத்தில் ஈடுபடலாகாது. அதை வெறுக்கிறான் எம்பெருமான்.

திருவேங்கடமுடையான் சன்னிதியில் தொண்டைமான் சக்ரவர்த்தி நித்தியம் ஆயிரம் சுவர்ண புஷ்பங்களால் அர்ச்சனை பண்ணிக் கொண்டிருந்தான். அவ்வாறு பண்ணி இரவு சேவை ஆன பிற்பாடு கதவைச் சார்த்தி சீல் வைத்துவிடுவார்கள்.

ஒரு நாள் காலை, கதவைத் திறந்து பார்த்தால், சுவர்ண புஷ்பங்களெல்லாம் கீழே, தரையிலே கிடக்கின்றன. மண்ணாலான புஷ்பம் பகவான் திருவடியிலே இருக்கிறது! ராஜா பார்த்து திடுக்கிட்டான். மண்ணாலே கூட அர்ச்சனை பண்ணுவார்களா என்ன...? யார் இப்படிப் பண்ணியது?

கேட்டுப் பார்த்தால் யாருக்கும் தெரியவில்லை. இந்த மாதிரியே இரண்டு மூன்று நாட்கள் ஆகிவிட்டன. ஆஸ்தான புரோகிதர்களைக் கேட்டால், 'யாரோ ஒருத்தன் எங்கோ மண் புஷ்பம் சமர்ப்பிக்கிறான். அதைத் தான் பகவான் ஏற்கிறான்' என்று சொல்லிவிட்டார்கள். 'அதற்கு மேல் சமர்ப்பிக்கப்படும் சுவர்ண புஷ்பத்தைக் கீழே தள்ளிவிடுகிறான்' என்றார்கள்.

ராஜா தேட வைத்தான். தேடிப் பார்த்தால், கீழே-மலையடிவாரத்திலே ஒரு குயவன், மண் பானை பண்ணுவதும் தன்னுடைய குடிசையிலேயே திருவேங்கடமுடையானை மண்ணால் பண்ணி வைத்திருப்பதும் தெரிகிறது. ரொம்ப வயோவிருத்தனாக இருக்கிறான். எழுந்திருக்க முடியவில்லை அவனால். 'நீ இங்கேயே இருக்கிறாய். உன்னை என்னால் ஏறி வந்து சேவிக்க முடியாது. அந்த பாக்யம் எங்கே கிடைக்கும்!' என்று இருக்கிற இடத்திலேயே சேவிக்கிறான். அதை, பரமாத்மா அங்கே உத்தம ஸ்தானத்திலே ஏற்கிறான்.

ஆகவே, கியாதி அல்லது புகழுக்காகச் செய்வதை பகவான் வெறுக்கிறான். லாபம் கருதிச் செய்வதை வெறுக்கிறான். உத்தமமான பக்தியோடு பண்ணப்படுகிற பூஜையைத்தான் ஏற்கிறான்.

ஐந்தாவது பக்தி - பகவானின்

நாமத்தை சிரவணம் பண்ணும்படியான பக்தி. பக்தியோடு நாம சங்கீர்த்தனம் பண்ணவேண்டும். பிறர் கீர்த்தனம் பண்ண, நாம் படாடோபமில்லாமல் கேட்க வேண்டும். அந்த மாதிரி உருகி நாமும் சங்கீர்த்தனம் பண்ணுகிறபோது ஸ்வரம் தழுதழுத்துப் போகும். எம்பெருமானை நினைத்து உருகி, ஆடி, பாடி, களிக்க வேண்டும்; கூத்தாடவேண்டும். எழுந்து, பறந்து, 'நெஞ்சழியும் - கண் சுழலும்' என்கிற ரீதியிலே எம்பெருமான் விஷயத்தில் ஈடுபட வேண்டும். ஸ்வரநேத்ரம்! - நேத்ரம் அப்படியே நீரைச் சொரிய வேண்டும். அங்கம் தடுமாறி நிற்கவேண்டும்.

# லீலை



நாரத பக்தி சூத்திரத்திலே சொல்கிறார்- பிசாசு பிடித்த மாதிரி அல்லாடுவார்களாம் பகவத் பக்தி உடையவர்கள். சில பேர், குழந்தை மாதிரி விளையாடிக் கொண்டிருப்பார்களாம்.

ஆறாவதாக அனிர்வசனீயம் - பக்தி ஸ்வரூபம்! பக்தியினுடைய நிலையை வாக்கினால் வர்ணிக்க முடியாது. 'அனிர்வசனீயம்' எது? வசனத்தில் அடங்காதது. வார்த்தையில் அடங்காதது. அப்படி பகவத் விஷயத்தில் ஈடுபடவேண்டும். 'மமாணு ஸ்மரணம் நித்யம்' என்கிறான் பகவான். இங்கே 'மம ஸ்மரணம்' (என்னை ஸ்மரணம் செய்) என்று சொல்லாமல், 'மமாணு ஸ்மரணம்' என்று 'அணு' என்கிற உப வர்கத்தைச் சேர்த்துச் சொல்கிறான். என்னையே இடையறாது ஸ்மரணை செய் என்று அர்த்தம். பகவான்தான் பரம் பொருள் என்று எண்ணி, அவனுக்கு மேற்பட்டது ஒன்று இல்லை என ஸ்மரணம் பண்ணவேண்டும்.

அப்படிப்பட்ட பகவானுக்கு அடியேன் தாஸன் என்கிற அறிவோடு ஸ்மரணம்

## அருள்வாக்கு



**க**ண்ணாடி இருக்கிறது. உள்ளே ப்ரதிபிம்பம் தெரிகிறது. திலகமில்லாமல் அது பாழ்நெற்றியாகத் தெரிகிறது. பார்த்தால் நன்றாகவே இல்லை. திலகம் வைக்கணும் என்று தோன்றுகிறது. என்ன பண்ணணும்? கண்ணாடிக்கா பொட்டு வைப்பார்கள்? அது அழுக்காகத்தான் ஆகுமே தவிர வேறே என்ன நடக்கும்? பின்னே என்ன பண்ணுவார்கள்? ப்ரதி பிம்பத்துக்கு மூலமான பிம்ப ஆஸாமிக்குத்தான் பொட்டு வைப்பார்கள். அப்படி, இந்த ஜீவலோகம் பூராவும் ஏக சைதன்யம் மாயைக் கண்ணாடியில் காட்டுகிற தினுஸு தினுஸாக ப்ரதி பிம்பங்கள்தான். நீயும் அப்படித்தான். உனக்கு ஏதாவது நல்லது பண்ணிக் கொள்ள வேண்டுமானால் அது பொட்டு இட்டு அலங்காரம் பண்ணிக் கொள்கிற மாதிரி. நேரே உனக்கே-அதாவது மாயையில் ப்ரதிபலித்து உண்டான உன் தேஹ, இந்த்ரியாதிகளுக்கே-நீ நல்லது என்று ஒன்றைப் பண்ணிக் கொண்டால் அது கண்ணாடியில் கறுப்புப் பூசி அழுக்குப் பண்ணும் கார்யம்தான். 'மூல பிம்பம் சைதன்யம் என்றால் அதற்கு நான் பண்ணக் கூடியது என்ன இருக்கிறது? முதலில் அது என் மனஸுக்கே வரவில்லையே!" என்கிறாயா? ஸரி, அதுவேதான் ரூபங்களோடு குணங்களோடு இந்த லக்ஷ்மீ நரசிம்ஹ மூர்த்தியாக வந்திருக்கிறது. அவனுக்கு பஜனை பண்ணு, பூஜை பண்ணு, ஸதா ஸ்மரணம் பண்ணு!' அது தான் உனக்குப் பண்ணிக் கொள்ளும் அத்தனை நல்லதும்-திலக தாரணம் முதலான அத்தனை அலங்காரமும் லக்ஷ்மீ நரசிம்ஹ பஞ்சரத்னம் என்கிற ஸ்தோத்திரத்திலே ஆசார்யாள் சொல்லியிருக்கிறார்.

**— ஜகத்குரு காஞ்சிகாமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்.**

பண்ணவேண்டும் என்பது ஏழாவது வகை பக்தி.

மமாணு ஸ்மரணம் நித்யம்! நித்தியம் என்னை ஸ்மரணம் பண்ணுவாயாக. நான் உனது தாஸன் என்று அர்ப்பணித்து ஸ்மரணம் பண்ணுவாயாக.

எட்டாவதாக... பகவானிடத்திலே எதையும் கேட்கக் கூடாது. அவனிடத்தில் எதையும் கேட்கக் கூடாது என்று அவனே சொல்கிறான். இப்படிச் சொன்னால்...? நாம் ஏகமாகக் கேட்கவேண்டும் என்று நினைத்துக் கொண்டிருந்தோமே... இப்படி, 'கேட்கக் கூடாது!' என்று சொல்கிறானே...?

அதற்குப் பகவான் சொல்கிறான்.... "எனக்குத் தெரியாமல் போனால்தானே நீ கேட்க வேண்டும்! உனக்கு என்ன கொடுக்க வேண்டும் என்று எனக்குத் தெரியாதா?"

'ஒரு சின்ன குழந்தைக்கு அதன் அம்மா பார்த்துப் பார்த்துக் கொடுக்கிறாள். வேளா வேளைக்கு இதைக் கொடுக்க வேண்டும்; அதைக் கொடுக்க வேண்டும் என்று கொடுக்கிறாள். இப்போது தூங்க வைக்கவேண்டும், இப்போது சாப்பிடக் கொடுக்க வேண்டும் என்று பார்த்துப் பார்த்துக் கொடுக்கிறாள் இல்லையா....? என்னை நீ, 'த்வமேவ மாதா!' என்று சதா ஸ்தோத்திரம் பண்ணுகிறாயே.... அப்பா என்கிறாய், என்னை அம்மா என்கிறாய்... தந்தை - தாய் என்று வெறுமே வாயளவில் சொன்னால் போதுமா...? பூரணமாக என்னை நம்ப வேண்டாமா...?" என்கிறான்!

கொடுக்காதவர்களைப் பார்த்து அதைக் கொடு, இதைக் கொடு என்று கேட்டால், எத்தனை நாழி கேட்டாலும் கொடுக்க மாட்டார். நூறு தடவை கேட்டாலும் கொடுக்க மாட்டார். ஆனால் கொடுப்பவர்களைப் பார்த்து நாம் கேட்கலாமா...?

அப்படிக் கேட்கத்தான் நமக்குத் தெரியுமா..? நிறைய கேட்க வேண்டும் என்று நினைத்துக் கொண்டு போவோம். ஆனால் ஒன்றுமே கேட்கத் தோன்றாது.

பகவானுக்குத் தெரியும், என்ன கொடுக்க வேண்டும் என்று... எப்போது கொடுக்க வேண்டும் என்பதும் அவனுக்குத் தெரியும். காலமறிந்து கட்டாயம் அவனே கொடுப்பான்.

அதனால்தான் எதையும் கேட்காதே என்றார்கள்.

பகவான் விஷயத்தை நன்கு புரிந்து கொண்டு, அவனிடத்தில் திருவடியில் நிரந்தர பக்தியைப் பிரார்த்திக்கலாம். அதை மட்டுமே அவனிடத்தில் கேட்கலாம்.

'உன் திருவடியிலே நிரந்தரமான, அசஞ்சலமான பக்தியை எனக்குக் கொடு' என்று அவன் திருவடியிலே பிரார்த்திப்பதைத் தவிர நாம் வேறு என்ன பண்ண முடியும்!

அதைப் பண்ணினாலே போதும் அவனே அபரிமிதமாக வாரிக் கொடுத்து விடுவான். அப்புறம் அதைத் தாங்குகிற சக்தி நமக்குக் கிடையாது! குறையில்லாத நிறைவாழ்வுதான் எப்போதும்.

**(குறையொன்றுமில்லை நான்காம் பாகம் நிறைந்தது.)**

# அதிசயங்கள் நிகழ்த்தும் அற்புத மருத்துவர்

## மருந்தில்லை என்ற சோரியாஸிஸ் மாயமாய் மறைந்து போச்சு!



நான் கடந்த சில வருடங்களாக உடம்பில் அரிப்பு ஏற்பட்டு சோரியாசிஸ் என்ற நோயாலும், கடுமையான மூட்டு வலியாலும் பாதிக்கப்பட்டேன். பல சிகிச்சைகளும் எனக்கு பலன் தராமல் ரப்பானி வைத்தியசாலாவில் காண்பித்தேன். தொடர்ச்சியாக சில மாதங்கள் அங்கு பெற்ற சிகிச்சையின் பலனாக என் பிரச்சனைகள் அனைத்தும் தீர்ந்தது தெரிவிக்கிறார் திருமதி பத்மா ஸ்வாமிநாதன், ரெய்ன் சிச் அபார்ட்மெண்ட்ஸ், மௌனசாமி மடம் தெரு, வெங்கடபுரம், சென்னை – 53.

## கர்ப்பப்பை ஆபரேஷன் என்ற பேச்சுக்கே இடமில்லை என்றாச்சு!



வயிற்று வலிக்காக சென்னையில் உள்ள ஒரு பெரிய ஆஸ்பத்திரியில் 3 ஆண்டு வைத்தியம் பார்த்தபின் கர்ப்பப்பையை எடுத்துவிடச் சொன்னார்கள். ரப்பானி வைத்தியசாலாவில் 3 மாதம் மருந்து சாப்பிட்டதில் சரியாப் போச்சு. கர்ப்பப்பையை எடுக்க தேவையில்லை என்று அதே ஆஸ்பத்திரியில் சொல்லிவிட்டார்கள் என்கிறார் போரூர், அண்ணாசாலையைச் சேர்ந்த கோவிந்தராஜின் மனைவி **G.** செல்வி.

## மலட்டுத் தன்மை என்பதே இல்லாமல் போச்சு!



குழந்தை இல்லை என்று நாங்கள் ஏறாத ஆஸ்பத்திரி வாசல்கள் இல்லை. பிறகு பலரின் ஆலோசனையைக் கேட்டு ரப்பானி வைத்தியசாலாவிற்கு வந்து தொடர்ந்து மருந்து சாப்பிட்டதில் குழந்தை பெற்று தனது மன மகிழ்ச்சியை அனைவருக்கும் தெரிவிக்கின்றனர். சென்னை தேனாம்பேட்டையைச் சேர்ந்த ஜெயசங்கர்–மாரியம்மாள் தம்பதி.

## பக்கவாத நோய் பளிச்சென்று தீர்ந்தது!



பல ஆண்டுகளாக பக்கவாத நோயால் பாதிக்கப்பட்டு செயலற்று இருந்த நான் ரப்பானி வைத்யசாலா **டாக்டர் ஹக்கீம் S.A. சையத் சத்தார்** அவர்களிடம் சிகிச்சை பெற்றபின் இரண்டே மாதங்களில் பூரண குணமடைந்தேன் என்று காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் தெருவில் வசிக்கும் திரு கே. கட்சீஸ்வரன் தெரிவிக்கிறார்.

## அறுவை சிகிச்சை இல்லாமலேயே இதய நோய் குணமான அதிசயம்!



முக்திரியாபேகம், அந்தோனி பிள்ளை தெரு, கிழக்கு தாம்பரம், சென்னை – 59.

எனக்கு இதயத்தில் அடைப்பும் வலியும் அடிக்கடி வந்ததால் நான் சில ஆண்டுகளாக மயக்கம் மற்றும் உடல்பலவீனத்தால் அவதியுற்றேன். இதனால் சென்னையில் உள்ள ஒரு பிரபல மருத்துவ மனைக்கு சென்று சிகிச்சை பெற்றேன். ஆனால் அங்கு என்னை சோதனை செய்து என் இதயத்தில் ஒரு மேஜர் ஆ்ஃபரேசன் செய்ய வேண்டும் என்று கூறிவிட்டார்கள். இதனால் என் மனம் மிகவும் வேதனைப்பட்டு சில நண்பர்கள் மூலம் ரப்பானி வைத்யசாலா சென்றேன். இங்கு எனக்கு நல்ல சிகிச்சை கிடைத்ததின் மூலம் என் நோய் படிப்படியாக இப்போது குறைந்துவிட்டது. நான் இப்போது மகிழ்ச்சியாக இருக்கிறேன்.

**மேலும் கை கால் வாதம், மூளை வளர்ச்சி குறைவு, லிவர் பெயிலியர், மூலம், நரம்புத் தளர்ச்சி, ஆண்மைக் குறைவு, யானைக்கால் வியாதி, காக்காய் வலிப்பு போன்ற சகல வியாதிகளுக்கும் சிறந்த சிகிச்சை அளிக்கப்படுகிறது.)**




**டாக்டர் ஹக்கீம் S.A. சையத் சத்தார்**
**ரப்பானி வைத்ய சாலா**

**73/1, டாக்டர் பெசன்ட் ரோடு,**
**மீர்சாகிப்பேட்டை மார்க்கெட் அருகில்,**
**இராயப்பேட்டை, சென்னை – 600 014.**
**போன்: 8510969, 8470874**



# எதிர்நீச்சல்

சமீபத்தில் சென்னை வேளச்சேரியில் உள்ள தெற்கு ஆசிய விளையாட்டுப் போட்டிகள் கூட்டமைப்பின் நீச்சல் குளம் தண்ணீரால் நிரம்பி வழிந்துகொண்டிருந்தது என்று சொல்வதைவிட தன்னம்பிக்கையால் நிரம்பி வழிந்தது என்றுதான் சொல்ல வேண்டும். பின்னே...? இந்தியா முழுவதுமிருந்து வருகை தந்திருந்த 209 உடல் ஊனமுற்ற (மனமல்ல) இளைஞர்கள், யுவதிகள், நீச்சல் உடையோடு அங்கே மகிழ்ச்சியில் நீந்திக்கொண்டிருந்தனர்.

இந்திய ஊனமுற்றோருக்கான நீச்சல் சங்கமும் சென்னை கழற் சங்கமும் இணைந்து ஏற்பாடு செய்திருந்த தேசிய அளவிலான நீச்சல் போட்டி. ஒரே ஒரு கையுடன் வேக வேகமாய் நீந்தி, வெற்றித் துடிப்புடன் முன்னேறும் இளைஞர்களையும் பெண்களையும் பார்த்த பார்வையாளர்களுக்கும் தன்னம்பிக்கை கூடு கட்டியது. 'விழிகள் இல்லையே' என்கிற வேதனையை வேரறுத்துவிட்டு, நீந்திய இளம்பெண்கள், மூளை வளர்ச்சி குன்றியவர்கள், அங்கே நீந்திய அழகைப் பார்த்துக்கொண்டிருந்தால், உற்சாகம் பக்கென்று பற்றிக் கொள்ளும்.





மகாராஷ்டிரத்தில் இருந்து வந்திருந்த ரகுராமுக்கு இரண்டு கால்களும் இல்லை. ''விபத்தில் நான் கால்களைத்தான் பறிகொடுத்தேன். எனது தன்னம்பிக்கையை அல்ல. இப்போதைக்கு நான் அணிந்திருக்கும் இந்த மரக் கால்கள் எனக்கு நிஜக் கால்களைப் போலத்தான். இந்தக் கால்களால் நடக்கிறேன். கொஞ்சம் ஓடவும் செய்வேன்'' என்று சொல்லும் இவர் ஆங்கிலக் கால்வாயை நீந்திக் கடந்திருக்கிறார். ''இந்தப் போட்டிகளில் நான் கலந்துகொண்டு பரிசு பெறுவதைவிட, இங்கே வரும், பிற மாநில வீரர்களை உற்சாகப்படுத்த வேண்டும் என்பதற்காகவே வந்தேன்'' என்கிறார்.

அனைவருக்கும் சமச்சீரான வாய்ப்பு கிட்டும்வகையில், வயது, அடிப்படையில் பிரித்து நான்கு பிரிவாக போட்டிகள் நடத்தியதைப் பாராட்டத்தான் வேண்டும். தேசிய அளவில் இரண்டாவது ஆண்டாக இந்தப் போட்டியை நடத்திய சென்னைச் கழற்சங்கம், 'ரைலா' என்கிற ஆசிய அளவிலான உடல் ஊனமுற்றோர் 'பெர்சனல் டெவலப்மெண்ட்' மாநாட்டையும் முதல் முறையாக பல லட்சம் செலவில் இதே நாளில் நடத்தியது.

— ஸ்ரீசக்கரம்

படம்: ஸ்ரீஹரி

புதுயுக யோகா – 5





# ஆடுகுதிரை ஆடலாமா?

டாக்டர் ஏ.எஸ். அசோக்குமார்

எந்தவொரு பிரச்னைக்கும் ஆழமாய் ஒரு வேர் அடியிலிருக்கும். அதை பிடுங்கி எரியாத வரை, பிரச்னை துளிர் விட்டுக் கொண்டேயிருக்கும்.

உடல் கோளாறுகளுக்கு எல்லாம் 'பிள்ளையார் சுழி' போட்டு, அமர்க்களமாக ஆரம்பிப்பது ஜீரணக் குறைவுதான்.

செரியாமை என்பது பரபரப்பான உலகம் தந்த நாகரிகப் பரிசு. பார்ப்பதற்கு சாது போல இருந்து கொண்டு, எல்லா பிரச்னைகளுக்கும் மூல காரணமாகி, உடலுக்குத் தீமையை விளைவிக்கும்.

செரியாமை?

உண்ட உணவு ஜீரணமாகாமல், மந்தப்பட்டு அவதிப்படுவதே அஜீரணம். அழகாய் 'அஜீரணம்' என்று ஒற்றை வார்த்தையில் சொல்லிவிட்டாலும், வயிற்றுக் கோளாறு, வயிறு உப்புசம், நெஞ்சு எரிச்சல், வாயு, அடிக்கடி கொட்டாவிவிடுதல் போன்றவை அஜீரணத்தின் இணை பிரியா தோழிகள். 'ஒண்ணுக்குள்ளே ஒண்ணு' என்று உறவாகிப் போனவை. முதலில் இவற்றைக் கவனியுங்கள்.

சரி, செரியாமை ஏன் வருகிறது?

உணவை நன்கு மென்று, கவனித்து, சாப்பிடாததாலும், போதிய நீர் அருந்தாததாலும், அல்லது உணவுடன் அடிக்கடி நீர் அருந்துவதாலும், அஜீரணம் ஏற்படும். சிலர் சாப்பிட்டவுடன் 'உண்ட களைப்பு, தொண்டனுக்கும் உண்டு' என்று சொல்லி

விட்டு, படுத்து தூங்குவார்கள்.

'அப்படியே சாப்பிட்டு.... அப்படியே ஜாலியா டி.வி. பார்த்து' என்றும் சிலருக்குப் பொழுது போகும். உடற்பயிற்சியே இருக்காது. குனிந்து நிமிர்ந்து ஏதாவது வேலை? ஊஹூம்! இவர்களுக்கும் கண்டிப்பாக அஜீரணம் ஏற்படும்.

காலை எழுந்திருப்பது முதல், இரவு தூங்கப் போகும் வரை, பலரும் அடிக்கடி சொல்லும் வார்த்தை, "டென்ஷனாயிடுச்சு!" அதிக பயம், கோபம், பேராசை, ஏமாற்றம் போன்றவற்றால் பீடிக்கப்படும் போது, 'ஜடாக்கரணி' மந்தப்படும். உணவு ஜீரணமாகாது. புளித்த ஏப்பம் வரும். வாய் நாறும். தலைவலி உண்டாகும்.

எனவே, உணவு உண்ணும் வழக்கத்தை சீர்திருத்தி, தினமும் தவறாது தனுராசனம், ஹலாசனம் போன்ற ஆசனங்களைப் பழகி வந்தாலே, அஜீரணத்தால் ஏற்படும் குடல் பலவீனம் நீங்கி, நோயற்ற வாழ்வு வாழலாம். கவனக் குறைவாக விட்டால், வேதாளம் முருங்கை மரம் ஏறும். அல்சர், அதிக அமிலச் சுரப்பு, குடல்புற்று நோய், அமீபியாஸிஸ் எனப்படும் வயிற்றுக் கிருமி நோய் போன்றவற்றில் தொடங்கி, குடல்புற்று நோய் வரை, ஏற்பட்டு வாழ்நாள் முழுவதும் மருந்து மாத்திரைகளை இணை பிரியாதிருக்கும் வரம் கிடைக்கும்.

அதிக தாகம், கிறுகிறுப்பு, கண் இருண்டு வருதல், புளித்த ஏப்பம், நெஞ்சுக்கரிப்பு போன்ற அறிகுறிகள் ஏற்பட்டால், அது பித்த தோஷத்தால் ஏற்பட்ட அஜீரணம். இதற்கு தனுராசனம் பலன் தரும்.

மலச்சிக்கல், சிறுநீர் கழிப்பது தடைபடல், வயிற்று உப்புசம், வயிற்றுவலி, பசியின்மை ஆகிய அறிகுறிகள் வாத தோஷத்தால் ஏற்படும். இதற்கு ஒரே சிகிச்சை வாயை, வயிற்றைக் கட்டுவதுதான்! ஒருநாள் முழுவதும் சுடுநீர் மட்டும் அருந்தி பட்டினிகிடந்தால், உடல் சுகமாகும்.

> **இந்த வார யோகா மொழி**
>
> **மலச்சிக்கலும், செரியாமையும் ஆதிநோய்கள்; மற்றவையெல்லாம் மீதி நோய்கள்.**

**சகலரோக நிவாரணி: தனுராசனம்**

1) மக்கராசனத்திலிருந்து கால்களை ஒன்று சேர்த்து மடிக்கவும்.

2) கால் பாதங்களை முதுகை நோக்கிக் கொண்டு வந்து, கைகளைப் பின்னால் கொண்டு வரவும். கைகளால் காலின் கணுக்கால் பகுதியை இறுக்கமாகப் பற்றிப் பிடிக்கவும்.

3) தலை, மார்பு, கால்கள் ஒரு சேர, உயர்த்தித் தூக்கவும். கால் முட்டிகள் பூமியிலிருந்து உயர்ந்தும், தலையை மேல்நோக்கித் திருப்பியும் மேலே பார்க்கவும். அடி வயிறு மட்டும் விரிப்பின் மீது இருக்கட்டும்.

4) சாதாரண மூச்சில் 15 எண்ணிக்கை இருக்கவும்.

5) கைகளைப் பிரித்து, கால்களை நீட்டவும். முகவாய்க் கட்டையை விரிப்பின் மீது வைத்து, சிறிது நேரம் ஓய்வு எடுக்கவும்.

**குறிப்புகள்:**

1) கல்லீரல் வீக்கம், வயிற்றுப்புண் உள்ளவர்கள், கருவுற்ற பெண்கள், இவ்வாசனத்தைச் செய்ய கூடாது.

2) கால் முட்டிகளைத் தரையிலிருந்து உயர்த்த முடியாதவர்கள், தலையணையை வைத்து அதன் மீது கால் முட்டிகளை வைத்துப் பழகவும்.

**தனுராசனம் செய்வதால் ஏற்படும் பலன்கள்**

குடல் வால்வு நோய் குணமாகும்.
வயிற்று உள் உறுப்புகள் பலம்பெறும்
செரியாமை, மலச்சிக்கல் குணமாகும்
உடல் எடை குறையும். தொப்பை கரையும்
முதுகுத் தண்டு பலப்படும்
நீரிழிவு நோயைக் கட்டுப்படுத்தும்
நல்ல தூக்கம் தரும்.
மாதவிடாய்க் கோளாறுகளைச் சரி செய்யும்

தனுராசனத்தை ஒரு மாதம் பழகிய பின் கால்களை ஒன்று சேர்த்து, முன்னும் பின்னுமாகவும், வலது, இடதுமாகவும் உடலை அசைத்து, வளைத்து முன்னுக்கு வரலாம். இந்த முயற்சிக்கு 'தனுராசன கிரியை' என்பார்கள்.

ஆடு குதிரை மரபொம்மையை உங்கள் குழந்தைகளுக்கு விளையாட வாங்கிக் கொடுக்காதீர்கள். இவ்வாசனத்தில் ஆடு குதிரை போன்று ஆடப் பழக்குங்கள். குழந்தைகள் ஆரோக்கியமாகவும், புத்திசாலிகளாகவும் வளருவார்கள். அப்ப... அடுத்த வாரம்.

படம் : ஸ்ரீஹரி

> **எச்சரிக்கை : இங்கே தரப்பட்டுள்ள யோகாசன பயிற்சி முறைகள் தகவலுக்காக மட்டுமே. இவை வழிகாட்டி முறைகள் அல்ல. யோகாசன நிபுணரின் நேரடி கண்காணிப்பில்தான் பயிற்சி தொடங்க வேண்டும்.**

மதியம் சாப்பிட்டு வந்ததும் இலேசாய்த் தூக்கம் கண்ணைச் சுற்றியது. ஒரு காபி குடிக்கலாமா என்று யோசித்துக் கொண்டிருந்தபோது ஃபோன் வந்தது. ப்ரியா!

"இன்னிக்கு உன்னைப் பார்க்கணும், ஒரு முக்கியமான விஷயம்" என்றாள்.

'அமெரிக்காவிலிருந்து படியளக்கும் தெய்வங்களுடன் மாலை தொலை கான்ஃபரன்ஸ் இருக்கலாம்' என்று சற்றுமுன்தான் மேனேஜர் சொல்லிப் போயிருந்தார். "ஈவினிங் ஒரு மீட்டிங் இருக்கு ப்ரியா" என்றான்.

"நீ வரலைன்னா நான் தற்கொலை பண்ணிட்டுச் செத்துப் போயிடுவேன்" என்றாள் பட்டென்று.

"ஏய், என்ன பேசறே?" என்றான் குரல் உயர்த்தி.

"தமிழ்லதானே சொன்னேன். நீ வரணும் - கண்டிப்பா வருவே, வழக்கமான இடம், ஆறு மணி" என்று உடனே ஃபோனை வைத்து விட்டாள்.

படாரென்று யாரோ கதவை முகத்தில் அறைந்து சாத்தியதுபோன்ற உணர்வுடன் சில நிமிடங்கள் அப்படியே உட்கார்ந்திருந்தான். இப்படி நடப்பது இது எத்தனையாவது முறை?

அவனுக்குச் சலிப்பாய் இருந்தது. காபி மெஷின் வரை போய் வெறும் வெந்நீர் பிடித்துக் குடித்துவிட்டு வந்தான். ஆஃபீஸில் எல்லோரும் அவரவர் இயக்கத்தில் இருக்க, அவனுக்கு மட்டும் உலகமே நின்று போய் விட்டது போல் இருந்தது. இனிமேல் மாலை அவளைப் போய்ப்பார்த்து என்ன விஷயம் என்று தெரிந்து கொள்கிறவரை இந்த கனம் மனத்தை அழுத்திக் கொண்டிருக்கும்.

பெரிதாய் ஒன்றும் இருக்காது. ஏற்கெனவே பல தடவை நடந்த கதைதான். முக்கியமான விஷயம் என்று வரச் சொல்வாள். போய் நின்றதும், 'ஒன்னுமில்லைடா, உன்னைப் பார்க்கணும்போல இருந்தது' என்று கொஞ்சுவாள். ஆரம்பத்தில் பெரிய மயக்கமாக, எனக்காக உருகுகிற ஒருத்தி இருக்கிறாளே என்கிற பிரமிப்பாக இருந்த அவள் செய்கைகள் போகப் போக மெல்ல கசப்பூட்ட ஆரம்பித்துவிட்டது - எவ்வளவு நாள்தான் விளையாட்டாய் இருக்க முடியும்?

ஃபோனை வைத்துவிட்ட பிறகும் சில நிமிடங்களுக்கு ஏதோ குற்றம் செய்து விட்டது போன்ற உறுத்தல் உள்ளுக்குள் இருக்கும். அவளைச் சந்திக்கப் போகிற சமயத்தில் யாராவது விசாரித்தால் சொல்வதெல்லாம் பொய். இலக்கியக் கூட்டம், சென்ட்ரலில் சிநேகிதனை ரிஸீவ் பண்ண, புதுப்படம் டிக்கெட் புக் பண்ண, அக்கா மகள் காது குத்தல் - இப்படி சரளமாய் வழிந்தோடுகிற பொய்கள் ஒவ்வொன்றும் அடுத்த கணத்திலிருந்து அவனையே கட்டெரிக்க ஆரம்பித்துவிடும். செய்வது சரிதானா என்று யோசிக்காமல் ஒரு காரியத்தில் இறங்கிவிட்டவனுடைய தடுமாற்றங்கள் போல அவனுக்குள் குழப்பமான உணர்வுகள்.

அதன்பிறகு வேலை விருப்பமில்லாத வேகத்தில் நகர்ந்து, கடிகார முள்ளையே பார்த்துக் கொண்டிருந்தது. இங்கிலாந்தில் யாருக்கோ உடம்பு சரியில்லாததால் வீடியோ கூட்டம் தள்ளிப் போடப்பட்டிருப்பதாய் வந்து சொல்லிப் போனார்கள். நிம்மதிப் பெருமூச்சோடு, முகம் தெரியாத அந்த வெள்ளையனின் நீண்ட ஆயுளுக்காக ஒரு நிமிடம் பிரார்த்தித்துக் கொண்டு ஐந்தரை மணி ஆனதும் ஆஃபீஸை விட்டு வெளியேறி ரயில் பிடித்தான்.

கிண்டியில் இறங்கியபோது அவன் பெரிதும் களைத்திருந்தான். ப்ரியா எங்கே இருக்கிறாள் என்று தெரியவில்லை. சிமென்ட் சேரில் அமர்ந்து நிறைய மூச்சு வாங்கினான். ஜில்லென்று ஏதாவது குடிக்க வேண்டும் போல் இருந்தது. எழுந்திருக்க நினைத்தபோது ப்ரியா வந்துவிட்டாள். அவன் பக்கத்தில் வந்து உட்கார்ந்து "ஏன லேட்?" என்றபடி தோள் பையிலிருந்து தண்ணீர் பாட்டில் எடுத்துக் கொடுத்தாள். அவன் பதில் சொல்லாமல் வேகமாய் பாதி பாட்டிலைக் காலிச் செய்தான்.

அதன் பிறகுதான் கொஞ்சம் ஆசுவாசமாகி அவளைச் சரியாகப் பார்க்க முடிந்தது. சந்தன நிற சுரிதார், முகத்தில் அங்கங்கே

# காதல்

லாவண்யா



# நெசவு

வியர்வைத் துளிகளோடு, வேலை முடிந்து வீட்டுக்குப் போகிற பெண்ணின் களைப்பு தங்கியிருந்தது.

"என்ன விஷயம், ஏன் அவசரமா வரச் சொன்னே?" என்றான் சத்தமெழாமல்.

"சொல்றேன், கிளம்பு" என்று அவன் கையைப் பிடித்து எழுந்திருக்க வைத்தாள்.

அடுத்த தெருவில் மாடியில் ஓர் அரசாங்க லைப்ரரி இருந்தது. மாடிப்படியேறி அறிவு வளர்த்துக் கொள்கிற உத்தேசம் வெகு சிலருக்கே இருந்ததால் அந்த நூலகம் அநேகமாய் எப்போதும் காலியாகவே இருக்கும்.

ஒருமுறை நூலகத்தைச் சுற்றிப் பார்த்து விட்டு அவனிடம் "சொல்லு, என்ன விஷயம்?" என்றான்.

அவள் சற்று தயங்கிவிட்டு, "நாளைக்கு மதுரையிலிருந்து என்னைப் பெண் பார்க்க வராங்க" என்றாள். அதுவரை இயல்பாய் இருந்த அவன் முகத்தில் ஓர் இறுக்கம்.

அவன் இதைக் கொஞ்சமும் எதிர்பார்த்திருக்கவில்லை. என்ன பதில் சொல்வதென்று தெரியாமல் திகைத்துப் போய் நின்றான். அவள் தொடர்ந்து, "பையன் மதுரையிலே மளிகைக்கடை வெச்சிருக்கானாம். நல்ல சம்பாத்தியம், வீட்டுக்கு ஒரே

பையன், ரொம்ப நல்ல இடங்கறதால எவ்வளவு செலவானாலும் இதை முடிச்சிடணும்னு இருக்காங்க" என்றாள்.

''நீ என்ன சொன்னே?'' என்றான் தயங்கி.

அவளுக்கு இலேசாய் கோபம் வந்தது. ''உன்னைக் கேட்காம நான் என்ன சொல்றது?" என்றாள். பிறகு "இப்போதைக்கு எல்லாத்துக்கும் மேலோட்டமா தலையாட்டி வெச்சிருக்கேன்" என்றாள்.

அவன் மறுபடி மௌனமாகிவிட்டான். "எந்த பிரச்சனை வந்தாலும் அவசரப்பட்டு வீட்டிலே நம்ம விஷயத்தைச் சொல்லக்கூடாதுன்னு நீதானே சத்தியம் வாங்கினே?'' என்றாள்.

''அதுக்கெல்லாம் காரணம் இருக்கு ப்ரியா" என்றான் பலவீனமான குரலில்.

"ஆனா, இப்போ எல்லாம் தலைக்கு மேலே போயாச்சு, இனிமே சொல்லியாகணும். வேறே வழியே இல்லை" என்ற அவள் குரலில் பிடிவாதம் கூடியிருந்தது.

அவன் ஆழ்ந்த பெருமூச்சோடு, "இப்போ என்ன பண்ணணுங்கறே?" என்றான்.

"இன்னிக்கு ராத்திரியே நான் அப்பா கிட்டே எல்லாம் சொல்லிடறேன். நாளைக்கு நீங்க வந்து அவர்கிட்டே பேசுங்க."

"என்ன பேசறது?"

"என்ன பேசறதுன்னு நான் சொல்லித் தரணுமா?'' என்றாள். இன்னும் கோபம் குறைந்திருக்கவில்லை.

"ஒத்துக்குவாங்களா?"

"எனக்குத் தெரியாது. ஒத்துக்கணும்னு தான் ஆசைப்படறேன்."

"சப்போஸ் முடியாதுன்னு சொல்லிட்டாங்கன்னா?" அவனுடைய கேள்விகள் எல்லாமே தாற்காலிகமாய் அவள் சொல்வதிலிருந்து தப்பிக்கிற முயற்சியாகவே இருந்தன.

அவள் சலித்துக் கொண்டு பேசினாள். "பாலா, இதெல்லாம் நாம ஏற்கெனவே பேசினதுதான். அவங்க சம்மதம் கிடைக்கலைன்னாலும் நம்ம கல்யாணம் நடக்கணும். அதிலே எந்த மாற்றமும் கிடையாது" என்றாள்.

அவன் கொஞ்சம் யோசித்தான், பிறகு, "ப்ரியா, நாம கல்யாணத்துக்குத் தயாராகிட்டோம்னு நினைக்கறியா?'' என்றான். பட்டென்று பதில் வந்தது. "நான் தயாராயிட்டேன்.'' அவள் அப்படி பிரித்துப் பேசியது அவனுக்குச் சங்கடமாக இருந்தது.

''அதில்லைம்மா, நான் ஏற்கெனவே உனக்குச் சொல்லியிருக்கேன் - என் வேலை இன்னும் பர்மனென்ட் ஆகலை, சம்பளமும் குறைச்சல்தான்" என்றவன் சற்று தயங்கி, ''வயசு மட்டும் கல்யாணத்துக்குத் தகுதி இல்லை ப்ரியா. இன்னும் சில தகுதிகள் இருக்கு. அதையெல்லாம் வளர்த்துக்காம கல்யாணம் பண்றது முட்டாள்தனம்'' என்றான்.

அவன் சொல்லி முடிப்பதற்குள் அவள் பேசினாள். "அதுவரைக்கும் எங்க வீட்டிலே காத்திருப்பாங்களா பாலா? நாளைக்கு வரப் போறவனுக்கு என்னைப் பிடிச்சிருந்தா, மூணு மாசத்துக்குள்ள கல்யாணம்னு அப்பா சொல்றார்." என்று சொன்னபோது அவளுடைய குரல் இலேசாய் நடுங்கியது. விட்டால் அழுதுவிடுவாள் என்று தோன்றியது.

அவனுக்குள் இருக்கிற சங்கடங்களை அவள் புரிந்து கொள்வாளா என்று அவனுக்கு ரொம்ப சந்தேகமாய் இருந்தது.

"எனக்குப் புரியுதும்மா. ஆனா நம்ம விஷயத்தைச் சொல்றதுக்கு இது சரியான டைம் இல்லை. நமக்குன்னு ஓர் அடையாளம் கிடைக்கிறவரைக்கும் இதை அவங்களுக்குத் தெரியாமலே வைச்சிருக்கறதுதான் நல்லது. வேறே எதுனா பண்ணி இந்த கல்யாணத்தைத் தள்ளிப்போட முடியாதா?" என்றான்.

தொடர்ந்து, ''எனக்கு இப்போதான் ஆபீஸ்ல ஓரளவு நல்ல பேர் கிடைச்சிருக்கு. பெரிய ப்ராஜக்ட் எல்லாம் என்னை நம்பி ஒப்படைக்கறாங்க, இந்த நிலைமையிலே

---

**''உங்களுக்கும் உங்க மனைவிக்கும் இடையில் ஒரு விஷயத்துல ரொம்ப ஒற்றுமைன்னு சொன்னீங்களே, எதுல?''**

**''வேற எதுல, கல்யாணம் ஒரே நாளில் ஆனதுன்றதுதான்.''**

- அசோக்ராஜா



இப்படி ஒரு அவசரக் கல்யாணம் தேவை தானா?" என்றான்.

"ஆஃபீஸ் வேறே விஷயம், பர்ஸனல் லைஃப் வேறே விஷயம். ரெண்டையும் சம்பந்தப்படுத்தாதே பாலா."

"எப்படி சம்பந்தப்படுத்தாம இருக்க முடியும் ப்ரியா? ஆஃபீஸ் இல்லைன்னா சம்பளம் இல்லை, சம்பளம் இல்லைன்னா பர்ஸனலாவது, லைஃபாவது."

அவன் ஜோக் அடிக்க முயன்றான்.

"நான் ஒண்ணும் புதுசா சொல்லப் போறதில்லை ப்ரியா. கல்யாணம்ங்கறது பெரிய விஷயம். அதற்கு முதல் தேவை - நமக்கே நமக்குன்னு ஒரு குடும்பம் வரும்போது, அதை தனியா சமாளிக்கிற பலம்."

அவன் குறுக்கிட்டு, "பலம்னு நீ எதைச் சொல்றே? பணத்தையா?" என்றாள்.

"பணமும்தான், ஆனா பணம் மட்டும் இல்லை. சொஸைட்டில நமக்கு ஓரளவு நல்ல பேர், மரியாதை இருக்கணும், 'எலிஜிபிள் பேச்சிலர்'னு இங்க்லீஷ்ல ஒரு நல்ல வார்த்தை இருக்கு - அந்தத் தகுதி ரொம்ப அவசியம். ஒரு விதை, பெரிய மரமா வளரணும்னு ஆசைப்பட்டா, அதை சரியா விதைச்சா மட்டும் போதாது. அதுக்குத் தேவையான மண் சத்து, தண்ணீர், வெளிச்சம் இதெல்லாம் ஒழுங்கா கிடைக்கணும், இதையெல்லாம்விட முக்கியம், அது வளர்ந்து வெளியே வரும் வரைக்கும் பொறுமை இருக்கணும். மூணு நாளைக்கு ஒரு தடவை மண்ணைத் தோண்டி மரம் வளர்ந்துடுச்சான்னு பார்த்திட்டிருந்தா, எதுவும் நடக்காது" என்றான்.

அவளுக்கு இன்னும் சமாதானமாக வில்லை, "அப்படிப் பார்த்தா எல்லோரும் அறுபது வயசிலதான் கல்யாணம் பண்ணிக்க முடியும்." என்றாள் எங்கேயோ பார்த்துக் கொண்டு, "ஓ.கே. ஓ.கே. உன் கோபம் எனக்குப் புரியுது. நான் சொல்றது நீ புரிஞ்சுக்கலையேங்கிற வருத்தம்தான் எனக்கு." என்றவன் சற்றுப் பொறுத்து, "நம்ம வாழ்க்கையை ஒரு குடிசையிலே ஆரம்பிக்க வேண்டாம்னு பார்த்தேன், நீ பிடிவாதமா இருக்கே." என்றான் நிஜமான வருத்தத் துடன்.

"ஒண்ணும் பிடிவாதம் இல்லை." என்றாள் உடனடியாக. அவன் ஆவலாய் அவள் முகத்தையே பார்த்துக் கொண் டிருந்தான்.

"சரி வா, போகலாம்" என்று அவள்



"கொலுவுல அரசியல்வாதி பொம்மையை மட்டும் காணோமே, ஏன்?"
"ஊழல் வழக்குல உள்ளே போயிடுச்சு!"
- அம்பை தேவா

எழுந்து கொண்டாள்.

ஸ்டேஷனில் டிக்கெட் வாங்கிக் கொண்டு அங்கேயே கொஞ்ச நேரம் நின்றார்கள். கிட்டத்தட்ட கால்மணி நேர மௌனத்தை அவள் கலைத்து, "அப்பா கிட்டே நான் என்ன சொல்றது?" என்றாள்.

அவன் பதில் சொல்ல பயந்தவன்போல நின்று கொண்டிருந்தான். அவன் முகபாவத் தைப் பார்த்து அவள் சிரித்தாள். "ஏய், மறுபடி சண்டைபோட ஆரம்பிச்சுடு வேன்னு பயந்துட்டியா? நாளைக்கு வரப் போற மாப்பிள்ளையைத் தட்டிக் கழிக்கற துக்குதான் காரணம் கேட்கிறேன். நம்ம விஷயத்தைத்தான் இப்போ பேச வேண் டாம்னு முடிவு பண்ணிட்டோமே" என்று அவன் இடுப்பில் கிள்ளினாள்.

முடிவு செய்துவிட்டோமா? அவனுக்கு சந்தேகமாகவே இருந்தது. ஆனாலும் அவன் சொன்னதை அவள் புரிந்து கொண்டது பெரிய நிம்மதியாய் இருந்தது.

"டைம் ஆகுது, சீக்கிரம் ஏதாவது நல்ல காரணமா சொல்லுப்பா எனக்கு" என்றாள் மறுபடி.

அவன் சற்றே யோசித்து, "மேலே படிக் கப் போறேன்னு சொல்லேன்" என்றான்.

அவள் இந்த பதிலை எதிர்பார்த்திருந்தது போல புன்னகை செய்தாள், "நீ சொல்ற பிரச்னை எனக்குப் புரியாததுபோலவே, என் ப்ராப்ளத்தோட சீரியஸ்னெஸ் உனக்குப் புரியலை பாலா. கல்யாண ஏற்பாடுங்கறது உலக யுத்தம் மாதிரி. ஒரு பொண்ணுக்கு அதை ஜெயிக்கறது ரொம்ப கஷ்டம்

'படிக்கப் போறேன்' 'இப்போதைக்கு கல்யாணம் வேண்டாம்' - இதெல்லாம் பழைய ஆயுதமாயிடுச்சு, இதை வெச்சு சண்டை போடவே முடியாது'' என்று சிரித்தான்.

"கவலைப்படாதே, நான் அனுகுண்டு ரேஞ்சுக்கு ஒரு காரணம் யோசிக்கறேன்'' என்று சிரித்தாள். அவளை ஆச்சரியமாய்ப் பார்த்தான் அவன். இந்தப் பெண்ணைப் புரிந்து கொள்வது சாத்தியமே இல்லையோ?

இருவரும் ஒரே ரயிலில் ஏறிக் கொண்டார்கள். கொஞ்ச தூரம் போனதும் அவள் அவனுடைய தோளில் சாய்ந்து கொண்டாள். எதிர் பெஞ்சில் உட்கார்ந்திருந்தவர் சந்தேகப் பார்வையால் துளைத்தார்.

கூட்டமில்லாத ரயிலிலும் வியாபாரத்தை விடாமல் "முல்லை முல்லை, பால் முல்லை" என்று விற்றுக் கொண்டு வந்த சின்னப் பெண்ணைப் பார்த்ததும் அவள் "ஒரு லிட்டர் முல்லை கொடு" என்றாள்.

அந்தப் பெண் பேந்தப் பேந்த விழித்ததைப் பார்த்து அவன் பெரிதாய்ச் சிரித்தான். "நீதானேம்மா சொன்னே - பால் முல்லைன்னு" என்று குறும்பாய்ப் புன்னகைத்தான் ப்ரியா. சிறுமி அப்போதுதான் புரிந்து கொண்டு அவள் விற்கிற பூக்கள் போலவே சிரித்தாள். திடீர்ப் பழக்கத்தில் ஒரு முழத்துக்கு மேலேயே கொஞ்சம் கிள்ளிக் கொடுத்தாள்.

---

**''இந்தப் பக்கத்துல கள்ளச் சாராயம் கிடைக்குமா பிரதர்...''**

**''ஊருக்குப் புச்சா? போலீஸ் ஸ்டேஷனுக்குப் பின்னாடி போய்ப் பாரு!''**

**- உ. ராஜாஜி**



அவன் காசு எடுத்துக் கொடுத்தான்.

"நீயே வெச்சுவிடு" என்றாள் அவள். கூந்தலில் பூவைக்கிற வித்தை அவனுக்குச் சரியாக வருவதே இல்லை - ஆனாலும் அவளுக்கு எப்போதும் பிடிவாதம். வழக்கம்போல அரைகுறையாய் வைத்து விட்டு அது விழுந்துவிடக்கூடாதே என்று பிரார்த்தித்துக் கொண்டான். அவள் திரும்பி அவன்மேல் சாய்ந்து கொண்டு, "ராத்திரி எட்டரை மணிக்கு யாராவது பூ வைச்சுப்பாங்களா?'' என்று சிரித்தாள். அவனுக்கும் அது வேடிக்கையாகவே இருந்தது. "அது சரி, நாளையிலிருந்து தினமும் காலையிலே உங்க வீட்டுக்கே வந்து பூ வெச்சு விடட்டுமா?" என்று கண்ணடித்தான். அவள் பதில் சொல்வதற்குள் மாம்பலம் வந்துவிட்டது.

அவள் இறங்கும்போது அவனும் இறங்கிக் கொண்டான், "நான் போய்க்கறேன் பாலா'' என்றாள். "பரவாயில்லை, கொஞ்ச தூரம் கூட வரேனே'' என்றான் அவன். "இதே டிக்கெட்ல அடுத்த ட்ரெயின்ல போய்க்கலாம்." என்றதற்கு அவள் பெரிதாய் சிரித்தாள்.

"சிக்கனமாக்கும்."

அவன் சீரியஸாய், ''ஆமாம், வீட்ல ஒருத்தராவது சிக்கனமா இருக்க வேண்டாமா?'' என்றதற்கு 'ஏய்' என்று வயிற்றில் குத்தினாள்.

அதன்பிறகு கொஞ்ச தூரத்துக்கு ஒன்றும் பேசாமல் நடந்தார்கள். கடைத் தெருக்கள் கடந்து குடியிருப்புப் பகுதிகள் வந்ததும் அவள், அவனுடைய கையைப் பிடித்துக் கொண்டாள். அந்தப் பயணம் நிற்காமல் தொடர்ந்து கொண்டே இருக்கக்கூடாதா என்றிருந்தது.

அவள் வீட்டுக்கு முந்தைய தெருவில் அவன் நின்று கொண்டான். ''நான் கிளம்பறேன்." அவள் முகத்தில் சின்னதாய் ஓர் ஏமாற்றம் தெரிந்தது. அதை மறைக்க முயன்று தோற்றாள். ''சரி'' என்றாள் வெறுமையாய்.

அவனும் பேசாமல் நின்றான். ஒவ்வொரு சந்திப்பும் இப்படித்தான் இலேசான சோகத்தோடு முடிகிறது.

''நாளைக்கு ஃபோன் பண்றேன்'' என்றான் அவன்.

"ம், சரி" அவள் தலையசைத்தாள்.

"குட் நைட்."

"குட் நைட்."

அவள் திரும்பி நடந்தாள். அவனும்! ●

காசியை நாடு! ஓம் நமசிவாய சிவனருளைத் தேடு!

# பசிப்பிணி போக்கும் அன்னபூரணி க்ஷேத்ரமான காசியில்
# தீபாவளித் திருநாளில்
# அன்னதானம் செய்வோம் வாருங்கள்!



**ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகளின் அருளாசியுடன் புனித க்ஷேத்ரமான காசியில் தீபாவளித்திருநாளில் அன்னதானம் செய்வதில் நீங்களும் பங்கேற்கலாம்...**



## ஸ்ரீ அன்னபூரணி அன்னதான ஸேவா டிரஸ்டின் மூன்றாம் ஆண்டில் தொடர்ந்து அன்னதான சேவை!

பேரன்புடையீர்! வணக்கம். தங்களின் வேண்டுதல்கள் நிறைவேறவும், மங்கலம் உண்டாகவும் தீபாவளித் திருநாளில் அருள்மிகு ஸ்ரீ அன்னபூரணி அன்னை அருள்புரியட்டும்.

கயிலாயத்தில் எம்பெருமானின் ஜடாமுடியிலிருந்து பெருகும் கங்கை குளிர்காரணமாகப் பனியில் வாடுகிறாள். சிவபெருமானின் ஆணைப்படி காசி சென்று ஸ்ரீ அன்னபூரணியை உத்தரவாஹினியாகப் பாய்ந்து வணங்கி, அம்பிகையின் அபீத அக்னியால் நிவாரணம் பெறுகிறாள். சிவபெருமான் உலகஜீவராசிகளின் நலம் கருதி அப்போது ஸ்ரீ அன்னபூரணியிடம் அன்னம் யாசித்துப் பெறுகிறார். இதன்மூலம் பிரபஞ்சம் முழுமைக்கும் உணவு படைக்கும் தாயாக ஸ்ரீ அன்னபூரணி காசியில் கோலோச்சிக்கொண்டிருக்கிறாள். ஒவ்வொரு தீபாவளி அமாவாசையன்றும் அன்னாபிஷேகம், லட்டு தேர், அன்னக்கூடு போன்றவை காசியில் மிக விசேஷமாக நடத்தப்படுகிறது. ஸ்ரீ அன்னபூரணி அருளால் வாழ்நாள் முழுவதும் உணவுத்தட்டுப்பாடின்றி ஆரோக்கியமாக வாழ அனைவரையும் தீபாவளித்திருநாளில் அன்னதானம் செய்ய அன்புடன் அழைக்கின்றோம்.

* தாங்கள் அளிக்கும் நன்கொடை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்ளப்படும்.
* ரூ.500/- அனுப்பும் ஆன்மிக அன்பர்களுக்கு, 'ஆன்மீகம்' மாத இதழ் ஒரு ஆண்டிற்கு அனுப்பி வைக்கப்படும்.
* ரூ.1000/- அனுப்பும் ஆன்மிக அன்பர்களுக்கு, 'ஆன்மீகம்' மாத இதழ் இரண்டு ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.
* ரூ.5000/- அனுப்பும் ஆன்மிக அன்பர்களுக்கு, 'ஆன்மீகம்' மாத இதழ் பத்து ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.

அன்னதானத்திற்கு நன்கொடையை அனுப்புவோர், திருமண நாள், பிறந்தநாள் மற்றும் திதி நாள் மேலும் தாங்கள் எதை நினைத்து அன்னதானம் செய்ய விரும்புகிறீர்கள் என்பதைத் தெரிவித்தால் அதன்படி தாங்கள் விரும்பும் மாதத்தில் அமாவாசை அன்று காசியில் அன்னதானம் செய்கிறோம். அன்னதானத்திற்கு நன்கொடையாக ரூ.500, ரூ.1000, ரூ.5000 அனுப்பும் ஆன்மீக அன்பர்களுக்கு கங்கா தீர்த்தத்துடன் கூடிய காசி சொம்பும் காசியில் பூஜிக்கப்பட்ட ஸ்ரீ அன்னபூரணி அன்னையின் விக்கிரகமும் ஸ்ரீ அன்னபூரணி அன்னையின் வண்ணப்படமும், சிறிய அளவில் சிவபுராண புத்தகமும் அனுப்பி வைக்கப்படும்.

* ரூ.5000/- அனுப்பும் ஆன்மீக அன்பர்கள் சார்பாக, ஒவ்வொரு மாதமும் அமாவாசை அன்று காசியில் அன்னதானம் செய்து தொடர்ந்து பத்து வருடங்கள் பிரசாதமும், "ஆன்மீகம்" மாத இதழும் தங்களுக்கு அனுப்பி வைக்கப்படும். மேலும் தாங்கள் விரும்பும்போது சந்நிதியினின் முகவரிக்கும் மாற்றம் செய்து தருகிறோம். ஆன்மீக அன்பர்கள் ஒவ்வொருவரின் பூஜை அறையும் புனிதம் பெறவேண்டும் என்ற எண்ணத்துடன் ரூ.5000 செலுத்துபவர்களுக்கு 1024 பக்கங்களுடன் கூடிய பெரிய அளவில் உள்ள ஸ்ரீமத் பகவத் கீதை புத்தகத்தை (தமிழில்) அனுப்பி வைக்கிறோம்.

**காசி, கயா, பிரயாகை (திரிவேணி சங்கமம்) ஆகிய இம்மூன்று பித்ரு க்ஷேத்ரங்களிலும் புண்ணிய காரியங்கள், பித்ரு காரியங்கள், பிண்டம் போடுதல், தர்மங்கள், ச்ராத்தம், திவசம், தர்ப்பணம் போன்றவற்றை அவரவர் விருப்பப்படி அன்னதானக் கைங்கர்ய அன்பர்களுக்கு செய்து தரப்படும்.**

குடும்பத்தில் தாய் தந்தையர்கள், மூதாதையர்களுக்கு பிண்டப்பிரதானம் மற்றும் தர்ப்பணம் காசியிலும், கயாவிலும், பிரயாகையிலும் நேரில் சென்று செய்ய முடியாதவர்களுக்காக, சாஸ்திரிகளைக் கொண்டு "ஸ்ரீ அன்னபூரணி அன்னதான ஸேவா டிரஸ்ட்" மூலம் செய்யப்படுகிறது.

பித்ருக்களுக்கு பிண்டப்பிரதானம் செய்ய காசி, கயா, பிரயாகை ஆகிய மூன்று பித்ரு க்ஷேத்ரங்களுக்கும் தனித்தனியாக ரூபாய் 1000/- அனுப்பும்போது யாருக்கு ச்ராத்தம் செய்ய விரும்புகிறீர்களோ அவரின் பெயர், திதி மற்றும் கோத்ரம் போன்ற விபரங்களையும் அவசியம் தெரிவிக்கு மாறு கேட்டுக் கொள்கிறோம். பிண்ட பிரதானத்திற்காக ரூ.5000/= அனுப்பும் ஆன்மீக அன்பர்கள் சார்பாக தொடர்ந்து வருடத்திற்கு ஒரு முறை பத்து ஆண்டுகளுக்கு மூன்று பித்ரு க்ஷேத்ரங்களிலும் எந்த இடத்தில் யாருக்கு ச்ராத்தம் செய்ய விரும்புகிறீர்களோ அவர்களுக்கு ச்ராத்தம் செய்யப்படும். பித்ரு காரியங்களுக்குப் பணம் அனுப்பும் ஆன்மீக அன்பர்களுக்கு காசி, கயா, பிரயாகை ஆகிய மூன்று இடங்களிலும் உள்ள தெய்வீக ஆலமரமான 'அக்ஷய வடத்தின்' படமும், கயாவில் உள்ள விஷ்ணு பாதத்தின் படமும் அனுப்பி வைக்கப்படும். நம் வீட்டில் செய்யும் ச்ராத்தத்திற்கு தாய், தந்தையர், உறவினர்கள் மட்டுமே பங்குகொள்ள வாய்ப்புண்டு. மூன்று பித்ரு க்ஷேத்ரங்களில் ஏதாவது ஒரு அக்ஷய வடத்தில்(ஆலமரம்) பிண்டப்பிரதானம் செய்தால் ஏழு தலைமுறைக்கு பித்ருக்கள் கூட்டமே முக்தி அடைவதுடன் பித்ரு தோஷங்களும் நிவர்த்தியாகும்.

**அன்னதான சேவையில் ஈடுபட விரும்பும் ஆன்மீக அன்பர்கள் தங்கள் நன்கொடையை Cheque/D.D/M.O மூலம் (Sri Annapoorani Annadhana Seva Trust, Chennai - 4) என்ற பெயருக்கு எடுத்து கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பி வைக்கவும். கலியுகத்தில் அன்னதான சமுதாயப்பணி மகத்தான தெய்வீகப்பணியாக காசி திருத்தலத்தில் தழைத்திட உதவுமாறு அன்புகூர்ந்து வேண்டுகிறோம்.**

*Cheque/D.D./M.O* அனுப்ப வேண்டிய முகவரி:


# ஸ்ரீ அன்னபூரணி அன்னதான ஸேவா டிரஸ்ட்

**SRI ANNAPOORANI ANNADHANA SEVA TRUST (Regd.)**

68, Nadu Street, (Opp: Sri Kapaleeswarar Temple), Mylapore, Chennai - 600 004.

Tel: 4959302 Fax: (044) 4616311 E-mail:siva siva@vsnl.net


தீபாவளித்திருநாளில் (அமாவாசையில்) அடியார்களுக்கு அமுதளிப்பது சிவனுக்குச் செய்யும் ஜீவசேவையாகும்!

**பிற பத்திரிகைகளில் வெளியிடப்பட்ட**
**சில வாசகர் கடிதங்கள் - சற்றே சுருக்கமாக.**

# அரசியல்வாதிகளின் டபுள் ஆக்‌ஷன்!



முகமது அலி ஜின்னா குறித்த கட்டுரையைப் படித்தேன். மாலை வேளைகளில் அவர் மது அருந்தியிருக்கலாம். ஆனால் வெள்ளிக்கிழமை பிரார்த்தனையைச் செய்ய அவர் தவறியதில்லை. ஷியா பிரிவைச் சேர்ந்த குடும்பத்தில் வந்தவர். என்றாலும் ''நீங்கள் ஷியாவா சன்னியா?'' என்று யாராவது கேட்டால் "நான் ஒரு முஸ்லீம்'' என்று பதிலளிப்பார். சன்னி பிரிவு வழக்கப்படிதான் அவர் புதைக்கப்பட்டார். தமது ஊழியர்களிடம் அவர் தடைபட்ட உருது மொழியில்தான் பேசுவார். காரணம் குஜராத்தி பேசிவந்த குடும்பத்திலிருந்து வந்தவர் அவர்.

**- ஃப்ரண்ட்லைன் இதழில் -**
**ஜரியானி அப்துல் ரஹ்மான்,**
**மலேசியா.**

ஜோதிடத்தை பல்கலைக் கழகத்தில் பாடமாக வைப்பது குறித்த விவாதத்தைப் படித்ததும் எனக்கு ஒரு சம்பவம் நினைவுக்கு வந்தது. ஒரு பிரபல விஞ்ஞானியின் வீட்டுக் கதவில் குதிரை லாடம் ஒன்று தொங்கிக் கொண்டிருப்பதைப் பார்த்து அங்கு வந்திருந்த விருந்தினருக்கு வியப்பு ஏற்பட்டது. ''அறிவியலுக்காகவே அர்ப்பணித்துக் கொண்ட அறிவாளியான நீங்கள் இந்த அசட்டுத்தனத்தை நம்புகிறீர்களா?'' என்று கேட்டார் அவர். அதற்கு அந்த விஞ்ஞானி ''ஒரு போதும் கிடையாது. ஆனால் ஒருவர் நம்பிக்கை வைத்திருந்தாலும் இல்லாவிட்டாலும் குதிரை லாடம் அவருக்கு அதிர்ஷ்டத்தைக் கொண்டு வரும் என்று கூறக் கேட்டிருக்கிறேன்'' என்றாராம். அதுபோல்தான் இருக்கிறது ஜோதிடத்தைப் பாடமாக வைக்கக் கூடாது என்று கூறிக்கொண்டே, தமது அரசியல் வருங்காலத்தைக் கணிக்க ஜோதிடர்களிடம் படையெடுக்கும் அரசியல்வாதிகளின் இரட்டை வேடம்.

**- இந்தியா டுடே**
**(ஆங்கிலம்) - வி.ஏ.**
**கோபாலா, பெங்களூர்.**

''ஜெய்ப்பூர் வங்கிகளில் பணப்புழக்கம் மிக அதிகமாகியிருக்கிறது. அதேசமயம் ராஜஸ்தானில் தங்கத்தின் விலை சரிந்துள்ளது. அதாவது கறுப்புப் பணத்தினால் தங்கம் நிறைய வாங்கப்பட்டிருக்க, இதனால் அரசுக்கு வருமான வரி நஷ்டம். கறுப்புப் பணத்தைத் தடுக்க



**மாற்றான் தோட்டம்...**

இதோ சில யோசனைகள். இருபதாயிரம் ரூபாய்க்கு அதிகமாக எதையாவது விற்றால், காசோலை மற்றும் வரைவோலை மூலமாக மட்டுமே அதற்கான தொகையைச் செலுத்த வேண்டும். அப்படி அது ரொக்க விற்பனைதான் என்றால் 30 சதவிகிதம் சர்சார்ஜ் அதன்மீது விதிக்கப்பட வேண்டும்.

ஒரே நாளில் மேற்படி தொகையைவிட அதிகமாக ஒருவர் தனது வங்கிக் கணக்கிலிருந்து எடுத்தால், அதற்கு ஸ்பெஷல் விண்ணப்பங்களைப் பயன்படுத்த வேண்டும். இவற்றின் பிரதிகள் அரசுக்கு அனுப்பப்பட வேண்டும். வரைவோலைகள் 45 நாட்களுக்கு மட்டுமே செல்லுபடியாகும் என்பதைச் சட்டமாக்க வேண்டும். அப்போதுதான் பினாமி பெயர்களில் கறுப்புப் பணத்தை வரைவோலையாகச் சுமந்து செல்லும் பழக்கம் குறையும். ஆயிரம் ரூபாய்க்கும் அதிகமான அரசு செலவினங்கள் காசோலை/வரைவோலை மூலமாக மட்டுமே செலுத்தப்பட வேண்டும். கடன் அட்டைகளைப் பயன்படுத்துவது ஊக்கமளிக்கப்பட வேண்டும் - அவற்றின் மீது எந்த ஸ்பெஷல் வரியையும் விதிக்கக்கூடாது.

– பிசினஸ் இந்தியா – சுபாஷ் சந்திரா அகர்வால், டெல்லி.

உலகம் முழுவதுமே தீவிரவாதத்திற்கெதிராகத் திரண்டிருக்கும் இந்த வேளையிலும், காஷ்மீர் சட்டசபையை பயங்கரவாதிகள் தாக்கியிருக்கிறார்கள். காந்தஹார் சம்பவத்தைத் தொடர்ந்து நாம் தீவிரவாதிகளை விடுவித்திராவிட்டால் மேற்படி தாக்குதல் தவிர்க்கப்பட்டிருக்கலாம். நாட்டிற்காகச் சில தியாகங்களைச் செய்துதான் ஆக வேண்டும். சிறையிலுள்ள எல்லாத் தீவிரவாதிகளையும் உடனடியாகக் கொன்றுவிட வேண்டும். இனி சிறைப்பிடிக்கப்படும் தீவிரவாதிகளும் சுடப்பட வேண்டும். 'எப்படிப்பட்ட மனிதனும் மாற வாய்ப்பு உண்டு. வருங்காலத்தில் மாறுவதற்கு அவனுக்கும் வாய்ப்பு அளிக்கப்பட வேண்டும்' என்பது போன்ற வாதங்களையெல்லாம் தீவிரவாதிகள் விஷயத்தில் முன்வைப்பதில் அர்த்தமில்லை. இதைத் தவிர வேறெந்தத் தீர்வும் இருப்பதாக நான் எண்ணவில்லை.

– இந்தியன் எக்ஸ்பிரஸ்
- எம். குமார்
(ஈ-மெயிலில்)

தொகுப்பு: ஜி.எஸ்.எஸ்.



''அந்த மாமியார் மருமக சண்டையைப் பார்க்க அத்தனை கும்பல் வருதே எப்படி?''

''லக்கி டிக்கெட் நெம்பருக்குப் பரிசு; சுவையான விமர்சனத்துக்குப் பரிசு எல்லாம் உண்டாம்!''

– லலிதா செல்லப்பா

**ச**ரவணனின் முகம் பார்த்ததும் அதிக மாகப் பதறியவள் வேணிதான். 'இந்த ஞாஸ" எப்படி இவங்ககிட்ட மாட்டுச்சு?" என்று உள்ளுக்குள் உதறியது அவளுக்கு.

ஆறுமுகம், சரவணனைப் பார்த்ததும் சட்டென பதறி விட்டான். அவனுக்கு சரவணனை மிகவும் நன்றாகத் தெரியும்.

''ஏய், ஏய், நிறுத்து'' என்று தனது சொந்தக்காரர் களை நிறுத்தியவன்,



# பூவரசம் இடு

"என்ன தம்பி நீங்களா?" நீங்க எதுக்கு களவாங்க வந்தீக... காலேசெல்லாம் படிச்சுப் போட்டு..."

சரவணன் பயத்திலிருந் தான். உருவம் பூவரசு வீட்டி லிருந்து கிளம்பி வேகமாக ஓடி வந்தது. வந்த உருவம் சரவணன் இருந்த மர இருள் பகுதிக்கு வராமல் விலகி கடந்து வெகு வேகமாகப் போய் விட்டது. அதனைப் பின் தொடரலாமா என்றெண்ணி சரவணன் தனது இருள் பிரதேசத்திலிருந்து வெளிவந்து கொஞ்ச தூரம் ஓடுவதற்குள் இந்தச் சூரர்கள் மடக்கி விட்டார்கள்.

அழகு, "சரவணா நீயா?" என்றான். "நீயா வீட்டுக்குள்ள நுழைச்ச?"

"அட போங்கய்யா" என்றான் சரவணன் எரிச்சலுடன். நல்லவேளையாக இவர்கள் 'நீயா?' என்று ஆச்சரியப்படுகிறார்களே... "ஏன்டா வீட்டுக்குள்ள புகுந்தே..." என்று மேற்கொண்டு அடிக்காமல்... அந்தளவுக்குப் பரவாயில்லை. மூச்சு வாங்கச் சொன்னான் சரவணன்... இந்த அவகாசத்துக்குள் கதையை யோசித்து விட்டான்.

"வயிறு ஒரு மாதிரியா இருந்ததுன்னு வந்தேன். திடீர்னு யாரோ ஓடினா மாதிரி இருந்தது.. என்னடான்னு யோசிக்கறதுக் குள்ள நீங்க வந்து என்னைப் புடிச்சு அடிக்

கிறீங்க..."

"அப்படியா?" என்றான் ஆறுமுகம். "அப்பன்னா நீங்க வீட்டுக்குள்ள புகுரலையா?"

சரவணன், "ஆறுமுகம்... புகுந்தவனை விட்டுட்டு என்னையப் பிடிச்சப்புட்டு... கேள்வி வேறயா... நான் எதுக்குய்யா... இந்த வீட்டுக்குள்ள நுழையணும்..?"

"அதுஞ்சரிதான்... களவாணிப் பய மாப்ளை தப்பிச்சிட்டானே" என்று வீரம் பொருந்திய அலுப்புடன் ஆறுமுகம் கோஷ்டி கிளம்பிப் போனது. போகும் முன்பு ஆறுமுகம் சரவணனிடம் சொன்னான். "தம்பி எதுக்கும் அப்பாகிட்ட இந்த விஷயத்தைச் சொல்லி, ஊருக்குள்ள விசாரிக்கச் சொல்லுங்க...நம்மூர்ல திருடனா...? அதும் இந்த ஆறுமுகம் இருக்கறப்போ..."

அவர்கள் சென்ற பின்பு அழகு, வேணி, சரவணன் மட்டும் தனித்து விடப்பட்டனர்.

"வா, சரவணா" என்றான் அழகு... மூவரும் வீட்டுக்குள் நுழைந்தனர்... எல்லா விளக்குகளையும் போட்டுவிட்டு வந்தமர்ந்தான் அழகு.

சரவணன் வேணியை ஓரப்பார்வை பார்த்தான். அவளும் பார்த்தாள்... 'இப்படி சொதப்பிட்டியே' எனும் பார்வை.

"நீ அந்த ஆளைப் பாத்தியா சரவணா?" என்றான் அழகு.

"இல்லியே அழகு... நான் இருக்கற பக்கமே அவன் வரலை. விலகி வேற பக்கமால்ல ஓடினான். நான் புடிக்கலாம்னு ரெண்டு எட்டு வச்சிருப்பேன்... படுபாவி, ஆறுமுகம் வந்து என்னையைப் புடிச்சிட்டான்."

"இந்த ஊர்ல, அதுவும் எங்க வீட்ல உள்ள புகுந்து திருடுறதுக்கு என்ன இருக்கும், புரியலையே" என்றான் அழகு.

சரவணன் தலையை அசைத்தான். "ஆமா அழகு... எங்க ஊர்ல எனக்குத் தெரிஞ்சு வீடு புகுந்தெல்லாம் திருடினதா கேள்விப்பட்டதில்லை. அதிகபட்சமா... மாட்டை அவுத்துட்டுப் போயி... ஒண்ணு, ரெண்டு முறை வித்திருக்காங்க... இந்த மாதிரி ராத்திரியில சுவரேறிக் குதிச்சு... திருடறதுன்னா வீட்ல ஏதும் நகை, கிகை வச்சிருக்கீங்களா?"

"அட போப்பா... நாங்களே நாடோடிங்க" என்ற அழகு டார்ச்சுடன் எழுந்தான்.

"வேணி டீ போடு... இன்னிக்கு எனக்குத் தூக்கம் வராது... மனசு ஒரு மாதிரி ஆயிடுச்சு... வீட்டைச் சுத்தி ஒரு ரவுண்டு பாத்துட்டு வரேன்... சரவணா, கொஞ்ச நேரம் எங்ககூட இருக்கியா?"

சரவணன் மனசுக்குள் சந்தோஷம் தோன்ற "சரி, சரி இருக்கேன்... என்ன பண்றது? ரெண்டு பேரும் ஒத்தையில இருக்கீங்க" என்றான்.






அழகு கிளம்பி வெளியே போனான்.

கிருஷ்ணவேணி அடுப்பைப் பற்ற வைத்து விட்டு வந்து சரவணனை முறைத்தாள்.

"சரியான துப்புக்கெட்ட ஜென்மம் நீ!"

"நான் என்ன பண்ணுவேன் வேணி.. அந்தத் திருட்டுப் பயல் ஓடிட்டான்... உன் அண்ணனும் ஆறுமுகமும் கூச்சல் போட்டுட்டு ஓடி வர்றாங்க... சரி, நம்மளை சந்தேகப்பட்டுடுவாங்கன்னு நினைச்சு ஓட ஆரம்பிச்சேன். அதுக்குள்ள வந்து புடிச்சுட்டாங்க."

"ம்ஹூம்... நாளைக்கு ஊர் பூரா தெரிஞ்சுடும்... கேட்டா என்னன்னு சொல்லப் போற..."

"இதென்னது வம்பாருக்கு... வயிறு சரியில்லைன்னு வந்தா... வந்த இடத்துல இப்படி ஆயிடுச்சு."

வேணி சிரித்தாள், "நீ கதை விடற. ஆனா மத்தவங்க நம்பணுமில்லே...?"

"எல்லாம் நம்புவாங்க" என்றான் சரவணன்.

ஆனால் அழகு நம்பவில்லை... அவனது யூகம் சரியாகவே இருந்தது... சரவணன் பிடிபட்டதுமே அழகு அவன் வேணியைப் பார்க்கத்தான் வந்திருப்பான் என்று யூகித்தான்.... அதனை உறுதி செய்து கொள்ள வேண்டுமென்பதற்காகவே சரவணனையும், வேணியையும் தனியாக விட்டு விட்டு சுற்றி வந்து வெளியிலிருந்து அவர்கள் பேசுவதை ஒட்டுக் கேட்டான். அவனது யூகம் மிகச் சரி... சரவணன் வேணியைப் பார்க்கத்தான் வந்திருக்கிறான். ரெண்டு பேருக்கும் காதல் துவங்கியிருக்கிறது. இதிலொன்றும் ஆச்சர்யமில்லை.

ஆனால் சரவணன் சொல்வதுபடியே பார்த்தாலும்கூட அவன் வீட்டுக்குள் புகவில்லை. வேறு எவனோ வீட்டுக்குள் புகுந்திருக்கிறான். யார்? எதற்கு...? குழப்பத்துடன் வீட்டுக்குப் பின்னால் வந்தான் அழகு... சுற்றுச்சுவர் தாண்டி வீட்டின் பின்புறம்... சரவணன் நின்றிருந்த அந்த மரக்கூட்டம் வரை பொறுமையாக டார்ச் அடித்தபடி தேடத் துவங்கினான் அழகு. சரவணனுக்கு டீ கொடுத்தாள் வேணி. இருவரும் வீட்டின் பின்வாசல் வழியே பூவரச மரத்தடிக்கு வந்து நின்றார்கள். சற்றுத் தொலைவில் அழகு தரையெங்கும் டார்ச் அடித்துப் பார்த்துக்கொண்டிருந்தான்.

"உங்கண்ணனுக்கு என்ன பெரிய துப்பறியும் நிபுணர்னு நெனைப்பா? அவன் குதிச்சு ஓடி 'எஸ்கேப்' ஆயிட்டான். இவரு தரையில என்னத்தை தேடுறாரு அய்யா?"

"என்ன கிண்டலா?" என்றாள் வேணி... அவன் ஓடும்போது பர்ஸு மாதிரி ஏதாச்சும் விழுந்திருந்தா...?" அதான் அண்ணன் தேடுது... ரொம்ப ப்ரில்லியண்ட் தெரியுமா அழகு" என்றாள்.

"அடேயப்பா" என்றான் சரவணன் கிண்டல் தொனிக்க... "இந்த ஊர்ல திருடங்க மணிபர்ஸ், விசிட்டிங் கார்ட், இதெல்லாமா வச்சிட்டிருக்கப் போறாங்க. உங்கண்ணன் துப்பறியும் கதை நிறைய படிப்பாம் போலிருக்கு" என்றான்.

"அவனை எதுக்கு கிண்டல் பண்ற.. உன்னால என்னைச் சத்தமில்லாம மீட் பண்ணிட்டுப் போக முடிஞ்சுச்சா... ம்... ஊரைக் கூட்டி மாட்டிக்கிட்டாச்சு... நல்ல வேளை எங்க அம்மா இல்லை."

"ஆமாமா" என்ற சரவணன் "உங்கண்ணன் துப்பறியறது கூட நல்லதுக்குத்தான் வா... நாம கொஞ்ச நேரம் தனியாக பேசுவோம்" என்று வேணியின் கரம் பற்றி இழுத்தான்.

"ஸ், சும்மாரு... உதை வாங்குவே

---

"ஏங்க, குப்பை வண்டி வந்திட்டுப் போயிடுச்சா?"

"தெருவைப் பார்த்தாலே தெரியுமே! குப்பையெல்லாம் ஆங்காங்கே குவிச்சு வைக்கப்பட்டிருந்தா வண்டி வரலேன்னு அர்த்தம். தெரு பூரா இறைஞ்சு கிடந்தா வண்டி வந்து போயிருக்குன்னு அர்த்தம்!"

- டி.என்.பாலகிருஷ்ணன்



அண்ணன் வந்திடும்'' என்று கையை உதறினாள் வேணி.

"என்ன வேணி, ரொம்பத்தான் அலட்டிக்கிற."

"சும்மாரு சரவணா... ராத்திரி நேரம் இலேசான சத்தங்கூட நல்லா கேக்கும்."

அழகு வீட்டை நோக்கி நடந்து வந்தான்.

"என்ன அழகு, ஏதாவது துப்புக் கிடைச்சதா?'' என்றான் சரவணன் உள்ளார்ந்த கிண்டலுடன்... அழகுக்கு அவன் கிண்டல் புரிந்தது. ''ம்ஹூம் ஒண்ணுமில்லை'' என்றபடி வந்தான். மூவரும் வீட்டுக்குள் வந்தனர். அழகுக்கு டீயைக் கொடுத்தாள் வேணி. அழகு டீயைக் குடித்தபடியே சரவணனைக் கேட்டான்.

"ஏன் கையை இப்படி வச்சிருக்கே... வலிக்குதா... புடிச்சு முறுக்கிட்டாங்களா?'' என்றான்.

சரவணன் சிரித்தான், "பதிலுக்குக் கிண்டல் பண்றயாக்கும், பரவால்லை, பண்ணு பண்ணு."

"அட! என்ன சரவணா நெசமாலே கையை முறுக்கி முதுகுல மூணு நாலு முறை குத்தினாங்கல்ல... எனக்கு சத்தம் கேட்டதே" என்றான் அழகு புன்னகையுடன்.

"ஆமா... அந்த ஆறுமுகம் கிறுக்குப்பய... சரி, என்ன பண்றது! இன்னிக்கு அவங் கைல அடி வாங்கணும்னு இருந்திருக்கு."

அழகு வேணியிடம், "வேணி நீ ஹால்ல உள்தாப்பா போட்டிருந்தயா?" என்றான்.

வேணி குழப்பமாக முகத்தை வைத்துக் கொண்டாள்.

''இல்லையேண்ணே, நான் போடலையே" என்றாள்.

"அப்ப திருட வந்தவன்தான் போட்டிருக்கணும்..."

"ஒண்ணும் புரியலைண்ணே..." என்றாள் வேணி.

"அவன் உள்ள நுழைஞ்சபோது, உள் தாழ்ப்பாள் போடும்போதெல்லாம் நீ என்ன அப்படியா தூங்கிட்ட?" என்றான் அழகு தங்கையின் முகத்தைப் பார்க்காமல்.

"எனக்கென்ன அண்ணே தெரியும்... உள் சத்தம் கேட்டு முழிச்சேன்... திருடன் இருக்கற மாதிரி தெரிஞ்சது. நானும் சுத்திக்கிட்டே முன் வாசலுக்கு வந்தேன். நீ கதவைத் திறந்து விடச் சொன்னதும் திறந்துவிட்டேன்."



**"உங்க அப்பாவுக்காக பெரிய கூட்டமே காத்துக்கிடக்கும்னு சொல்றியே..."**

**"அவர் என்ன, மந்திரியா..? சினிமா நடிகரா?"**

**"தண்ணி லாரி டிரைவர்!"**

**- *தஞ்சை தாமு***

"நா கூப்பிட்டதும் நீ வீட்டுக்குள்ள ஓடி வராம எதுக்கு வீட்டை சுத்தி ஓடி வந்தே?" என்றான் அழகு.

"என்னெண்ணே என்னையவே குறுக்கு விசாரணை பண்ற... உள்ள திருடன் இருக்கான். எனக்கு பயமாருந்துச்சு... அதான் வீட்டைச் சுத்தி ஓடி முன்பக்கம் வந்தேன்."

"அது சரி பாவம், நீ பொம்பளைப்புள்ள என்ன பண்ணுவே?" என்றான்.

சரவணன் கடிகாரத்தைப் பார்த்தான். "அப்புறம் அழகு நாளைக்கு அப்பாகிட்ட சொல்லணுமா... இதை"

''ஆமா சொல்லணும்... போலீஸ்ல சொல்ல வேணாமா?"

சரவணனுக்கு வயிறு கலங்கியது. "எதுக்கு அழகு போலீஸ்கிட்ட எல்லாம்... எவனோ வந்தான்.. சத்தம் போட்டு ஓடிட்டான்... எதும் திருடு போகலியே... அப்புறம் எதுக்கு அவங்கள்லாம்" என்றான்.

"சரி, போலீஸ் வேணாம்னாலும் உங்க அப்பாகிட்ட அவசியம் சொல்லித்தான் ஆகணும்... அவரை நம்பிதான் நாங்க இந்த ஊருக்கே குடி வந்தோம்... மூணு பொண்ணுங்க இருக்கற வீடு... இப்படி ராத்திரியில ஓர் ஆளு வீட்ல வந்து குதிச்சான்னா... நாளைக்கு ஊரு எங்களைப் பத்தி என்ன பேசும்...ம்... சொல்லு... வாய்க்கு வந்தபடி எல்லாம் பேசிடாதா...? வந்தவன் திருட வந்





தானா? வேற எதுக்காச்சும் வந்தானான்னு ஊர்ல நாலு பேரு வம்பு பேசிட்டா...? மூணு பொண்ணுங்க சரவணா. மடியில நெருப்பைக் கட்றதுன்னு சொல்வாங்கள்ல... அது எங்கமாவுக்குத்தான் பொருத்தமான வார்த்தை... பாவம்... அவங்க சரவணா."

சரவணனுக்குள் குற்ற உணர்ச்சி கரந்தது. வேணிக்கும்... இருவரும் ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டனர்.

சரவணன் தேற்றினான், "ஒண்ணும் சங்கடப்படாத அழகு... நாங்க எல்லாம் எதுக்கு இருக்கறோம்... ஒண்ணும் வராது" எந்த நாயி ஏறிக்குதிச்சான்னு கண்டுபிடிச்சிரலாம்... நீ ஒண்ணும் ஃபீல் பண்ணாத" என்றான்.

தனது பேச்சு குறி தப்பாமல் சரவணனைத் தாக்கி விட்டது குறித்து அழகு உள்ளுக்குள் மகிழ்ச்சியடைந்தான். சரவணனின் கைகளைப் பற்றிக் கொண்டான்.

"தேங்க்ஸ் சரவணா."

"பரவாயில்லை."

"கொஞ்ச நேரம் சீட்டு விளையாடலாமா?"

"நான் வீட்டுக்குப் போகணுமே."

"பயமாருக்கு சரவணா... இன்னிக்கு ஒருநாள் கொஞ்சம் லேட்டா வீட்டுக்குப் போயேன்."

"சரி" என்றான் சரவணன் சந்தோஷமாக.

வேணி சீட்டுக் கட்டு கொண்டு வந்தான். டீ போட்டு வைத்துக்கொண்டு நள்ளிரவு வரை சீட்டாடினார்கள்.

சரவணன் யோசித்தபடியே சீட்டாடினான். 'எப்படித் துவங்கிய பொழுது? ரொமான்ஸில் ஆரம்பித்து, த்ரில்லாக மாறி, பிறகு பதற்றம், திகில், பிறகு ஒரு கும்பலிடம் நாலைந்து உதை அப்புறம் நண்பனின் சென்டிமென்ட் என்று மானாவாரியாகப் போய் ஜோக்கர் வந்தால் தேவலை என்றாகி விட்டதே!'

சீட்டாட்டத்தின்போது கடந்துபோன அன்றைய பொழுதைப் பற்றி யோசித்த சரவணன், நாளைய பொழுதைப் பத்தி எண்ணவில்லை...

எண்ணியிருந்தாலும் தனது அப்பாவுக்கும் தனக்கும் நிகழவிருக்கும் மாபெரும் சொற்போரை அவன் யூகித்திருக்க வாய்ப்பில்லை.

(தொடரும்)



# சூரத் ஜன்னடி!

**ரொ**ம்பவும் பயந்து போய் விடாதீர்கள், 'சுங்குடிப் புடைவை'யின் புராதனப் பெயர்தான் இது! இதன் தாயகம் குஜராத். தமிழகத்துக்கு இந்தக் கலையை கடத்திக் கொண்டு வந்தது மதுரை சௌராஷ்டிரா வகுப்பினர்தாம்!

"எங்கள் வீட்டு வாசல்களில் எல்லாம் அவுரிச் செடியின் இலைகளை வெயிலில் காயப் போட்டிருப்பார்கள். அந்தச் சருகுகளைத் தண்ணீரில் போட்டுக் கொதிக்க வைத்து ஒரு பக்குவத்தில் சாயம் இறக்குவார்கள். இதில் பிரதானமான நிறம் சிவப்புதான். சேலையைச் சலவை செய்து சுருக்கம் இல்லாமல் விரித்து, தச்சு வேலைக்காரர்கள் மாதிரி நூலில் பொடியைத் தோய்த்துக் கோடு தட்டுவார்கள். குறுக்கு நெடுக்கில் தட்டப்படுகிற கோடுகள் இழைகிற இடத்தில் நூல் கட்டுவார்கள். அப்புறம் சாயம் தோய்ப்பார்கள். நூல் கட்டிய இடங்கள் தவிர மற்ற பகுதிகளில் மட்டும் சாயம் ஏறும். இப்படி நூல் கட்டிச் சாயம் போடுவதுதான் சுங்குடி வேலை." என்று மிகவும் பழைமையான இந்தக் கலையின் நதிமூலம், சாயம் மூலம் சொல்கிறார் பாண்டிய பஜார் சிவப் பிரகாசம் சாலையிலுள்ள மதுரை டெக்ஸ் அதிபர் புருஷோத்தமன்.

**சா**யத் தொழிலில் மதுரைதான் முன்னோடியாக இருந்திருக்கிறது. அங்கிருந்து சென்னை தண்டையார்ப்பேட்டைக்கு வந்து பத்துப் பன்னிரண்டு தொழிற் சாலைகள் வைத்து நூல்களில் சாயம் ஏற்றி மற்ற மாநிலங்களுக்கு அனுப்பினார்கள்.

அவுரிச் சாயத்தில் சிவப்பு தவிர மஞ்சள், பச்சை நிறங்கள்தான் வரும். சென்ற நூற்றாண்டின் நடுவில்தான் விதம் விதமான ரசாயனச் சாயங்கள் ஜெர்மனி, லண்டன், ஸ்விட்சர்லாந்து போன்ற மேற்கத்திய நாடுகளிலிருந்து அறிமுகமாயின.

சுங்குடிப் புள்ளி கட்டுவதில் வீட்டுப் பெண்கள் தான்




# கல்கி-




# B. M. SILK SAREES

## இணைந்து வழங்கும்

## பட்டுப் புடவை

## பரிசுப் போட்டி – 14

## வாழ்த்துங்கள்!

**வை**ர விழா காணும் கல்கியில் உங்களுக்குப் பிடித்த (அ) பிடிக்காத விஷயத்தை பத்து வார்த்தைகளுக்கு மிகாமல் எழுதி அனுப்புங்கள். சிறந்த விமர்சனத்துக்கு ரூ.**2,500/-** மதிப்புள்ள பட்டுப் புடவை பரிசு. ஆறுதல் பரிசாக நான்கு பேருக்கு கல்கி புத்தகங்கள் பரிசாக அனுப்பப்படும். கூப்பன்கள் வந்து சேர வேண்டிய கடைசி தேதி **12.11.2001** உறையின் மேல் 'பட்டுப் புடவை பரிசுப் போட்டி - 14' என்று குறிப்பிடவும். ஆசிரியர் தீர்ப்பே இறுதி.

**பட்டுப் புடவை பரிசுப் போட்டி – 14**

என் பெயர் : ..............................................

முகவரி : ..............................................

..............................................

..............................................

..............................................

ஈடுபடுவார்கள். ஒற்றைப் புள்ளி, மூன்று புள்ளி, ஐந்து புள்ளி என்று விதம் விதமான கற்பனைகளில் புள்ளிகட்டுவது நுட்பமான கலை. அந்த நாட்களில் பட்டுப் புடவை கட்டுகிற வசதியான வீட்டுப் பெண் மணிகள் கூட, கடவுள் பெயரிலான பாடல் களைப் பாடிக் கொண்டு பொழுது போக் காக ஓய்வு நேரங்களில் புள்ளி கட்டுவார்கள். மற்றவர்களுக்கு வருவாய்க்கான தொழி லாகவும் இருந்தது.

காலம் மாறிவிட்டதில், கலையும் மாறிவிட்டது. இப்போதெல்லாம் தேவைப் படுகிற புள்ளி அமைப்புக்களுக்கான அச்சுகளை மெழுகில் தோய்த்து அழுத்தி, சாயம் தோய்க்கிறார்கள். அப்புறம் கொதி நீரில் சலவை செய்தால் மெழுகுப் புள்ளிகள் உருகி ஓடி, தேவையான டிசைன்கள் வரு கின்றன.

புள்ளி கட்டுவது தவிர, சேலைகளின் பார்டர் கட்டி, சாயம் தோய்ப்பதிலும் நிபுணர்கள் இன்றைக்கும் மதுரைக்காரர் கள்தான். மற்ற வகைச் சேலைகளுக்கு 'அயர்ன்' பண்ணினால் தான் கரைக்கட்டு ஜரிகை சுருங்காமல் இருக்கும். ஆனால் சுங் குடிச் சேலைகளின் ஜரிகை சுருங்குவ தில்லை.

நூறு சதவிகிதம் பருத்தி நூல் புடைவை கள் இவை. முன்பெல்லாம் சுத்தமான வெள்ளி ஜரிகை இழைகளைப் பயன்படுத் தினார்கள். இப்போது சூரத்திலிருந்து வருகிற 'ஹாஃபைன்' ஜரிகையைப் பயன்படுத்து கிறார்கள்.

மும்பை, டெல்லி, ஆந்திராவில் நிறைய டிமாண்ட் இருக்கிறது. ஆந்திரப் பெண் களின் சேலைகளின் உயரம் 47 அங்குலம், 50 அங்குலம் என்று கூடுதலாக இருப்பதால் சுங்குடி சேலைகளை அதிகம் விரும்பு கிறார்களாம்.

இப்போது புள்ளிகள் இல்லாமல் 'ப்ளெய்ன்' சேலைகளும், டபுள்கலர் கவர்ச்சி யோடு சுங்குடி சேலைகளும் வந்துவிட்டன. எல்லாம் சொல்லி விலையைச் சொல்ல வேண்டாமா? நூற்றைம்பது முதல் நானூறு ரூபாய்க்குள் சுங்குடி சேலைகள் கிடைக்கும். இதற்குக் குறைவாக இருந்தால் சாயத்தின் தரம் குறைவானதாக இருக்கும் என் கிறார்கள். பார்த்து வாங்குங்க!

**- யெஸ்பால்**

படங்கள் : **யோகா**

# கல்யாணப்



• நளினி ராதாகிருஷ்ணன்





• சந்தியா ராஜகோபால்



• உஷா கிருஷ்



**சந்தியா ராஜகோபால்:**

சின்ன வயதிலிருந்தே டிரஸ் விஷயத்தில் நான் ரொம்ப ஸ்மார்ட். அழகான, லேட்டஸ்ட் உடைகளைப் பார்த்து, பார்த்து வாங்குவேன். ஆனால் பாருங்க, என் கல்யாணம் நிச்சயமான சமயத்தில், நான் டெல்லியில் படித்துக் கொண்டிருந்ததால், புடைவை செலக்ஷனுக்கு, சென்னைக்கு வர முடியவில்லை.

அதனால் என்ன? என் உறவினர்கள் ஒன்பது பேர் கொண்ட 'திருமணப் புடைவை செலக்ஷன் கமிட்டி' ஒன்றை அமைத்தேன். அந்தக் குழுவும், சென்னையில் உள்ள பிரபல ஜவுளிக் கடைகளில் ஏறி இறங்கி, மிகவும் அழகான புடைவைகளைத் தேர்ந்தெடுத்து வெற்றி வாகை சூடியது. அதிலும் முகூர்த்தப் புடைவை சூப்பர்!

திருமணத்தின்போது, சில கிராண்ட் புடைவைகளைத் தவிர, நிறைய சாதாரண புடைவைகளும் வாங்கினேன். அவை இன்னும் பொலிவு குறையாமல் அப்படியே இருக்கின்றன. அவற்றை, டீவியிலும் கட்டி கட்டி போர் அடித்து விட்டதால், என்ன செய்யலாம் என யோசித்தேன். புடைவைகளுக்கு இலேசான 'டச்அப்' கொடுத்தேன். பார்டருக்கு மேலே சின்னச் சின்ன எம்பிராய்டரி பூ, லேஸ் ஒட்டுவது, கண்ணாடி பதிப்பது, என ஏதாவது 'தளுக்மினுக்' செய்ததில், புடைவைகளின் கெட்அப்பே மாறி விட்டது.

என்னுடைய கல்யாணப் புடைவையில் ஸ்வரோவ்ஸ்கி கிரிஸ்டல் பதித்திருக்கிறேன். சாதா கிரிஸ்டல்தான். ஆனால் பளபளப்பு இருக்கிறதே, நட்சத்திர மினுமினுப்பு! மாலை வேளையில், இதைக் கட்டிக் கொண்டு போனால், 'பிரமாதம் சந்தியா!' என்ற காம்ப்ளி

# புடைவை கலாட்டா!

மெண்ட் நிச்சயம்!

**நளினி கிரேஸி மோகன்:**

டெல்லியில் படித்துக் கொண்டிருந்த நான், பெண் பார்க்கும் படலத்துக்காக என்றே 'ஜி.டி' ஏறி காலையில் சென்னைக்கு வந்தேன். சாயங்காலம் எங்களைச் சுற்றிலும் ஒரு மகாமக கும்பலே இருந்ததால், ஒருவரையொருவர் சரியாகப் பார்க்க முடியவில்லை.

மறுநாள், ஒரு பிரபலமான துணிக் கடைக்குப் போக நேர்ந்தது. அங்கே...



ஆச்சரியமோ ஆச்சரியம்! மோகன் புடைவைகளை செலக்ட் செய்து கொண்டிருந்தார்.

"நான் யாருக்குப் புடைவை?" என்று 'டக்' என்று கேட்க, "உனக்குத்தான்" என்று 'டகால்' பதில் வந்தது.



• லக்ஷ்மி ரங்கராஜன்

"செலக்ட் பண்ணின பெண்ணைப் பார்த்தது போதும், புடைவையைத் தேர்ந்தெடு" என்று ஒரே கேரோ! முகூர்த்த புடைவையை அவர் செலக்ட் செய்ய, ரிஸப்ஷன் புடைவையை நான் தேர்ந்தெடுத்தேன்.

தேனிலவில், அழகான நீல நிற காட்டன் புடைவையைத் திடீர்ப் பரிசாகத் தந்து அசத்தினார் என்றாலும் இப்போதெல்லாம் 'புடைவை ஷாப்பிங்' என்றால் மரத்தான் ரேஸில் ஓடியே போய்விடுகிறார்.

எங்கள் குடும்பம் பெரிய குடும்பம். நிறைய சொந்தக்காரர்கள். அதனால் கல்யாணப் புடைவைகளை எல்லாம் கட்டி, நன்றாக உபயோகப்படுத்திவிட்டேன்.



• ரத்னா அரவிந்த்

**ரத்னா அரவிந்த்:**

மணிக்கணக்கில் புடை

வைகளைப் பார்த்து, அலசி, துழாவி, தேர்ந் தெடுப்பது... இதெல்லாம் சுத்த போர். நான் எப்போதுமே பத்து புடைவைகளை எடுத்துப் போடச் சொல்வேன். அதிலிருந்து ஒன்றிரண்டு செலக்ட் ஆயிடும்!

என் கல்யாணத்திற்கும் 'சடாசட்' தேர்வு தான். நானும் என்னுடைய இரண்டு தங்கை களும் சேர்ந்து, புடைவை செலக்ஷனுக்குப் போனோம். பெரிய பார்டர், டார்க் கலர் என 'கடகட' என ஒரே கடையில் மூன்று கிராண்ட் புடைவைகளையும் சில நிமிடங்களில் தேர்ந் தெடுத்து விட்டோம். கடைக்காரருக்கு மயக்கம் வராத குறை!

சன் நியூஸில் என் கல்யாணப் புடைவை கள் எல்லாமே பலமுறை வலம் வந்துவிட்டன. இருந்தாலும் அவற்றைக் கட்டினால் தனி மகிழ்ச்சி வந்து விடுகிறது!

மென்மையாக துவைத்து, நிழலில் உலர்த்தி, அழகாக அயர்ன் செய்து, நாப்தலின் உருண்டைகள் போட்டு பாதுகாத்து வைப்பதால் என்னு டைய கலெக்ஷன் எல்லாமே புத்தம் புதுசு போல பள பளக்கும். பார்ப் பவர்கள் ''புதுசா ரத்னா?'' என்பார் கள்... நான் என்ன சொல்ல...?



**லக்ஷ்மி ரங்கராஜன்:**

கல்யாணப் புடைவையைத் தேர்ந்தெடுப்பதற் காக, நான் 'நல்லி' போயிருந்தேன். அங்கே நல்லி குப்பு சாமியின் மகன் ராமநாதனிடம் பேசிக்கொண்டிருந்தபோது, மாப் பிள்ளை பற்றி பேச்சு வந்தது. ''டாக்டர் ரங்கராஜனா? அவர் என்னுடைய பள்ளி நண் பனாச்சே! ஒரே கிளாஸ், ஒரே பெஞ்ச்'' என்று அவர் கூற, ஸ்வீட் சர்ப்ரைஸாக இருந் தது. அப்புறமென்ன? எல்லா ஸ்பெஷல் புடை வைகளையும் எடுத்து, சின்ன மலை போல குவித்துவிட்டார்!

**உஷா கிருஷ்:-**

என்னுடைய கல்யாண புடைவைகளை மாமியார்தான் செலக்ட் செய்தார். மெஜந்தா, நாகப்பழம் என வித்தியாசமான நிறங்களில் அழகான ஊசிவாணப் புடைவைகள்! இன் னமும் ஜாக்கிரதையாக வைத்திருக்கிறேன்.

வட இந்தியாவில் கல்யாணப் பெண் ணுக்கு விலை உயர்ந்த புடைவைகள் பதினொன்று, சாதாரண புடைவைகள் ஐம்பது என அறுபத்தொரு புடைவைகள் எடுப்பது வழக்கம். நான் டெல்லியில் பிறந்து வளர்ந்த தால், என்னுடைய பெற்றோரும் இதே கணக்கில் எடுத்துக்கொடுத்தார்கள்.

கல்யாணப் புடைவை என்றாலே காஞ்சி புரமாகத்தான் இருக்கும். ஆனால் நானோ, கத் வால், பூனா, பனாரஸ் என வெரைட்டியாக எடுத்திருந்தேன். காலேஜில் எனக்கு புடைவை கட்டியே பழக்கமில்லை என்பதால், என்னுடைய நாத்தனார் பேபி சரோஜாதான் அழகாக கட்டி விட் டார். சமீபத்தில்தான் கல்யாண புடைவைகள் சிலவற்றை உருக்கி

* நளினி மோகன்

தங்கம், வெள்ளி பிரித்தெடுத்தேன்.

**நளினி ராதாகிருஷ்ணன்:**

என்னுடைய கல்யாணப் புடைவைகளைத் தேர்ந்தெடுத்த உறவினர் ஒருவர், பழைய ஃபேஷனில் தேர்ந்தெடுத்து விட்டார். எனக்கோ என்ன செய்வது என்று தெரியவில்லை. அமெரிக்காவிலிருந்து வந்திருந்த என் அத்தைக்கும், அந்தப் புடைவைகள் பிடிக்கவில்லை. "என்ன இது? வா... வா, புடைவைகளை மாற்றிக் கொண்டு வரலாம்!" என்று அவர் அழைக்கவே, உடனே கிளம்பிவிட்டேன். ஸேல்ஸ்மேன் உயிரை வாங்கி, மணிக்கணக்கில் ஆராய்ந்து, ஒரு வழியாகப் புடைவைகளை எடுத்தோம். பட்ஜெட்டாவது ஒன்றாவது? அதனால் தானோ என்னவோ, என்னுடைய கல்யாண புடைவைகள் இன்னமும் புதுசு போல, பளபளக்கின்றன.

என்னுடைய மிக நெருங்கிய தோழி, தன்னுடைய பாட்டியின் கல்யாணப் புடைவையை இன்றைக்கும் மெருகு குலையாமல் வைத்திருக்கிறாள். எவ்வளவு வருஷத்துப் புடைவை தெரியுமா...? நூற்று பத்து வருடங்கள்! 'எப்படி கிழியாமல் வைத்திருக்கிறாய்?' என்றால், 'பாம்பு உரித்த சட்டைகளைப் புடைவையின் இடையில் வைத்து பாதுகாக்கிறாளாம்! அப்படிச் செய்தால் புடைவை கிழியாதாம். நிறமும் மங்காதாம்!

— ரஜினி ராஜேஷ்

படங்கள் : யோகா

## கல்கி – பி.எம். சில்க்ஸ் பட்டுப்புடைவை பரிசுப் போட்டி முடிவு – 10

'வைரம் எந்த மாதம் பிறந்தவர்களின் ராசிக்கல் என நம்பப்படுகிறது?' என கேட்டிருந் தோம். 'ஏப்ரல்' என நிறைய வாசகர்கள் சரியாக எழுதியிருந்ததால்,

வி. பானுமதி,
எம். 172, ஒன்பதாவது குறுக்குத் தெரு,
திருவள்ளுவர் நகர்,
திருவான்மியூர், சென்னை – 41

குலுக்கல் முறையில் ரூ. 2500/- பெறுமானமுள்ள புடைவை பரிசு பெறுகிறார்.

## கல்கி – பி.எம். சில்க்ஸ் பட்டுப்புடைவை பரிசுப் போட்டி முடிவு – 11

'வைரம்' சம்பந்தப்பட்ட நகைச்சுவை துணுக்கு எழுதி, முதல் பரிசாக ரூ.2500/- மதிப்புள்ள பட்டுப் புடைவை பரிசாக பெறுகிறார்.

எஸ். கோபால கிருஷ்ணன்,
32 கே, ஏழாவது தெரு,
கே.கே. புதூர், கோவை - 641038.

### முதல் பரிசு ஜோக்!

கணவன்: என்ன சொன்னாலும் காதுல போட்டுக்க மாட்டேன்றியே கமலா!

மனைவி: வைரத்தோடு வாங்கித் தர்றேன்னு சொல்லுங்க, உடனே போட்டுக்கறேன்.

### ஆறுதல் பரிசாக கல்கி புத்தகங்கள் பெறும் ஜோக்ஸ்:

"எம் பொண்ணைக் கல்யாணம் பண்ணிக்கிட்டா பாத்திரம் பண்டம் சீர்வரிசையோட வைரத்தையும் அனுப்பி வைப்பேன்னு என் மாமனார் சொன்னதை நம்பி மோசம் போயிட்டேன்!"

"ஏன், என்ன ஆச்சு?"

"வைரம் என் மனைவியோட செல்ல அல்சேஷன்."

— உமா வள்ளியப்பன், திருச்சி -3.

"வைரத்தோட ஜொலிப்பு கண்ணுல பட்டுக்கிட்டே இருந்தால் தலைவலி வந்துடுமாமே...?"

"நிச்சயமா...! எதிர்வீட்டுப் பொம்பளை வைரத்தோடு போட்டுக்கிட்டது என் மனைவி கண்ணில் பட்டு, எனக்கு இப்போ பெரிய தலைவலியா இருக்கே!"

— சீர்காழி ரேவதி

★ 'அகர முதல ஃபேஷனெல்லாம் 'மும்பை' மார்க்கெட் முதற்றே அழகு' - உல்டா குறள் என்றாலும் உண்மை நூறு செ.மீ! இன்றைய லேட்டஸ்ட் ஃபாஷன், டாப் ஃபேஷன், மாடலிங் எல்லாற்றுக்கும் மூல ஸ்தானமே மும்பைதான்.

●●

★ மும்பையில் எந்த பேஷனுக்குமே அல்பாயுசுதான். அதிக பட்சம் ஒரு வருஷம். அவ்வளவுதான்! பதினைந்து வருஷத்துக்கு முன்பு டாப் ஃபேஷனாக இருந்து, பின் அவுட் ஆஃப் ஃபேஷனான எல்லா உடைகளையும் மீண்டும் பிஸியாக ரிமேக் செய்து கொண்டிருக்கிறார்கள். புனரபி ஃபேஷன்!

●●

★ மும்பை கார்மென்ட் பஜார், பர்ஸுக்குத் தகுந்தபடி, ஏரியாவுக்கு ஏரியா மாறுகிறது. கொலாபா, பாந்த்ரா, அந்தேரியில் ஹைறேட்; செம்பூர், காட்கோபர், குர்லாவில் கொஞ்சம் சூடு. அதுவே முலுண்ட்தாணா, டோம்பிவ்லி, கல்யாணில் சீப்போ சீப்.

●●

★ இந்தியா முழுக்க பொடி நடையாகச் சுற்றி வந்து பாருங்கள். மும்பையில் அணியப்படும் ஆடைகளில் தனி முத்திரை தெரியும். ஏனென்றால் எல்லாமே லேட்டஸ்ட் வெஸ்டர்ன் அவுட்ஃபிட்! சோலி லாச்சா, ஷராரா, ஸல்வார், பெர்ஷியன் ஸுட் என விதவிதமாக கிடைத்தாலும், இளம் பெண்களின் ஒட்டு மொத்த வோட்டு ஜீன்ஸ், ஸ்லீவ்லெஸ் ஷார்ட் டாப்ஸ்க்குதான். அதுவே கல்யாணம், விருந்து என்றால் ஸாடின், ஜர்தோஸி வேலைப்பாடு கொண்ட பாவாடை, டஸ்ஸர் ஸில்க் ஸுட் என பளபளப்புக்கு மாறி விடுகிறார்கள்.

●●

★ ஆண்களுக்கு என தனி ஃபேஷன் பொட்டீக்குகளும் ஆளை அசத்துகின்றன.

பார்ட்டிவேர், ஜோத்புரி ஸூட்ஸ், ஷெர்வானி ஸூட்ஸ், குர்தா - பைஜாமா, பட்டாணி ஸூட்ஸ், தோதி ஸூட்ஸ், டங்கரீஸ், டீ ஷர்ட்ஸ், ஜீன்ஸ், பேண்ட் என வித விதம்!

●●

★ ஒரு பக்கம் மேற்கத்திய ஃபேஷன் ஜெராக்ஸ் நடந்து கொண்டிருக்க, இன்னொரு பக்கம் பாரம்பரிய குஜ ராத்தி, மார்வாடி உடைகளுக்கு மவுசு அதிகரித்துள் ளது.

கலாசார ஆடைகளைக் கட்டிக் காப்பதில் காட்கோபர் 'ரபரான்' மிகப் பிரசித்தி. இங்கு ஆர்டர் கொடுத்தால், ரொம்ப பிகு செய்து கொண்டு தயாரித்துக் கொடுப்பார்கள். நவராத்திரியில் பேட்டை தோறும் விடிய விடிய நடக்கும் 'தாண்டியா' ஆட்டத்துக்கு இங்கேதான் உடைகள் வாங்கப்படுகின்றன.

●●

★ தாதர் ஹிந்த் மாதா ஹோல் ஸேல் மார்க்

# ஓல்லெல்லாம் கோல்டு!

கெட், க்ரோபோர்ட் மார்க்கெட், ஸயான், காட்கோபரிலுள்ள காந்தி மார்க்கெட் என தடுக்கி விழுந் தால் மொத்த, சில்லறை துணிக் கடைகள் தான். மைக்ரோ, மேக்ரோ என மொத்தம் நானூறு கடைகள். குஜ ராத்தி முதலாளிகள், குஷியாகப் பணம் பார்க்கிறார்கள்.

●●

★ மும்பை வந்து இறங்கியதும், முகம்கூட கழு வாமல், சர்ச்கேட் ஃபேஷன் ஸ்ட்ரீட் ஹோல்ஸேல் மார்க்கெட் டுக்குப் போய் 'சீப்' ரேட்டில், ஷாப்பிங் செய்யாத சுற்றுலாப் பயணியும் உண்டோ!

பேட்டி, படங்கள்: **சாரதா ஸ்ரீனிவாஸன்**

செ ன்னை, மயிலாப்பூர் போய் 'சாந்தி டெய்லர்ஸ்' என்று கேட்டால் உடனே மணி யின் கடையைக் காட்டுவார்கள். அதேபோல பரதநாட்டியக் கலைஞர்களிடம் போய் 'சாந்தி



# 'மணி'யான

டெய்லர்ஸ்' என்று கேட்டால், உடனே மணி தைத்த உடையைக் காட்டுவார்கள். பரதநாட்டிய உடைகளைத் தைத்துத் தருவதில் உலகப் புகழ் பெற்று சிறந்திருப்பவர் திருப்பந்தியூர் வீராசாமி சுப்பிரமணி. சுருக்கமாக டிவி.எஸ். மணி.

"ஊரில் ஆறாவது வரை படித்தபின் ஏழாவது சேர சென்னை வந்தேன். எல்லா பள்ளிக் கூடங்களிலும் 'ஹவுஸ் ஃபுல்'. இடம் இல்லை என்று அனுப்பிவிட்டார்கள். அடுத்த வருடம் வரை என்னை வைத்துக் கொண்டு என்ன செய்வது என்று சித்தப்பாவுக்குப் புரியவில்லை. கச்சேரி ரோடில் 'அம்பிகா டிரஸ்ஸஸ்' என்ற தையல் நிறுவனத்தில் என்னைக் கொண்டு போய்ச் சேர்த்து விட்டார்.

"ஒரு குச்சியை விரல்களில் பிடித்து, அதையே ஊசியாகப் பாவித்து, அதை மேலே நூலோடு சேர்த்துத் தூக்கும் போது முகத்தில் கன்னப் பகுதியில் கண்ணோரம் எப்படி தோலில் குத்திக் கொள்ளாமல் கை போய்வர வேண்டும் என்பதுதான் தையற்கலையில் நான் கற்றுக் கொண்ட முதல் பாடம்" என்று அதைச் செய்து காட்டுகிறார் மணி.

"வாரம் இரண்டு அல்லது மூன்று ரூபாய் கூலி. கையில் பணம் நடமாடவே அடுத்த வருஷம் படிப்பின் மீது நாட்டம் போகவில்லை. ஓர் ஐந்து வருடங்கள் தையல் கடையிலேயே உட்கார்ந்திருந்ததால் 'இதையே நம் துறையாக எடுத்துக் கொண்டால் என்ன?' என்றும் தோன்றியது.

"ஒரு நாள் பஸ்ஸில் பயணம் செய்த போது அதில் யாரோ விட்டுவிட்டுப் போன ஒரு பை எனக்குக் கிடைத்தது. உள்ளே இரண்டு புத்தகங்கள், ஒரு ஷர்ட் இருந்தது. புத்தகங்களில் ஒன்று திருக்குறள். இன்னொன்று பேராசிரியர் க. அன்பழகன் எழுதிய 'உரிமைக்குரல்'. திருக்குறளைப் புரட்டியதும் என் கண்ணில் பட்ட குறள்:

'தோன்றிற் புகழொடு தோன்றுக அஃதிலார்
தோன்றலின் தோன்றாமை நன்று'

இந்தக் குறள் அப்படியே என்னுள் பதிந்து போனது.

'இனி என் துறை தையல்துறைதான். இதில் புகழ் பெறுவேன் என்று உறுதி எடுத்துக் கொண்டேன்" என்கிறார் மணி.

வ டக்கு மாடவீதியிலிருந்த 'அமர்ஜோதி டெய்லர்ஸ்'ல் ஏழு வருடங்கள் பெற்ற கடினமான பயிற்சிதான் இன்றைய 'மணி'யின் தொடக்கம்.

குமாரி கமலா, லலிதா பத்மினிக்கு பரத நாட்டிய உடைகள் தைத்தது அமர்ஜோதிதான். புகழ்பெற்ற அந்தக் கம்பெனியில் டான்ஸ் காஸ்ட்யூமின் நெளிவு சுளிவுகளைத் தெரிந்து தேர்ந்த மணி, அடுத்து சொந்தமாகக் கடை வைக்க ஆவல் கொண்டார்.

சாந்தோமில் வீட்டோடு கூடிய கடை

ஒன்று வாடகைக்கு கிடைத்தது.

"பதினைந்து ரூபாய் வாடகை. ஒரு ரூபாய் கரெண்டுக்கு. முப்பது ரூபாய் அட்வான்ஸ். இதற்கு ஆறுபக்கம் அக்ரிமென்ட்" என்று அந்த நாட்களை நினைவு கூர்ந்து சிரிக்கிறார்.

முதல் பத்து வருடம் சுமாரான தொழில் நடந்தது. அப்புறம் சூடுபிடித்தது. பரதநாட்டியம், மோகினியாட்டம், ஒடிஸி, குச்சிபிடி, மணிப்புரி, கதக் என்று எல்லா நடனக் கலைகளுக்கும் தேவையான உடைகள் மணியின் கத்திரிக்கோலில் நடனமாடியதில், மிகத் தேர்ந்து விட்டார் மணி.

முதலில் கடையைத் துவக்கி வைத்தவர் நடிகை கனகதுர்க்கா. இன்று வரை மணி புதிதாக எதில் ஈடுபட்டாலும் அதைத் திறந்து வைப்பவர் கனகதுர்க்காதான்.

இங்கே சித்ரா விஸ்வேஸ்வரன், சரஸ்வதி கான நிலைய மாணவிகள், அடையார் லட்சுமணன் சிஷ்யைகள், ஜெயலட்சுமி அருணாசலம் என்று இவரது வி.ஐ.பி. வாடிக்கையாளர் பட்டியல் நீள்கிறது.

வித்தியாசமான இரண்டு மகன்கள் இவருக்கு. செந்தில் எம்.ஏ. படித்துவிட்டு இவ

# டெய்லர்

ரோடு தைத்துக் கொண்டிருக்கிறார். சிவகுமார் பி.ஈ. படித்துவிட்டு டான்ஸ் டிரஸ் தைக்க வரப் போகிறார். இருவருக்கும் அவ்வளவு ஆர்வம்' என்கிறார் மணி.

தம் தொழிலில் கம்ப்யூட்டரை மிகச் சரியாகப் பயன்படுத்தி வெற்றிபெற்றிருக்கிறார் மணி.

வெப்ஸைட் வைத்திருக்கிறார். ஈ.மெயில் ஆர்டர்கள் வருகின்றன.

ஓய்வில்லாத தொழிலுக்கு நடுவே தமிழ்நாடு தையற்கலை தொழிலாளர் முன்னேற்றச் சங்கத்தின் தலைவர் பதவியையும் வகிக்கிறார். 'உலகத் தையற் கலைஞன்' என்ற மாத இதழையும் கொண்டு வருகிறார்.

சஃபாரி உடையில் சுழல் நாற்காலியில் அமர்ந்து ஒரு சீனியர் எக்ஸிக்யூடிவ் போல மிடுக்காகப் பேசுகிறார் மணி.

பேட்டி முடிந்த மறுநிமிடமே சஃபாரி சட்டையைக் கழற்றி கொக்கியில் மாட்டிவிட்டு பேண்ட், கட் பனியனோடு கத்தரிக்கோலை எடுத்துக் கொள்கிறார்.

அவரது வெற்றியின் ரகசியம் புரிகிறது.

— ராணிமைந்தன்

படம் : வெங்கடேஷ்

"ஏற்கெனவே இந்தக் கோயில்களுக்கு வந்திருக்கீங்களா?" சுந்தர்ராமன் கேட்டார்.

"இல்ல சார்! பிளச்டி முடிச்சுட்டுத்தான் பெங்களூர் முழுக்கச் சுத்திப் பாக்கலாம்னு இருக்கோம்!" தலை திருப்பி, அவரைப் பார்த்து பதில் சொல்லிவிட்டு, நேராகி விட்டார் ராஜேந்திரன்.

அருகருகே, தன் முன்னாள் பேராசிரியருக்குச் 'சமதையாகவா' என்கிற கூச்சத்தில் அவர் மேல் படாதவாறு முன் தள்ளி கால்டாக்சியின் முன்னிருக்கைச் சாய்மானத்தைப் பிடித்தபடி அமர்ந்திருந்தார் ராஜேந்திரன்.

"என்ன, உமா! நீ 'அங்க இங்க கூட்டிட்டுப் போங்க'ன்னு சொல்றதில்லயா?" பின்சீட்டில் இருந்தவளைச் சீண்டினார் சுந்தர்ராமன்.

"உங்களை மாதிரி கெஸ்ட் வர்றப்பதான் அவுட்டிங் போவோம் சார். அவரும், பாவம், தினந்தினம் காலைல லேபுக்குப் போனா, ராத்திரிதான் வர்றாரு! அதனால அவரைத் தொந்தரவு பண்றதில்ல."

# சாயங்காலப் பொழுது நேரம்

"ஓ! அப்ப நான்தான் டிரபிள் பண்றனா? என்ன, ராஜேந்திரன்? அப்படியா?" சிரித்தார் சுந்தர்ராமன். இதைக் கேட்டதும், உமா, கொஞ்சம் சிரமப்பட்டுப் பின்னே திரும்பி, "அய்யய்யோ! நான் அப்படிச் சொல்லல சார்! நீங்க எங்க வீட்டுக்கு வந்தது, சாப்பிட்டது... ரொம்ப சந்தோஷமா இருக்கு! நீங்க அவருக்கு எக்கச்சக்கமா ஹெல்ப் பண்ணதை எத்தனையோ தடவை சொல்லிருக்காரு. உங்ககூட கோயிலுக்கு வர்றது எங்களுக்குப் பெருமை சார்!" சாலையில் சென்று கொண்டிருந்த வாகனங்களின் 'வாசிப்புக்'கேற்ப தன் குரலைக் கூட்டிச் சொன்னாள்.

"ஓகே! அதெல்லாம் இருக்கட்டும். கல்யாணமாகி ஒரு வருஷம் ஆகப் போகுதில்ல! எப்ப குழந்தை? அதுவும், பிளச்டி முடிச்சிட்டுத்தானா?" சுந்தர்ராமன் விசாரிக்க, "அப்படியெல்லாம் ஒண்ணுமில்ல சார்! எப்பன்னாலும் சந்தோஷம்தான்!" கூச்சத்தோடு சொன்னார் ராஜேந்திரன்.

ராஜேந்திரன், இடது பக்க ஜன்னல் கண்ணாடியை முழுக்க பின்னே நகர்த்தி வெளியே பார்த்தார். சாயங்காலம் ஐந்து மணி மாதிரியே தெரியவில்லை. பெங்களூரில் சூரியன் ஒரு சோம்பேறி. அருகருகே உரசிச் செல்லும் வாகனங்களின் இடைவெளியில் வானம், ஒரு ஞானியின் மனம் போல், தெளிவாய் இருந்தது. இன்னும் கொஞ்ச நேரத்தில் இருட்டுக் குழப்பம் வந்துவிடும். ஆறு மணிக்கு லேப்பில் இருக்க வேண்டும். கட்டாயம்! அதற்குப் போதுமான நேரம் இருப்பதாய் நினைத்தார் ராஜேந்திரன்.

"தேங்க்யூ வெரி மச்பா! சிவா டெம்பிள், இஸ்கான் கிருஷ்ணர் கோயில். அரசின குண்டே கோயில் எல்லாமே ரொம்ப அற்புதம். அதுவும், அரசின குண்டேல, விஸ்வரூப தரிசனம்... கூட்டம் வேற இல்லியா... ரொம்ப நல்லாயிருந்தது!" கன்னத்தில் போட்டுக் கொண்டார் சுந்தர்ராமன்.

டிரைவர், கால் டாக்சியின் வேகத்தைக் குறைத்தார். சாலையில், இந்தியாவின் வளர்ச்சியைக் காட்டுவது மாதிரி, மாட்டு வண்டி முதல் மாடி பஸ் வரை, தாறுமாறாய் நின்று கொண்டிருந்தது, முன் கண்ணாடி வழியாய்த் தெரிந்தது.

'என்ன பிரச்னை' என்றறிய, தம் பக்க ஜன்னல் கதவை நீக்கி, 'அருகில் இருக்கும் வாகனக் காரைக் கேட்கலாமா?' என்று

விருச்சிகன்

யோசித்தார் சுந்தர் ராமன். தூரத்தில், இளைஞர் ஒருவர் சின்னச் சின்ன ஆங்கிலத்தில், சத்தமாக விஷயத்தை விளக்கினார்.

# போட்டிக்கதை - 9

"செலிப்ரேஷன்... ஆன் தி ரிலீஸ் ஆப் கன்னடா சூப்பர் ஸ்டார் ராஜ்குமார் ஒன் வீக் பிபோர், பை சேண்டல் வுட் ஸ்மக்லர் வீரப்பன். தேங்க்ஸ் தமிழ்நாட். டிராபிக் ஜாம் க்ளியர் இன் டென் மினிட்ஸ்"

நம்ப முடியாத ஒன்று. டிரைவருக்கு பெங்களூர் அவ்வளவாய்ப் பரிச்சயமில்லை போலும். ராஜேந்திரன் நிதானமாகிவிட்டார். இன்று லேப் போக எப்படியும் ஏழாகிவிடும்.

அரை மணி நேரத்திற்குப் பிறகு, போக்குவரத்து சீரானது.

'டிரைவர் வேகமாத்தான் போறாரு!



சொன்ன ஆளின் கையில் 'லாங் லிவ் ராஜ்குமார்' என்ற வாசகத்தோடு ஒரு கொடி.

உமாவின் வாயிலிருந்து வந்த 'அப்பாடா'வும், சுந்தர்ராமன், சுழற்றிக் கையில் வைத்துக் கொண்டிருந்த மூக்குக் கண்ணாடி அவர் முகத்துக்குப் போனதும், அவர்களது நிம்மதியைச் சொன்னது. ராஜேந்திரனுக்கோ, 'அது' குறையத் துவங்கியது. போக்குவரத்து இம் மாதிரி சமயங்களில், 'விரைவில் சரியாகிவிடும்' என்பதும், ஆனாலும், எல்லாத்துக்கும் 'லிமிட்'னு ஒண்ணு இருக்கே. கால் டாக்சி ஹெலி காப்டரா மாற முடியுமா...? மாறினா, அடுத்த நிமிஷம் லேப்ல போய் இறங்கி... துடிதுடிச்சிட்டிருக்குமே... ஒண்ணில்ல... ரெண்டில்ல... இருபத்தாறு...' ராஜேந்திரனுக்குத் தவிப்பு அதிகரித்தது.

"ராஜேந்திரன்! ஒரு சின்ன ஆப்ஸி

கேஷன். உமா, இன்னைக்குக் காலையேயும், மத்யானமும், என் பொண்ணு மாதிரி, பாத்துப் பாத்து, 'பிடிச்சது எது'ன்னு கேட்டுக் கேட்டு சமைச்சுப் போட்டா. நைட்டும் எதுக்கு என் பொண்ணைச் சிரமப் படுத்தணும்? அதனால, உங்க ரெண்டு பேருக்கும் ஒரு டின்னர் குடுக்கலாம்னு ஆசைப்படறேன். ஒரு ரிச் வெஜ் ஓட்டல்ல, டிராப் பண்ணச் சொல்லேன். என்ன, சரியா?''

ராஜேந்திரன், உமாவைத் திரும்பிப் பார்க்க ''சிரமம் எல்லாம் ஒண்ணுமில்ல'' என்றாள்.

ராஜேந்திரன் யோசித்தார். 'சாருக்கோ, உமாவுக்கோ, தன் பிரச்னை தொந்தர வாய் மாற வேண்டாம். சாரும், நைட் டிரெய்னில் சென்னை கிளம்புகிறார். எனவே, தள்ளிப் போடவும் முடியாது!'

''இட் இஸ் எ ப்ளஷர் அண்ட் ஹானர் சார். ஆனா, ஒரு ரிக்வெஸ்ட். லேப்ல அரை மணி நேர வேலை இருக்கு. என்னை அங்க இறக்கிட்டு, உங்களை ராம விலாஸ் ஹோட்டல்ல, டிராப் பண்ணிடச் சொல் றேன். அது ஸ்டார் ஹோட்டல் சார். இட்டம் வர, எப்படியும் அரை மணி நேர மாகும். நீங்க, சாப்பிட ஆரம்பிக்கறதுக் குள்ளே நான் வந்து ஜாயின் பண்ணிக் கறேன் சார். டோன்ட் மிஸ்டேக் மி!''

''நோ ப்ராப்ளம்!''

ஏழு மணியை நெருங்க, நெருங்க, இருட்டின சட்டையில் கிழிசல்கள் மாதிரி சீரான இடைவெளியில் சோடியம் ஆவி விளக்குகள் எரிய, சாலையெங்கும் ஜாஜ்வல்யம். வாகனங்களும், மக்களும், ஒரே வேகத்தில் போய்க் கொண்டிருந்தனர்.

ஏதோ, திரட்டுப் பாலில் செய்து வைத்த உயிர்ச்சிலைகள் மாதிரி, சமாதானக் கொடி போல் விடைத்து நிற்கும் வெள்ளைக் காதுகளும், சமாதானம் இல்லையென்றால் என்ன ஆகும் என்பதைச் சொல்லுவது போல், ரத்த நிறச் செர்ரிக் கண்களும் கொண்டு... அவை கூண்டுகளில், அளவான சுதந்தரத்துடன் இருந்தன. ஒவ்வொரு கூண்டின் முன்னாலும், அவற்றின் எடை, வயது, வகை என எல்லா விவரங்களும் அட்டையில் தொங்கின.

அட்டெண்டர் திம்மப்பா ஓடோடி வந்தான். ''ராஜே சார், உங்களைப் பாக்கத் தான் வீட்டுக்குப் போய்கிட்டிருக்கேன். எச்ஓடி சார், ஒரு லெட்டர் குடுக்கச் சொன்னார்!'' பிரித்துப் படித்துப் பார்த்தார் ராஜேந்திரன்.

காகிதத்தின் கடைசியில், ராஜேந்திரனுக்கு ரொம்பவும் பிடித்த எச்ஓடியின் கையெழுத்து. கீழிலிருந்து மேலே போய், அங்கிருந்து காகிதத்தின் கடைசி வரை நேர்படச் சீறுகிற மாதிரி... அவரது கையெழுத்திலிருந்து, அவரது பெயரை அறிந்துகொள்ள முடியாது. ஆனால், அந்தக் கையெழுத்துக்குரியவரை, உலகில் உள்ள எல்லா பயோகெமிஸ்ட்ரி விஞ்ஞானிகளுக்கும் தெரியும். டாக்டர் தேவகவுடா..., அவரிடம்தான் பிஎச்டி செய்ய வேண்டும் என்பது ராஜேந்திரனின் பல வருடத்திய கனவு. அதற்கு ஊக்கம் தந்தவர் சுந்தர்ராமன். அதற்காக, நிலா மறைவது முதல் சூரியன் உதிக்கிறவரை மட்டும் தூங்கி, மற்ற நேரமெல்லாம் படித்து, இந்தியா அளவில் பிஎச்டிக்கான நுழைவுத் தேர்வில், முதலாவதாய் வந்து... தங்கப்பதக்கம் பெற டாக்டர் தேவகவுடா, சந்தோஷமாய், ராஜேந்திரனைச் சேர்த்துக் கொண்டார்.

பிஎச்டிக்கான ஆராய்ச்சியை ஆரம்பித்து இரண்டு மாதம்தான் ஆகிறது. இதுவரை ராஜேந்திரனுக்கு டாக்டர் தேவகவுடாவிடம் இருந்த நல்ல பெயர்... இன்று? அதை நினைக்கும் போதுதான், ராஜேந்திரனுக்கு வருத்தமாக இருந்தது. மற்றபடி, எந்த வகை



இழப்புக்கும் ராஜேந்திரன் பயப்படவில்லை. ஆராய்ச்சி என்பதே இழப்புகளின் மூலம் கிடைக்கும் வருமானம் தானே!

பல சயின்ஸ் கைடுகள் சேடிஸ்டுகள். அதிக அறிவும் அரக்கத்தனமும் சேர்ந்தே இருக்கும். டாக்டர் தேவகவுடாவோ, இதயமும், மூளையும் ஒருங்கே வளர்ந்திருக்கிற நிஜமான மனுஷன்! 'அவரைப் போய் வருத்தப்பட வைத்துவிட்டேனே! ஆனாலும் நான் காரணமில்லையே' என்று தோன்றியது.

ராஜேந்திரனுக்கு இலேசாய்க் கண்ணீர் துளித்தது. மூக்கை உறிஞ்சியபடி, கைக் குட்டையை எடுத்துத் துடைத்துக் கொண்டார்.

லேப் ஓரத்தில் இருந்த, தீவன மூட்டையைப் பார்த்ததும், 'ராமவிலாஸ்' ஞாபகம் வந்தது. பாக்கெட் நோட்புக்கை எடுத்து, சுந்தர்ராமன் சாருக்கு மெஸேஜ் எழுதினார். ராமவிலாஸ் ஹோட்டலுக்குப் போய், உமாவிடம் தரச் சொல்லி, திம்மப்பாவை அனுப்பினார்.

ராஜேந்திரனுக்கும் பசி ஆரம்பித்திருந்தது. நேரங் காலந் தெரியாத, விவஸ்தை இல்லாத பசி... குழந்தையைப் பறிகொடுத்த தினத்தன்றுகூட, அம்மாவின் வயிற்றில் தன் கடமையைச் செய்கிற பசி... மனிதர்கள் சாப்பிட பசி மட்டும் போதாது. அமைதியான மனசு வேண்டுமே! அதிக சந்தோஷமோ, துக்கமோ – சாப்பிட விடாதே!

ஆனால், சாணமும் சிறுநீரும் இணைந்து குழம்பி, உடம்பில் அப்பிக் கிடக்க, 'களங்க நிலாக் குட்டிகள்' போலிருக்கும் இந்தக் கூண்டுவாசிகளுக்கு, மனசு கிடையாது. நாளை மதியமோ, இரவோ... அவை என்ன மாதிரி ஆகப் போகின்றன என்பது அவற்றுக்குத் தெரியாது. தெரிவிக்கவும் முடியாது. மனசில்லாவிட்டாலும், பசி உண்டே! மின் தராசை ஆன் செய்தார். தீவன மூட்டையைத் திறந்தார்.

வழக்கமாய், தினமும் ஆறு மணிக்குச் செய்வதை, வழக்கத்திற்கு மாறாய், ஏழரை மணிக்குச் செய்தார் ராஜேந்திரன். ஆனால், அவை வழக்கம் போல், தீவனத் தட்டு நிரப்பப்படும்போது, அதில் முகம் புதைத்து உண்ண ஆரம்பித்தன. வேக வேகமாய். காலையில் சாப்பிட்டது... இடைப்பட்ட வேளையில் தண்ணீர் மட்டுந்தான்.

அவற்றின் வயிறும், ராஜேந்திரனின் மனசும் நிரம்ப ஆரம்பித்தன. இந்த சந்தோ



சந்தோஷத்தைப் பற்றி நினையுங்கள். சந்தோஷமாக இருப்பதை வழக்கமாக ஏற்படுத்திக் கொள்ளுங்கள். சந்தோஷத்தை நம்புங்கள். பழக்கத்தின் மூலம் சந்தோஷத்தை நிலை நிறுத்துங்கள். அனைவருக்கும் சந்தோஷத்தைக் கொடுங்கள்!

கூறியவர்: நார்மன் வின்சென்ட்பீல்

தகவல்: கம்பம் அ. ராஜா ரஹ்மான்

ஷத்திற்காகத்தான் சுந்தர்ராமன் சார் டின்னர் தர ஆசைப்பட்டார். தன் மெஸேஜ் அவரை இலேசாய்ச் சங்கடப்படுத்தியிருக்கும். இந்நேரம், அவரும், உமாவும் சாப்பிட்டுவிட்டு, தனக்கான பார்சலோடு வீட்டுக்கு வந்திருப்பார்கள்.

அவை 'உண்டு முடித்ததும்' சந்தோஷமாய் வீட்டுக்குக் கிளம்ப ஆரம்பித்தார். பண்ணைக் கதவைப் பூட்டுவதற்கு முன், டாக்டர் தேவகவுடாவின் லெட்டரை மறுபடியும் ஒருமுறை படிக்கத் தோன்றியது.

"மாலை ஆறு மணி முதல் ஆறரை வரை உங்கள் லேபில் இருந்தேன். தீவனம் தரும் நேரம் தாண்டினால், ஆராய்ச்சி முடிவுகள் சரியாய் இருக்காது. எனவே, இப் பரிசோதனையை இத்தோடு நிறுத்தி விடுங்கள். இருபத்தாறு முயல்களையும் மீட் சயின்ஸ் டிபார்ட்மெண்டுக்கு அனுப்பி விடுங்கள். கறியை விற்று, அவர்கள் பணம் தருவார்கள். அதில் புதிதாக முயல்களை வாங்கி, பரிசோதனையை மறுபடியும் ஆரம்பிக்க வேண்டும். சிரமத்திற்கு வருந்துகிறேன். நாளை காலை பார்க்கலாம். நல் இரவு."

மிக அழகான ஆங்கிலத்தில். கடிதத்தின் கீழே ராஜேந்திரனுக்கு மிகவும் பிடித்தமான, அவருடைய கையெழுத்து.

லேப் கதவைப் பூட்டுவதற்கு முன் இருபத்தாறு முயல்களையும் ஒருமுறை பார்வையால் தொட்டார். கண்ணீர் துளித்தது.

# சிரிச்சு வைங்க!



"நீதானே கம்ப்யூட்டர் டிசைன் புடவை பிடிக்கும்னு சொன்னே..."



"இந்த ஆண்டு அமெரிக்காவில் டிரஸ் டிசைனுக்கான முதல் பரிசு வாங்கியிருக்கீங்க, அது பத்தி..."

"உண்மையைச் சொல்லவா? தைச்சு வைச்சிருந்த காஸ்ட்யூமை, ஷோவுக்கு முன்னாடி, கோபத்தில் என் மனைவி கண்டபடி கிழிச்சிட்டா."





"நீங்க புஷ் ஆதரவாளரா?"

"இல்ல. ஒரு மிசைல் லிப்ஸ்டிக், இன்னொன்னு நெயில் பாலிஷ்."



"ஒரு ஜாலிக்காக திரும்பிப் போகிற ராம்ப்பை சறுக்கு மரம் போல வைச்சிருக்காங்க."

— மாதுரி

படங்கள் : பிள்ளை

## நீங்கள் கேட்டவை — தராசு

# 'சித்தி'க்கும் 'அண்ணி'க்கும் என்ன வித்தியாசம்...?


* காணாத கனவு!


* கைவிட்ட தலைமை!

● கே. ராஜகோபாலன், பெங்களூர்.
? கென்யாவிடம் தோல்வி எதைக் காட்டுகிறது...?
! கென்யாவிடம் கூட தன்னால் தோற்க முடியும் என்று நிருபித்த இந்திய அணியின் திறமையை!

● கே. தெய்வசிகாமணி, சென்னை – 30. ❑
? உள்ளாட்சி தேர்தலுக்கு விடுமுறை தேவையில்லாதது என்று மாநில தலைமை தேர்தல் ஆணையர் பாண்டியன் கூறினாலும் அரசு விடுமுறை அறிவித்து விட்டதே...?
! அதனால் வாக்களிப்பு விகிதம் அபரிமிதமாக அதிகரிக்காவிட்டாலும் வன்முறை ஏகத்துக்கு அதிகரித்தது.

● கே. ராஜேந்திரன், மருதாடு.
? நிம்மதியான வாழ்வுக்கு அடித்தளம் எது...?
! உழைப்பில் களைத்த உடல் + அன்பில் நிறைந்த உள்ளம்.

● சி. தெ. இளமுருகன், சென்னை – 118.
? நீதிமன்றத்தால் தண்டிக்கப்பட்ட இரு ஐ.ஏ.எஸ். அதிகாரிகளுக்கு மீண்டும் பணி கொடுத்து, மீண்டும் சஸ்பெண்ட் செய்துள்ளதே தமிழக அரசு?
! க்ஷணச் சித்தம்; கணப் பித்தம்! எண்ணித் துணிவதால் துணிந்தபின் இழுக்கு தேடிக் கொள்கிறது.

● எஸ். அப்துல்லா அஹ்மது, நாகூர்.
? யோகாசனம் வெற்றியைத் தந்துள்ளதா?
! பலருக்கு வெற்றியைத் தந்துள்ளது. முறைப்படி கருத்தூன்றிச் செய்து வந்தால் நிச்சயம் உடல் ஆரோக்கியம் காப்பதில் யாருக்குமே வெற்றிதான்.

● கல்லன் கிருஷ்ணராஜ், குன்னூர் – 5. *
? சலனமற்ற முகத்துடன் வாக்குச்சாவடி அதிகாரிகள். சிரித்த முகத்துடன் வாக்காளர் வரிசை ஒரு சேனலில். – தேர்தல் அமைதியாக நடந்ததாம்!
மைக் முன் ஆவேசமாய்ப் பேசும் வேட்பாளர்கள்; தேர்தல் அதிகாரிகள். ஓடும் ஜனங்கள். லத்தியுடன் துரத்தும் போலீஸ். தாறுமாறாக வாக்குச்சாவடிப் பொருட்கள். இன்னொரு சானலில் – தேர்தலில் வன்முறையாம்! – எதை நம்புவது?
! நடுநிலைப் பத்திரிகைகளைப் படித்துப் பார்த்தால் இந்தத் தேர்தலில் ஆளுங்கட்சியின் வரலாறு காணாத வன்முறை இருந்ததென்பது உறுதிப்படும்.

● டி. அழகர்சாமி, மதுரை – 16.
? பிரதமர் வாஜ்பாய் அடுத்த மாதம் அமெரிக்கா போவதால் நமக்கு என்ன பயன்?
! பாகிஸ்தான் தரும் தலைவலிகளை எடுத்துச் சொல்லி நம்ப வைக்க உகந்த சூழல் அல்லவா...? தவற விடாமல் திறமையுடன் பயன்படுத்தினால் பாக். வால் நறுக்கப்படும்.

● எஸ்.ஏ. கேசவன், குறுமலை.
? பெண்கள் சுமங்கலியாகவே புவியிலிருந்து விடைபெற நினைப்பது ஏன்...?
! உணர்வுரீதியான பாதுகாப்பு இன்றி வாழ்வது ஆண்களை விட பெண்களுக்குக் கடினம் என்று கருதப்பட்டதால் செளமாங்கல்யத்துக்கு அதிக முக்கியத்துவம் தந்தனர். இந்த சரிநிகர் சமான யுகத்தில் அத்தகைய சென்டிமென்ட் அடிபட்டுப் போகிறது. ஆனால் இன்றும் அதே சென்டிமென்ட் காணப்படுகிறதே என்றால் அதற்கு, தன்னை விட தனது கணவனின் ஆரோக்கியத்தைப் பெரிதாக நினைக்கும் அன்புள்ளம்தான் காரணமாக இருக்க முடியும்.

● இரா. நல்லகண்ணு, பாளையங்கோட்டை.
? தமிழக உள்ளாட்சித் தேர்தலில் மின்னணு இயந்திரங்கள் பயன்படுத்தப்பட்டிருப்பதால் கள்ள வோட்டுத் தகராறு ஓரளவுக்குக் குறைந்திருக்க வாய்ப்பு இருந்

❑ ரூ. 100 பரிசு பெறுபவர் :
கே. தெய்வசிகாமணி,
24/43, புல்லா அவென்யூ,
சென்னை - 30.

* ரூ. 50 பரிசு பெறுபவர் :
கல்லன் கிருஷ்ணராஜ்,
11சி, ஒட்டுப்பட்டரை,
குன்னூர் - 5.
நீலகிரி - 643 105.

இருக்குமல்லவா?

! வோட்டுச் சாவடிகளையும் வோட்டு எண்ணப்படும் கேந்திரங்களையும் கைப்பற்றத் தீர்மானித்த பிறகு மின் இயந்திரமெனில் கள்ள வோட்டுப் போடுவது மேலும் சுலபம்தானே!

● தேவந்தி துரைராஜ், திருவண்ணாமலை.

**? புதுவை முன்னாள் முதல்வர் சண்முகத்தை அவர் கட்சிக்காரர்களே காலை வாரி விட்டது ஏன்?**

! டெல்லிக்கு நடையாய் நடந்தும் காங்கிரஸ் தலைமை அவரைக் கைவிட்டது; எனவே காங்கிரஸ் தலைவர்களும் கைவிட்டார்கள்!

● பா. குணா, சேத்துப்பட்டு.

**? பொன்மணி வைரமுத்துவின் கவிதைகளுள் உங்களைக் கவர்ந்தது...?**



• ஒரே குட்டையில்...



• ...ஊறிய மட்டைகள்!



• ஆழமான மௌனம்!

! காந்தி ஜயந்தி அன்று காந்தி வள்ளலார் விழாக் கவியரங்கில் வாசித்த 'மௌனம் பழகு!' அதிலிருந்து சில வரிகள் :

கைதட்டல்களின் சப்த உச்சத்தில்
கேட்காமல் போகும்
நல்லதொரு கவிதையைப் போல
சந்தடிகளுக்குள்
சமாதியாகிறது மௌனம்.

– இதுபோன்ற ஆழமான மௌனத் தெறிப்புகள் பல அக்கவிதையில்.

● ஆர். கவிதா, மதுரை – 3.

**? அமெரிக்கா போர் புரிந்து வரும் சூழலில் இந்திய ராணுவம் பாகிஸ்தான் ராணுவ முகாம்கள் மீது தாக்குதல் நடத்தியது சரியா...?**

! பயங்கரவாதத்துக்கு எதிராக அமெரிக்கா போர் தொடுத்து வரும் நிலையில் அதற்கு ஆதரவும் தரும் பாகிஸ்தான், காஷ்மீருக்குள் மட்டும் பயங்கரவாதிகள் மேலும் ஊடுருவ வசதி செய்து தருவது முறையா...!

● பி. ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி.

**? 'சித்தி'க்கும் 'அண்ணி'க்கும் என்ன வித்தியாசம் சார்...?**

! 'ஓ அண்ணி! எங்கள் அண்ணி.. உன் உள்ளம் வெள்ளிக் கிண்ணி!' என்று அண்ணிக்கு வரும் டைட்டில் சாங் போல் 'ஓ சித்தி! உன் புத்தி, மின்னும் கத்தி' என்று டைட்டில் சாங் வைக்கவில்லையே தவிர, சென்டிமென்ட் ஃபார்முலாவில் வித்தியாசம் எதுவுமில்லை.

● முகவை முத்துசாமி, தொண்டி.

**? எம்.ஜி.ஆர். விரும்பிய அ.தி.மு.க. எது?**

! வீச்சரிவாள் துணையுடன் வாக்குச் சாவடிகளையும் வாக்கு எண்ணிக்கை மையங்களையும் கைப்பற்றி கள்ளவோட்டுப் போட்டு, ஜனநாயக தேர்தல் முறையின் முகத்தில் கரியைப் பூசும் அ.தி.மு.க.வை அல்ல! – நிச்சயம்.

• பயணமும் பயனும்

ஆடை உலகில் அதிரடி பயணம் :

# சாகஸ ஷாப்பிங்!

சென்னையில் புடைவை விற்பனையில் இருப்பவர்களின் எண்ணிக்கையை அரசாங்கம் கணக்கெடுத்தால், அந்தக் கணக்கு நிச்சயம் பொய்யாகத்தான் இருக்கும். ஏனென்றால் இங்கு வீடுகளிலும் அலுவலகங்களிலும், விற்பனை வரி இலாக்காவுக்கு டிமிக்கி கொடுத்து, நூற்றுக் கணக்கானவர்கள் துணி வியாபாரத்தில் ஈடுபட்டிருக்கிறார்கள்.







தலைமைச் செயலகம், எழிலகம், டி.எம்.எஸ்., டி.பி.ஐ., சாஸ்திரி பவன் ஆகிய அலுவலக வளாகங்களில், வேலையோடு(?) துணி வியாபாரமும் சக்கை போடு போடுகிறது. சென்னை கிடங்குத் தெருவிலிருந்தோ, அல்லது





சூரத்திலிருந்தோ மொத்தமாக சேலைகள், ஷர்ட், பேண்ட் பிட்டுகளை வாங்கி தவணை முறையில் விற்கிறார்கள். சம்பளத் தினத்தன்று கறாராக பணத்தை வசூலித்து விடுகிறார்கள்.

குமார் பத்து வருடங்களாக தவணை முறையில் துணி வியாபாரம் செய்யும்

மாநில அரசு ஊழியரான ராணி (பெயர் மாற்றப்பட்டுள்ளது) "ஒரு புடைவைக்கு முப்பதிலிருந்து ஐம்பது ரூபாய் வரை லாபம் கிடைக்குங்க... என் பையனை பி.ஈ. படிக்க வைத்து, ஸ்டேட்ஸ் அனுப்ப முடிந்ததென்றால் அதற்கு கைகொடுத்தது துணி வியாபாரம்தான்" என்று வெளிப்



படையாகச் சொல்கிறார். காலையில் அலுவலகம் வந்தவுடன் செக்ஷன் செக்ஷனாகப் போய் வியாபாரத்தைத் துவங்கி விடுகிறார்கள் (கொஞ்சம் கிடுக்கிப் பிடி போடும் அதிகாரிகளுக்குச் சலுகை விலையில் புடைவைகளைக் கொடுத்துச் சமாளிக்கிறார்கள்.)



இன்று ஹோட்டல் பிஸினஸுக்கு அடுத்தபடியாக அதிக லாபம் கொடுக்கும் தொழில் துணி வியாபாரம்தான். இங்கு நம்மை ஏமாற்றும் சாகசங்கள் நிறையவே இருக்கின்றன. ''என்னங்க... இதே டிசைன்ல தி.நகர் கடையில் பார்த்தேன். 200 ரூபாய்தான்... நீங்க 600 ரூபாய் சொல்றீங்களே?'' என்று மயிலாப்பூர் கடையில் ஒருவர் மல்லுக்கட்டினால் ஆச்சரியப்பட வேண்டியதில்லை. அது உண்மைதான். தரத்தில், வண்ணத்தில், டிசைனில் துணியும் வேறுபாடு கண்டுபிடிக்காத வகையில் ஒரே மாதிரியான குறைந்த விலையிலும் அதிக விலையிலும், சேலைகள் இருக்கின்றன.




''ஒரு உரிமையாளர் நினைத்தால் மட்டுமே தன் கஸ்டமருக்கு நல்ல தரமான சரக்கைக் கொடுக்க முடியும். சில கஸ்டமர்கள் மிக புத்திசாலித்தனமாக நடப்பது போல் சேல்ஸ் பெண் எடுத்துப் போடும் தரமான துணிகளையெல்லாம் ஒதுக்கி விட்டு, ஏதோ ஒன்றை செலக்ட் செய்வார். சலித்துப் போன விற்பனையாளரும் ஒன்றும் சொல்ல மாட்டார். இறுதியில் ஏமாறுவது வாடிக்கையாளரே. எனவே விற்பனையாளரை நம்புங்கள். அதிலும் சிறிய கடை என்றால் உரிமையாளரே உங்களை நேரிடையாக கவனிக்கும் வாய்ப்பு இருக்கிறது'' என்கிறார் மயிலாப்பூர் பி.எம். சில்க்ஸ் சந்திரசேகர்.

கபாலீஸ்வரர் கோயிலுக்கு வரும் டூரிஸ்டுகள் பி.எம். சில்க்ஸ் கடைக்கும் அப்படியே ஒரு விஸிட் அடிக்கிறார்கள். ''சிந்தடிக் சேலைகளில் மட்டுமா ஏமாறுகிறார்கள். காஞ்சிபுரம் பட்டு என்ற பெயரில், துணி உலகில் பலர், பொது மக்கள் காதுகளில் பூ சுற்றிக் கொண்டிருக்கிறார்கள். தரமற்ற ஜரி, பட்டு இழையுடன் ரயான் அல்லது சைனா சில்க் இழை கலப்பு, ஒன்று அல்லது இரண்டு இழை முறுக்கை, மூன்று எனச் சொல்வது, இப்படிப் பல தகிடுதத்தங்கள் பட்டு விற்பனையில் இருக்கின்றன. பட்டுச் சேலை வாங்கும் போது கவனிக்க வேண்டிய முக்கிய விவகாரம் அதன் எடை. 6000 ரூபாய் புடைவையை 2000 ரூபாய் என்றவுடன் வாய் பிளந்து செல்லும் கூட்டம், ஏமாற்றப்பட்டதைக் கண்டுபிடிக்க பல ஆண்டுகள் ஆகலாம்'' என்கிறார் சந்திரசேகர். சேலை விற்பனை தவிர ஜீன்ஸ், டீ-ஷர்ட் விற்பனை யிலும் சக்கை போடு போடுகிறது பி.எம். சில்க்ஸ்.

எளிய, நடுத்தர மக்களை தி.நகருக்கு திசை திருப்பியதில் சரவணா ஸ்டோர்ஸுக்கு, பெரிய பங்கு இருக்கிறது. ''வட மாநிலங்களில் இருந்து நேரிடையாக கொள்முதல் செய்து எங்கள் லாபத்தைச் சுருக்கி விற்பதால்தான் மக்கள் எங்களை ஆதரிக்கிறார்கள்'' என்கிறார் செல்வரத்தினம். சரவணாவில் ஒருவர் நுழைந்து விட்டால், எதை யாவது வாங்கிக் கொண்டுதான் வெளியே


• சந்திரசேகர்

வர வேண்டும். அந்த அளவு வாடிக்கையாளரைக் கவரும் வண்ணம் ஏகப்பட்ட டிசைன்களில் சேலைகள், ரெடிமேட் உடைகள் குவிந்துள்ளன.



"துணி வாங்கி, டைலருக்கு அறுபது ரூபாய் கொடுத்து தைப்பதற்கு பதில், மலிவாக முப்பதே ரூபாயில் நல்ல சட்டையாக வாங்கிச் செல்கிறார்கள். மாறாக பெண்கள் இப்போது சுரிதார் ரெடிமேட் வாங்குவதைத் தவிர்த்து துணி வாங்கித் தைக்க விரும்புகிறார்கள். 'பட்டுப் புடைவைகளை எங்கள் சொந்தத் தறியில் தயாரிக்கிறோம்' என்று சிலர் சொல்கிறார்கள். அது ஹம்பக். சொந்தத் தறி வைத்து தேவைகளை ஈடுகட்ட முடியாது" என்கிறார் செல்வரத்னம்.


• செல்வரத்னம்




• பாரஸ்மல்

" 'சரவணா ஸ்டோர்ஸ்' கிளைகளைத் திறக்குமா?"

"நிச்சயமாக திறக்காது. ஏனென்றால் பல கிளைகளைத் திறந்தால் இப்போது போல, மக்களைத் திருப்திபடுத்த முடியாது."


• சாகுல்ஹமீது

இன்று இந்தியாவிலேயே துணி சில்லறை வியாபாரத்தில் முதலிடம் பெறுவது தி. நகர் மார்க்கெட்தானாம். "என்றைக்கும் பட்டுக்கு என்று ஒரு தனி இடம், நமது பெண்கள் மத்தியில் உண்டு. 'ஹம்சத்வனி' என்ற வரிசையில் 32 வகையான காஞ்சிப் பட்டுச் சேலைகளை அறிமுகப்படுத்தியிருக்கிறோம்." என்றார் போத்தீஸ் உரிமையாளர் ரமேஷ்.


• மௌலானா

போத்தீஸ்காரர்கள் தமிழ்நாட்டின் தெற்குப் பகுதியில் கோலோச்சிக் கொண்டிருப்பவர்கள். தி. நகரிலிருந்து சில வியாபாரிகள் திருநெல்வேலியில் போய் குதித்த போது, "அப்படியா சேதி... உங்க பேட்டைக்கே வந்து உங்களை ரவுண்டு கட்டுகிறோம்" என்று தி.நகருக்கு வந்து சவால் விட்டுக் கொண்டிருக்கிறது போத்தீஸ்.

ஆனால் இந்த வருட தீபாவளிக்கு தி. நகரை கலக்குபவர்கள் சென்னை சில்க்ஸ் தான். "எல்லா கால்களும் சென்னை சில்க்ஸ் நோக்கியே" என்று தைரியமாகச் சொல்லலாம். அந்த அளவுக்கு கோடிக்கணக்கில் செலவழித்து விளம்பரம் செய்திருக்கிறார்கள். "எங்கள் சரக்கைப் பற்றி நான் பேசுவதை விட வாங்கும் பொது மக்களிடம் விசாரித்துப் பாருங்கள்" என்று அடக்கத்துடன் சொல்லும் உரிமையாளர் மாணிக்கம், கோவையில் வெற்றிக்கொடி நாட்டியவர்.

தி. நகரை விட்டால், அடுத்து சில்லறை வியாபாரத்தில் கொடி பறப்பது புரசைவாக்கம். இங்கு மதார்ஷா நிறுவனத்துக்குப் போட்டியில்லை. இந்தத் தீபாவளிக்கு 'மின்னலே', 'டும், டும், டும்' சேலைகளை அறிமுகப்படுத்தியிருக்கிறார்கள். விலை முந்நூறுக்குள்தான். இது தவிர, 'தாமினி, ராதா ருக்மணி, ஜோதிகா (விலை ரூபாய் 649தான்) லேடி கேப்டன் என்று புதிய வரிசை சேலைகள் "நடுத்தர மக்கள் எங்கள் கடையை பொக்கிஷமாக நினைக்கிறார்கள்" என்கிறார் உரிமையாளர்களில்

ஒருவரான அன்வர்.

அதே புரசைவாக்கம் பகுதியில் நடைபாதை துணிக் கடைகளும் மக்களால் மொய்க்கப்படுகின்றன. குழந்தைகளுக்கான ரெடிமேட் துணி வகைகள் விற்கும் செல்வம் "பெரிய கடையில் வாங்கியது போக எங்களிடமும் பர்சேஸ் செய்பவர்கள் இருக்கிறார்கள். நாங்கள் எல்லோரும் ஒரே இடத்தில்தான் மொத்தமாக சரக்கு வாங்குகிறோம்; குறைந்த லாபத்துக்கு விற்கிறோம்" என்கிறார். பாண்டிபஜார் நடைபாதைகளில் முப்பது ரூபாய்க்கே நைட்டிகள் கிடைக்கின்றன.

"தி. நகரில் புடைவை வாங்கினாலும் மேட்சிங் வாங்குவதற்கு எங்களிடம் வந்து விடுவார்கள் எங்கள் கஸ்டமர்கள்" என்கிறார் புரசை 'ரோஜா கட்பீஸ்' சாகுல் ஹமீது. இவரது கடையில் கடந்த சில வருடங்களாக பிரமாதமாக விற்பது ரெடிமேட் ரவிக்கைகள்தான். நாற்பது ரூபாயிலிருந்து எண்பது ரூபாய் வரையில் ரெடிமேட் ரவிக்கைகள் உள்ளன.



ஆண்கள் ஆடையுலகம் எப்படியிருக்கிறது? 'தலை தீபாவளி' புது மாப்பிள்ளைக்காக, குமரனிலும், போத்தீஸிலும், தமது பட்ஜெட்டை ஒட்டி, பட்டு வேஷ்டிகளைத் தேடும் மாமனார்கள் நிறையவே கண்ணில் படுகிறார்கள். "முன்பெல்லாம் இதுபோன்ற ஷோ-ரூம்களுக்கு வர நடுத்தர மக்கள் நிறையவே தயங்குவார்கள். இப்போது நிலைமை மாறி விட்டது. சரமாரியான கிரெடிட் கார்டுகளுடன் பெரிய ஷோரூம்களுக்கு ஷாப்பிங் வருகிறார்கள்" என்கிறார் அண்ணா நகர் இண்டிகோ ஷோரூம் மௌலானா.

'வடக்கு வாடுகிறது' என்பது சென்னை துணி வியாபாரத்திற்குப் பொருத்தமாக இருக்கும். தென்சென்னை வியாபாரம் சுறுசுறுப்பாக இருக்க வடசென்னையில் கொஞ்சம் மந்தம்தான். அதிலும் மொத்த வியாபாரம் நடக்கும் இடமான கொடவுன் தெரு டல்லடிக்கிறது.

"முன்போல பிஸினஸ் இல்லே சார்... எல்லா மில்களும் கடைகளுக்கே நேரிடையாக சரக்கு அனுப்பறாங்க. சின்னச் சின்ன கடைக்காரங்க, கிராமங்களில், சைக்கிளில் துணி வியாபாரம் செய்வோர் ஆகியோர் தான் இப்போது இந்தத் தெருவில் பர்சேஸ் செய்கிறார்கள்" என்கிறார் மொத்த வியாபாரி பாரஸ்மல். கடந்த சில வருடங்களாக கிடங்குத் தெரு வியாபாரம் பாதியாகக் குறைந்து விட்டதாகச் சொல்கிறார் பார்வதி டெக்ஸ்டைல்ஸ் செல்வம். "பலர் துணி வியாபாரத்தை விட்டுட்டு வேறு தொழிலுக்குப் போயிட்டாங்க" என்கிறார் அவர்.

இந்தத் தொழிலில் அகலக்கால் வைத்து மாட்டிக் கொண்டவர்களும் உண்டு. பாண்டி பஜாரில் ஆசியாவிலேயே மிகப் பெரிய துணிக் கடை என்று விளம்பரப்படுத்தப்பட்டு துவக்கப்பட்ட ஷோரூம் சில வருடங்களில் மூடப்பட்டு விட்டது. வடசென்னையில் வளமாக இருந்த சௌந்தரபாண்டி ஸ்டோர்ஸ்-ம் மூடப்பட்டு விட்டது.

"கடந்த முப்பது வருடமாகப் போராடி வெற்றி பெற்றிருக்கிறேன். அப்போது போராடியதைக் காட்டிலும், அந்த வெற்றியைத் தக்கவைத்துக் கொள்ள, இன்னமும் வேகமாகப் போராட வேண்டியதாக இருக்கிறது" என்கிறார் 'சரவணா' செல்வரத்னம்.

"மனிதனுடைய அத்தியாவசியத் தேவைகளில் உடைக்கு இரண்டாவது இடம் கொடுத்திருக்கிறார்கள். எனவே இந்த வியாபாரத்தில் நீடித்து நிலைக்க வேண்டுமென்றால் முதலிடம் கொடுக்க வேண்டியது மக்களின் நம்பிக்கையைப் பெறுவதற்குத்தான்" என்று சொல்கிறார் பி.எம். சில்க்ஸ் சந்திரசேகர்.

— **ஸ்ரீநிவாஸன்**

படங்கள் : **ராஜன்**

ரிமோட்

# அறியாமலே தெளித்த பன்னீர்!

பிரச்னைகளின் அடிப்படையில் இல்லாமல் தனி நபர்களின் செல்வாக்கை வைத்துத்தான் உள்ளாட்சித் தேர்தல்கள் நடைபெற்றிருக்கின்றன. 'Voters don't decide issues; they decide who will decide issues' என்பது பிரத்யட்சம். கைவசம் ஒரு சேனல் இருக்கும் தைரியத்தில் அவரவர் அவரவர் இஷ்டத்துக்கு விமரிசனங்களை வழங்கிக் கொண்டிருந்தார்கள். சில, hit the bull's eye. வேறு சில backfired. உதாரணமாக –

பெரியகுளம் நகராட்சி மன்றத் தலைவர் தேர்தலில் அதிமுக தோல்வியடைந்தபோது, 'முதலமைச்சர் பன்னீர்செல்வத்தின் சொந்த ஊரான பெரியகுளத்தில் அதிமுக தோல்வி' என்று திரும்பத் திரும்பச் சொல்லி மகிழ்ந்தது 'ஸன்'. அப்படியானால், தேர்தலுக்குச் சில நாட்களுக்கு முன் சொந்த ஊருக்குச் சென்ற பன்னீர்செல்வம் எந்தப் பந்தாவும் காட்டவில்லை, எந்த அதிகாரியையும் மிரட்டவில்லை, எந்தப் பதவி துஷ்பிரயோகமும் செய்யவில்லை என்றல்லவா தோன்றுகிறது! இப்படியொரு நற்சான்றை வழங்கலாமா 'ஸன்'?

**வினோத்**

சரஸ்வதி பூஜையன்று சிறப்பு நிகழ்ச்சியாக எம்.எஸ்.ஸைப் பற்றி பிலிம்ஸ் டிவிஷன் தயாரித்த டாகுமென்டரியைப் 'பொதிகை'யில் காட்டினார்கள். A Legand for Ever என்பது தலைப்பு. Legend என்று குறிப்பிடும் அளவுக்கு இமாலயம் புகழ் பெற்றுள்ள ஒருவரின் சிறப்புக்களைச் சொல்லி முடிக்க இரண்டு மணி நேரம் போதாதாகையால் எங்கே ஆரம்பித்து, எதை உள்ளடக்கி, எப்படிக் கொடுப்பது என்பதைத்









அவருடைய பக்தி பாவத்தைத் திரையிலே கொண்டு வருவது கடினமான காரியம். அதை ஈடு செய்யும் நோக்கத்துடன் 'சேவாசதனம்' முதல் 'மீரா' வரையில் சினிமாக்களிலிருந்து காட்சிகளைச் சேர்த்திருக்கிறார்கள். எல்லாமே அற்புதமான காட்சிகள்தான். ஆனால் அவர் ஓர் இசைப்புயல் என்பது மறைந்து நடிகை என்பதை நினைவூட்டும்படி நிறைய இடம் ஆக்கிரமித்துக் கொண்டுவிட்டது. இருந்தாலும் 'காற்றினிலே வரும் கீதம்' தரும் தாலாட்டையும் 'கருணையே புரிவாயோ, கதியிலேன் கிரிதாரி'யின் மன்றாடலையும் கேட்டுப் புளகாங்கிதம் அடைய முடிகிறது என்ற வகையில் இதுவும் ஒரு நல்ல காரியம்தான்.

காலத்தை வென்ற எம்.எஸ்.ஸின் சங்கீதம் பல கட்டங்களில், பல மொழிகளில் தேசமெங்கும் வியாபித்ததை இந்த டாகுமென்டரி காட்டியிருக்கிறது. அந்தக் கீதங்களில் மெய்மறந்திருக்கும் சமயம், பள்ளிச் சிறுமி போன்ற குழந்தைக் குரலில் அவர் பாடிய கிராமபோன் பிளேட்டை ('மரகதவடிவு') முழுதாக ஒலிபரப்பி ஏன் திசை திருப்பினார்களோ!

எம்.எஸ்.ஸிடம் நேரடிப் பேட்டியாகப் பல விஷயங்களைக் கொண்டு வந்திருக்கலாம். எப்போதுமே தம்மை முன்னிலைப்படுத்திக் கொள்ள விரும்பாதவராக அவர் இருப்பதால் அது முடியவில்லை போலும். வேறு சிலர் அவரைப் பற்றிப் பேசியிருக்கிறார்கள். ஆனால் அப்படிப்பட்ட சர்டிபிகேட்டுகளுக்கு அப்பாற்பட்டவர் எம்.எஸ்.

இசையரசியின் முன்னேற்றத்துக்குக் கணவர் சதாசிவமும் கல்கி கர்நாடகமும் ஆற்றிய பங்கு மகத்தானது. அதை முழுமையாக வெளிப்படுத்தியிருக்கிறார்கள் என்று சொல்வதற்கில்லை. அதேபோல், மீராபஜன் போன்ற பாடல்களைப் பிரபலப்படுத்தி, நாட்டின் ஒருமைப்பாட்டு உணர்வுக்கு எம்.எஸ். வலு சேர்த்ததையும் அழுத்தமாகச் சொல்லத் தவறிவிட்டார்கள். ஒருவேளை பின்னணியில் ஒலிக்கும் ஆங்கில வர்ணனையில் அவை இருக்கிறதோ என்னவோ, ஒலிப்பதிவு துல்லியமாக இல்லாததால் தெரியவில்லை. 'பொதிகை'யில் காட்டிய போதாவது தமிழ் வாக்கியங்களைப் பதிப்பித்திருக்கலாம். ஒளிப்பதிவுகூடப் பல இடங்களில் வீடியோவில் படமெடுத்து இரண்டாம் பதிப்புப் போட்ட மாதிரி மசமசவென்று இருக்கிறது.

'இளம் கலைஞர்களுக்குச் சாதகமும் தெய்வ பக்தியும் முக்கியம்' என்று எம்.எஸ். வற்புறுத்தியிருக்கிறார். வாயால் சொல்வதை வாழ்ந்து

தீர்மானிக்க முடியாமல் சிரமப்பட்டிருக்கிறார்கள் என்று எண்ணத் தோன்றுகிறது.

பூனாவில் எப்போதோ நடைபெற்ற ஓர் இசை நிகழ்ச்சியின் படத் தொகுப்பு கைவசம் இருக்கவே அதை மையமாக வைத்துக்கொண்டு மற்றப் பகுதிகளை இணைத்திருக்கிறார்கள். More or less a combination of clippings and comments எனினும் மதுரைத் திருக்குளத்தின் ஆழமும் ஸ்ரீரங்கம் கோபுரத்தின் வீச்சும் ராஜபுதனக் கோட்டைகளின் அழகும் காசி படித்துறைகளின் கம்பீரமும் எம்.எஸ்.ஸின் இசையிலே கலந்திருப்பதை ஆங்காங்கே காண முடிகிறது. தனக்குத் தானே லயித்துச் சுகிக்கும்

காட்டுகிற அவருடைய message நாளைய பாடகர்களுக்குப் போய்ச் சேரும்படி செய்திருக்கிறது இந்த டாகுமென்டரி. எனவே அந்த ஆர்வத்தையும் பணியையும் பாராட்டி மற்றதை மறப்போம். 'Don't judge those who try and fail; judge only those who fail to try' என்பது ஆன்றோர் அறிவுரை.

"கொண்டு வந்திருந்த நாலு கிலோ புளியோதரை மூட்டையை அபாயச் சங்கிலியில் தொங்க விட்டுட்டான், அந்த விவரம் தெரியாத ஆள். ரயில் நின்னிட்டுது!"

– அரட்டை அரங்கத்தில் ஒருவர்.

"எங்கானும் புளியோதரை மூட்டை நாலு கிலோ இருக்குமா?"

– விசு

"நாலு நாளாய்க் கட்டி வச்சிருந்த புளியோதரையாச்சே!"

– பதில்

Old wood best to burn, old wine best to drink and old friends best to trust என்றார் பிரான்ஸிஸ் பேகன். பழைய புளியோதரைக்கும் அதே மகிமை!

சீரியலின் லட்சணம் சொதப்பல் என்ற மரபை முறியடித்துவிட்டது 'கிருஷ்ணதாசி'. நூறு கால் நண்டு போலக் கண்ட கண்ட திசைகளில் கசாமுசாவென்று அலையாமல் கனவாக நடை போட்டு, அழகாக முடித்திருக்கிறார்கள்.

வாழ்க்கையில் எல்லாவற்றையும் இழந்துவிட்ட விரக்தியுடன் ஊரை விட்டுக் கிளம்பும் மனோன்மணி நளினியை, ஆரம்பம் முதல் பகைமை பாராட்டி வந்த ருத்ரமூர்த்தி ஜெமினி கையில் குழந்தையுடன் தடுத்து நிறுத்தி, மன்னிப்புக் கேட்டு, திரும்ப அழைத்துச் செல்லும் postitive note மனத்தில் பதியும் வண்ணம் அமைந்துள்ளது. Show me, don't tell me என்று ஒரு ஹாலிவுட் டைரக்டர் சொன்னார். முடியும் தருவாயிலுள்ள மற்ற மெகா சீரியல்களுக்கு 'கிருஷ்ணதாசி' ஒரு வழிகாட்டி.



"ஏன் அந்தப்
புடைவைக்
கடையில்
அவ்வளவு
கூட்டம்?"





"ஒவ்வொரு வாடிக்கையாளருக்கும்
டெய்லி மூணு ஊழியர்களை
ஷிப்ட் முறையிலே
வேலைக்கு
வைச்சிருக்காங்களாம்."

என் பொண்ணுதான்.
ரொம்பக்
கூச்ச சுபாவம்





"எல்லாவிதத்திலேயும்
பொருத்தமான
மாப்பிள்ளையைத்
தேடிப் பிடிச்சும் ஏன்
நம்ம ப்ரியாவுக்குக்
கல்யாணம் தள்ளிப்
போகுது?"
"கல்யாணப்
புடைவைக்குப்
பொருத்தமான மாட்ச்சிங்
ரவிக்கை கிடைக்கலியாம்."







உடனே
கல்யாணம்
செய்துக்கிட்டு
யு.எஸ்.
திரும்பணுமாம்.





''மேடம், கனவு சீன்ல மட்டும் புடைவையில வர்ற மாதிரி எடுத்திருக்கோம். ப்ளீஸ்.. அட்ஜஸ்ட்.''

# அநியாயமா இருக்கே!

''பரவாயில்லையே. உன் டெய்லர் சொன்ன தேதிக்கு, தைச்சுக் கொடுத்துடுவாரா?''

''ஆமாம். ஆனா மாசம்தான் கொஞ்சம் முன்னே பின்னே இருக்கும்.''





''இதுதான் லேட்டஸ்ட் ஃபாஷனாம். அநியாயமா இருக்கு இல்லே?''



ஜோக்ஸ் : குல்லு
படங்கள் : நடனம்



தழை

வம்பு

தூசு மடிவை

வாலிது

படாம்

வார்

பூங்கரை நீலம்

வடகம்

கோதை

சேலம்

சிதர்வை

மெய்ப்பை

கருவி

குப்பாயம்

மீக்கோள்

தலைக்கீடு

வார்

மாசுணி

அறுவை

பக்குடுக்கை

துகில்

சீரை

மடி

வெளிது

இதெல்லாம் என்ன?
ஆடையைக் குறிக்க தமிழர்கள் பயன்படுத்திய சொற்கள்.

- க. அனந்த பத்மநாபன்



# சாம்ராட் அசோகா

'இந்திய சினிமா உலகத் தரத்துக்கு உயருமா?' என்ற உருப்படியான விவாதத்துக்குக்கூட வழி இல்லாத தேசத்திலிருந்து, சர்வதேச தரத்தில் ஒரு படத்தைத் தந்திருக்கிறார் சந்தோஷ்சிவன். உலகத்தரம் என்று நாம் குறிப்பிடுவது பிரமாண்டத்தையும், தொழில்நுட்பத்தையும் மட்டுமல்ல, திரைக்கதையையும்தான்.

'சாலையோரங்களில் மரங்களை நட்டு குளங்களை வெட்டினார், மாமன்னர் அசோகர்' என்று ஆறாம் வகுப்பு பாடப் புத்தகத்தில் படித்த இந்த அசோகனின் வாழ்க்கையில் வேறென்ன சுவாரசியம் இருந்துவிடப் போகிறது என்று ரசிகன் இறுமாந்து வீட்டில் இருந்துவிட முடியாது. காதல், பாசம், வீரம், விவேகம், ஏமாற்றம், துரோகம், வெற்றி, வீழ்ச்சி என அசோகனின் அத்தனை முகங்களையும் அடையாளம் காட்டும் செல்லுலாய்டு காவியமாகவே செதுக்கப்பட்டிருக்கிறது.

அசோகா என்ற டைட்டில் ரோலைத் தாங்கி வரும் ஷாருக்கைத் தவிர அந்தப் பாத்திரத்தில் வேறொரு நடிகரை இனி நினைத்துப் பார்க்க முடியாது. தாயை பாசமாய் கொஞ்சும்போது சின்னக் குழந்தையாய் மாறி விடுகிற ஷாருக், அதிகாரப் போட்டியில் தம்பி சுசீமுடன் மோதுகிறபோது எரிமலை. கலிங்க இளவரசி கார்வகியின் இதயத்தில் இடம் பிடிக்கிறபோது பனிக்குழைவாய் உருகிவிடும் ஷாருக், அந்தக் காதல் கைவிட்டு போய் நொறுங்கும்போது சராசரி மனிதன்.

அதிகாரப் போட்டியில் அசோகரோடு மல்லு கட்டும் அவரது தம்பி சுசீமாகவே மாறிவிட்டிருக்கிறார் நம்மவர் அஜீத்.

மகத சிம்மாசனத்தை வாஞ்சையோடு தனிமையில் தடவிப் பார்க்கிறபோதாகட்டும். கொல்ல வரும் அண்ணன் அசோகனைப் பார்த்து ''உன்னை என்னால் கொல்ல





முடியாது. நீ பந்த பாசத்திற்குக் கட்டுப்பட்ட பலவீனன்" என்று சாவின் விளிம்பில் நின்று விவேகமாய்ப் பேசுகிறபோது ஆகட்டும், அஜீத் அசராமல் நடித்திருக்கிறார்.

கலிங்க இளவரசியாக கரீனா. கரிஷ்மாவுக்குப் பிறகு கஃபூர் குடும்பத்திலிருந்து இன்னொரு 'சென்சேஷனல்' கவிதை.

திரைக்கதையைத் தாங்கிப் பிடித்திருக்கும் பல துணைக் கதாபாத்திரங்களில், அசோகரின் ஆத்மநண்பராக நடித்திருக்கும் டேனி, பன்னிரண்டு வயது கலிங்க இளவரசனாக உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் மாஸ்டர் சூரஜ், இருவருக்கும் விருது கிடைத்தால் வியப்பில்லை.

சாபுசிரிலின் கலை இயக்கமும், அனுவர்த்தனின் காஸ்ட்யூமும் காலச் சக்கரத்தை, பின்னோக்கிச் சுழல வைத்திருக்கின்றன. இவற்றை காட்சிகளில் மொழி பெயர்த்திருக்கும் சந்தோஷ் சிவனின் ஒளிப் பதிவை ரெக்கார்ட் பிரேக் என்றே எடுத்துக் கொள்ளலாம்.

கலிங்கத்துப்பரணி என்றொரு சங்க இலக்கியமே தோன்றுகிற அளவுக்கு குருதி ஆறு ஓடிய கலிங்கப்போரை பார்க்கச் சகிக்காத வன்முறை வெறியாட்டமாக காட்டாமல், காட்சிகளை, நொடிக்கு நொடி மாற்றி காட்டியிருக்கும் ஸ்ரீஹர் பிரசாத்தின் படத்தொகுப்பு படம் முழுக்க பெரும் பங்கு வகித்திருக்கிறது. ஒவ்வொரு காட்சிக்கும் உயிர் கொடுத்திருக்கும் சந்தீப் சௌதாவின் பின்னணி இசையோ, படத்தை இன்னும் ஒரு படி உயர்த்திவிட்டது.

ஐம்பது கோடியில் மருதநாயகக் கனவு காணும் கமல்ஹாசன்களுக்கு மத்தியில் வெறும் பதினைந்து கோடி ரூபாயில் சர்வதேச தரத்திற்கு ஒரு படம் சாத்தியமா என்றால் சாதித்துக் காட்டியிருக்கிறார் சந்தோஷ் சிவன்.

— விஷ்வல்தாசன்

○ பெயில் ○ ஜஸ்ட் பாஸ்

○ ஆவரேஜ்

○ அபவ் ஆவரேஜ்

● டிஸ்டிங்ஷன்

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 330/-; Overseas : Rs. 2000/- (Air Mail)
[illegible] Subscription : India : Rs. 165/-; Overseas : Rs. 1000/- (Air Mail)

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / Chief PMG-141 / 2001 *
Licensed to post without prepayment under PMG's Licence No. WPP 37 * Registered as a Newspaper in Srilanka